# இரட்டைக் கதைகள்

(வெள்ளிவிழா வெளியீடு)








கலைமகள் காரியாலயம்
சென்னை-4

## முன்னுரை

**சி**ல சமயங்களில் ஒரு கதையின் தலைப்பைப் பார்த்த வுடன் நாம் கதை இப்படித்தான் ஓடும் என்று நினைப் போம். ஆனால் படித்துப் பார்த்தால் அது வேறு போக் கிலே போயிருப்பதைக் கண்டு வியப்போம். நாம் நினைத்த போக்கும் பொருத்தமாக இருக்கும்; எழுதிய வரின் கற்பனையும் பொருத்தமாக இருக்கும்.

பழைய காலத்தில் புலவர்களுக்குச் சமஸ்யை கொடுப்பார்களாம். ஒரே கருத்தை வைத்துப் பாடச் சொன்னால் ஒவ்வொருவரும் வெவ்வேறு வகையில் பாடுவார்கள். ஒவ்வொன்றிலும் ஒவ்வொரு சுவை இருக்கும்.

இந்தக் காலத்தில் இலக்கிய பீடத்தை உரை நடை ஆள்கின்றது. உரை நடையிலும் சிறுகதை தலை சிறந்து நிற்கிறது. சிறுகதைகளில் பழையகால முறையைக் கொண்டு வந்து, சமஸ்யை கொடுத்தால், எழுத்தாளர்கள் சுவையாக எழுதுவார்கள் என்று எண்ணி,ஒரே தலைப்பை, இருவேறு எழுத்தாளர்களுக்குக் கொடுத்து, எழுதச் சொன்னோம். அந்த இரண்டு கதைகளையும் கலை மகளில் ஒரே இதழில் வெளியிட்டோம். ஒரே தலைப்பில் வரும் இரண்டு கதைகளின் மாலை ஆகையால் இரட்டைக்

கதைகள் என்று அந்த வரிசைக்குப் பெயர் கொடுத்தோம்.

குங்குமச்சிமிழில் தொடங்கிக் கொட்டு மேளத்தில் நிறைவேறியது இந்தத் தொடர். 1951-ஆம் ஆண்டு, ஏப்ரல் மாதத்தில் முதல் இரட்டை பிறந்தது. ஒரு மாதமும் விடாமல் வந்து, செப்டம்பர் மாதத்தில் ஆறுவது இரட்டை தோன்றியது. பன்னிரண்டு கதைகளைப் பன்னிரண்டு எழுத்தாளர்கள் எழுதினார்கள்.

ஒவ்வோர் இரட்டையும், தலைப்பு ஒன்றாக இருந்தாலும் நடையும் உடையும் கருவும் உருவும் வெவ்வேறாக அமைந்திருக்கின்றன. ஒரே தலைப்பு, இரண்டு விதமான கற்பனையை எழச்செய்தது ஆச்சரியம் அன்று; இருபது விதமான கற்பனைகளை எழுப்புமே!

இந்தக் கதைகள் பல கதைகளை எழுதி, மெருகேறிய கைகள் எழுதியவை. ஆதலினால் மிகவும் சுவையுடைய உயர்தரக் கதைகள் என்று சொல்லவும் வேண்டுமா!

கி. வா. ஜகந்நாதன்.

10—4—57

ஆசிரியர்.

"உக்காராமல் தலைகீழே நிக்கச் சொல்றியா என்னை?" என்று சீறி விழுந்தாள் குந்தளம்.

"நன்னாத்தான் இருக்கு, போ!" என்று சொல்லிவிட்டு அம்மா, புடைவையை எடுத்து மடிக்கலானாள்.

குந்தளம் சோப்பை எடுத்துக்கொண்டு கிணற்றடிக்குப் போனாள். நுரைலயக் குழைத்து, கண்ணைக் கரிக்கும் வரையில் முகத்தில் சோப்பைத் தேய்த்துக்கொண்டாள். முழங்கை வரைக்கும் சோப்பு. நெற்றி, வகிடு, காது எங்கும் சோப்பு நுரை.

"குந்தளா!"

கண்ணைத் திறக்க முடியாமலே அவள் நிமிர்ந்து, தன்னை அழைத்த இந்துவைப் பார்த்து, சிறிது எரிச்சலுடன், "என்ன?" என்றாள்.

"குங்குமச் சிமிழை எங்கேடி வைத்தாய்?"

"எதுக்கு?"

"வேணும். அம்மா கேட்கிறாள்."

"எனக்குத் தெரியாது."

இந்து சிறிது நேரம் நிலைப்படி அருகிலேயே நின்று, மௌனமாகத் தன் சகோதரியைப் பார்த்துக்கொண்டிருந்தாள். குந்தளத்துக்கு எதனாலோ மனசு சரியாக இல்லை என்ற எண்ணம் அவள் நெஞ்சத்திலே ஓடிற்று.

வாளியில் இருந்த ஜலத்தை வாரி வாரி, அவள், சோப்புப் போனதும் போகாததுமாக முகத்தை அலம்பிக்கொண்டிருந்தாள். கண்ணை வழித்துத் துடைத்துவிட்டு அவள் பார்த்தபோது, இந்து இன்னமும் அப்படியே நின்றுகொண்டிருப்பதைக் கண்டாள்.

"ஏண்டியம்மா, நான் சொல்றது நம்பிக்கைப் படவில்லேயோ? நான்தான் பார்க்கவில்லே என்றேனே" என்ருள் மறுபடியும்.

இந்து, மளமளவென்று கிணற்றடிக்கு வந்தாள். குந்தளத்தின் கையைப் பிடித்துக்கொண்டு, "ஏன் குந்தளா, உனக்கு என்ன வருத்தம் என்னிடம்?" என்று கேட்டாள்.

அவள் கையைத் திமிறிக்கொண்டே, "கையை விடேன், சோப்புச் சரியாகப் போகல்லே. எனக்கு ஒரு வருத்தமும் இல்லே" என்ருள்.

"பொய்; இல்லாட்டா ஏன் இப்படி என்னவோ மாதிரி இருக்கிருய்?"

"என்ன மாதிரி இருக்கிறேன்?"

"என்னவோ மாதிரி, வருத்தமாய், கோபமாய்!"

"நீ தான்! உனக்குத்தான் கொம்மாளத்திலே ஒண்ணுமே புரியலே! நான் எப்போதும் போலத்தான் இருக்கேன்."

"எனக்கு என்னடியம்மா கொம்மாளம்?"

"யாருக்குத் தெரியும்? ஆம்படையான் வரச்சொல்லி எழுதியிருக்கான். போகப்போறே. கொம்மாளம் இல்லாமல் என்ன? அப்பா, அண்ணு எல்லாரும் உனக்குச் சிபாரிசுக்கு இருக்கா. வேறு என்ன? நான் சொல்றதுலே உனக்கு நம்பிக்கை எங்கிருந்து வரும்? பித்தல் குங்குமச் சிமிழ் எங்கே என்று என்னே வந்து கேட்கிருய்! எதுக்கு அது? யாருக்கு இங்கே வேணும் அது?"

"பின்னே, 'எதுக்கு' என்று கேட்டாயே; ஏன்?"

குந்தளம், முகத்தைத் தலைப்பால் துடைத்துக் கொண்டே, "கேட்டால் என்ன? வாய் தவறிக்கூடக் கேட்கப்படாதோ?" என்ருள்.

"எல்லாத்துலேயுமே வாய்த் தவறுதலா? அவரைப் போய் 'எழுதியிருக்கான், போயிருக்கான்' என்கிருயே; அதுகூட வாய்த் தவறுதலா?"

குந்தளத்துக்குச் சுருக்கென்றது. வட்டக் கரிய விழிகளால் நிமிர்ந்து ஒரு தடவை இந்துவைப் பார்த்தாள். "ஏன், சொன்னல் என்னவாம்? உனக்கு ஆம்படையான். நீ மரியாதையாகச் சொல்லணும். எனக்கு என்ன? நான் தாராளமாகச் சொல்லலாம். அதிலே ஒண்ணும் தப்பில்லே" என்று கூறிவிட்டு, அவள் சோப்பைப் பெட்டியில் வைத்துக்கொண்டு ஜலத்தை வடித்துவிட்டு உள்ளே போனுள்.

இந்து, சற்று நேரம்வரை அந்த இடத்தை விட்டு அசையவில்லை. 'பின்னே, ஏன் ஒரு இடமும் திகைய மாட்டேன் என்கிறது? எல்லாம் எண்ணத்துக்குத் தகுந்தாப்பலேதான். வந்ததெல்லாம் அதுதான் தட்டிப் போறது' என்று தனக்குள் ஒரு தடவை சொல்லிக்கொண்டாள்.

உள்ளே சென்றபோது குந்தளம், அவள் அம்மாவிடம் பேசிக்கொண் டிருந்தாள்; "அது இங்கிருந்த குங்குமச் சிமிழ்தானே? வீட்டில் இருந்ததுதானே? வீட்டிலே இவ ஒருத்திதாளு? எல்லாம் இவளுக்குத்தாளு? நான் ஒருத்தி இல்லையா? எனக்குன்னு ஒண்ணுமே வேண்டாமா? இவளுக்குக் கல்யாணம் ஆகிவிட்டது. இனிக் குழந்தை வேண்டும். அதுதானே?"

* * *

இந்துவுக்கு இப்பொழுதுதான் உண்மை புரிந்தது. தங்கையிடம் அவளுக்கு எந்த விதத்திலும் பொறாமையோ போட்டியோ இல்லை. இன்னும் சொல்லப்போனால் அவள் தங்கைக்காகத் தன்னிடம் இருப்பதை எல்லாம் கொடுத்து விடக்கூடத் தயாராக இருந்தாள். எவ்வளவோ செய்ய வேண்டும் என்றெல்லாம்கூட அவள் மனத்துக்குள்ளாகத் திட்டம் போட்டிருந்தாள். ஆனால் தன் மனசைத் திறந்து காட்ட அவளுக்கு லஜ்ஜையாக இருந்தது. சந்தர்ப்பமும் நேரவில்லை. புடைவை ஒன்று வாங்கினால், 'குந்தளத்துக்கு இது நன்றாக இருக்கும்' என்று அவள் எண்ணிக்கொள் வாள். ஒரு தடவை அதை வாயைவிட்டே தன் கணவ னிடம் சொல்லவும் சொன்னாள். 'உங்களுக்கும் அது எவ் வளவோ பெருமை. அங்கே இந்த மாதிரியெல்லாம் கிடையாது என்று நீங்கள் வாங்கி அனுப்பினதாக இருக் கட்டுமே. என்னிடம் பணம் இருக்கு. நான் தந்துவிடு கிறேன்' என்று சொன்னாள்.

அவள் மனசு அப்படிப்பட்டது. வீட்டில் இருந்த எந்தச் சாமானையும் அவள் தன் புக்ககத்துக்கு என்று எடுத்துக்கொண்டு போகவும் இல்லை. எல்லாம், அவ்வப் போது தேவைக்குத் தகுந்தபடி புதிதாக வாங்கியவை. வெள்ளிப் பாத்திரம், வெண்கலப் பாத்திரம் எல்லாம் புதியவை. அப்படி இருக்கும்போது இந்தக் குங்குமச் சிமிழ், பார்க்கப்போனால் எவ்வளவு அற்பமானது! புரா தனமாக வீட்டில் இருந்த சிமிழ் அது. 'இதை வேணு மானால் எடுத்துக்கொண்டு போயேண்டி' என்று அம்மாள் முன் தடவை சொன்னாள். "நீ சொன்னாலும் சொல்லா விட்டாலும் நான் அதை இந்தத் தடவை எடுத்துக் கொண்டுதான் போகப்போகிறேன்" என்றாள் இந்து. எடுத்துக்கொண்டு போகவேண்டும் என்று அவள் நினைத்ததற்குப் பல காரணங்கள் உண்டு. அதை அவள்

யாரிடமும் சொல்லத் தயாராக இல்லை. பெற்ற தாயிட மும் கொண்ட கணவனிடமும் அதைச் சொல்ல அவளால் முடியவில்லை. 'சீ சீ, சொன்னால் எத்தனை வெட்கக்கேடு!' என்று அவளுக்குப் பட்டது.

* * *

'கல்யாணமாகி ஐந்து வருஷகாலம் ஆகப்போகிறது. இன்னும்...' என்று யாராவது முணுமுணுக்கும்போதெல் லாம் அவளுக்கு அந்தக் குங்குமச் சிமிழ் நினைப்புத்தான் வரும். அது ஒரு காரணம்.

மற்றொரு காரணம் :

அதுவும் அவளுக்கு அந்தரங்கமானதுதான். அந்தச் சிமிழை எடுத்துக்கொண்டுதான் அவள் ஒரு தடவை மஞ்சள் குங்குமத்துக்குப் போனாள். அப்போதுதான் அவனைப் பார்த்தாள். பிறகு கல்யாணப் பேச்சு நடந்தது. கல்யாணமும் ஆயிற்று. ஆகுமா, நடக்குமா என்று ஆகி விட்டது அவள் கல்யாணம். அவளுடைய ஜாதகம் ஏதோ தோஷமுள்ளது என்று ஒவ்வொன்றாகத் தட்டிக் கொண்டே வந்தது. அப்போதெல்லாம் அந்தக் குங்குமச் சிமிழ், அம்மாவின் பெட்டியில் ஒரு மூலையில், பாசி பிடித் துக் களிம்பேறிக் கிடந்தது. அவள் எஸ். எஸ். எல். ஸி. வரை படித்திருந்தாள். என்ன இருந்தாலும் படித்து, உத்தியோகத்துக்குப் போய், கல்யாணக் கவலையை மறந்து விடுவதற்காக அவள் படிக்கவில்லை. கையைப் பிடிக்கப் போகும் கணவனுக்கு அநுகூலமாக, பெருமையாக இருப்ப தற்காகவே அவளைப் படிக்க வைத்தார்கள். அது அவளுக் கும் தெரியும். அதனால் கல்யாணம் ஆகவில்லையே என்ற குறை, எல்லாரையும்விட அவளுக்கு அதிகமாகத்தான் இருந்தது. என்னவோ பேச்சு வாக்கில், 'அந்தச் சிமிழை எடேம்மா. அதற்கு மெருகு போட்டு, உபயோகத்தில்

வைத்துக்கொண்டால் என்ன?' என்று அதைக் குடைந்து எடுத்தாள். கிழங்குமாதிரி நல்ல வெள்ளியில் செய்த சிமிழ் அது. அந்தக்காலத்துப் பாணியில் இருந்தது. இருந்தால் என்ன? இன்றுதான் மறுபடியும் பழைய நாகரிகம் திரும்பிக்கொண் டிருக்கிறதே ஒவ்வொன்ருக. பழைய கொட்டடிப் புடைவை, பழைய சோளி ரவிக்கை, பழைய நேர் வகிடு எல்லாம் இப்போது புதுப் பாஷனுக மலர்ந்து வருகின்றனவே!

பெட்டியிலிருந்து எடுக்கும்போதும், அதைத் தட்டானிடம் கொடுத்து, மெருகிட்டுப் புதிது போலச் செய்து கொண்டு வந்தபோதும் அவளுக்கு வேறு எந்தவித எண்ணமும் இல்லை ஆனல் அது பார்க்க அழகாக இருந்தது. கைக்குப் பூஷணமாக இருந்தது. பார்த்தவர்கள் சிலர்கூட, "ஏதடி, இது, புதுப் பாஷனுக இருக்கு. வாங்கினையா. ஆர்டர் கொடுத்துச் செய்தையா?" என்று கேட்டார்கள். "வீட்டில் இருந்தது. உபயோகப்படுத்தாமல் கிடந்தது. பாாக்க நன்ருக இல்லை-?" என்று இருந்த சந்தேகத்தை அவள் தீர்த்துக்கொண்டாள். அதுவும் எதிர்வீட்டு ஜயந்தி ஒன்றைப் பார்த்து, 'நன்ருக இருக்கிறது' என்று சொல்லிவிட்டால் அது எவ்வளவு கர்நாடகப் பொருளாக இருந்தாலும் நவ நாகரிகப் பொருள்களோடு சேர்த்துவிட வேண்டிய புதுப்பொருள் ஆகிவிடும். நாகரிகத்தைக் கரைத்துக் குடித்து, அதை நடைமுறையில் அநுசரித்து வருகிற பட்டணத்துப் பெண் அவள்.

'போயும் போயும் நல்ல துணியை இப்படி வீணுகத் தைத்துக்கொண்டு வந்து நிற்கிருயே!' என்று அவள் சொல்லிவிட்டால், அப்புறம் அது எவ்வளவுதான் உயர்ந்த துணியாக இருந்தாலும், அதை எவ்வளவுதான் உறுதியாக அழகாகத் தைத்திருந்தாலும் அது பெண்கள் உலகத்தில் எடுபடாது. அவளே இந்தச் சிமிழைப் பார்த்து, 'ரொம்ப

நாசூக்காக இருக்கிறதே!' என்று முத்திரையிட்டு விட்டாள், அப்புறம் இதற்கு யாரைப் போய்க் கேட்க வேண்டும்?

இந்துவுடைய மாமாவின் பெண்ணுக்குச் சீமந்தம் நடந்தது. மணையில் வைத்துப் பாடுவதற்காகத் தெருவில் உள்ளவர்களை அவள் அழைக்கப் போனாள். கையில் அதே சிமிழ், சித்திரை மாதக் கடைசி; காலேஜ், ஹை ஸ்கூல் எல்லாம் விடுமுறை விட்டிருந்தார்கள். கடைசி வீட்டுக்கு அவள் போனபோது வாசலில் யாரோ நாலைந்து ஆண்பிள்ளைகள் உட்கார்ந்திருந்தார்கள், எல்லாரும் சிரித்துப் பேசிக்கொண்டு, அட்டகாசமாக உட்கார்ந்திருந் தார்கள். அவள், சிணுக் சிணுக்கென்று புதுப் புடைவை மொட மொடவென்று உராய, குங்குமச் சிமிழை ஏந்தி. அடங்கி ஒடுங்கி, 'உள்ளே போவோமா திரும்பி விடுவோமா?' என்று தயங்கிக்கொண்டே சென்றாள்.

"ஏண்டி இந்து, தாராளமா வரத்துக்கு என்ன பயம்? என் மருமான்தாண்டி! காலேஜ் லீவோல்லியோ? இங்கே வந்திருக்கான். அவாளெல்லாம் இங்கே அவனோடு படிச்சவா? உனக்கென்ன வெக்கம் வந்துது? பி. ஏ. முடிஞ்சு போச்சு. இனிமே கல்யாணம் பண்ண வேண்டியதுதான். ஆளைப் பாத்துக்கோடி!" என்று வேடிக்கையும் விளையாட்டுமாக அந்த வீட்டு அம்மாள் சொல்லிக்கொண்டே குங்குமத்தை எடுத்துக்கொண்டாள்,

வாசலில் அப்போது சிரிப்பு ஓய்ந்து, நிச்சப்தமாக இருந்தது. எல்லோருக்கும் அந்த அம்மாளின் பேச்சு நன்றாகக் காதில் விழுந்தது. இந்துவை வெட்கம் பிடுங்கி எடுத்தது. அப்படியே கொல்லைப்புறமாகப் போய்விடலாமா என்றுகூடப் பார்த்தாள். இப்போதாவது உடம்பு கொஞ்சம் தழைந்து, மொழு மொழு என்று ஆகிவிட்டது.

ஆனல் அன்று, அவள் வெடுவெடு என்று கொடிபோலத் தான் இருப்பாள். 'பதினேழு பதினெட்டு வயசுதானேடி? இது ஒரு வயசா? அவனுக்கு இந்தச் சித்திரைக்கு இருபத்திரண்டு முடியப் போறது' என்று அந்த அம்மாள் மேலும் அவள் மனசை நாணச் செய்தாள்.

முகம் எல்லாம் குங்குமமாகச் சிவந்துவிட்டது. 'போங்கோ மாமி!' என்று சொல்லிக்கொண்டே நிலைப் படியைத் தாண்டினள். திண்ணைப் பக்கம் திரும்பவே அவள் உடல் கூசியது. கண்ணைக்கூடத் திருப்பாமல் அவள் படிக்கட்டில் இறங்கினள். அவள் கட்டியிருந்த புதுப்புடைவை தடுக்கிவிட்டது. கொஞ்சம் அஜாக்கிரதையாக வந்திருந்தால் அது அவளையே கீழே உருட்டித் தள்ளியிருக்கும், ஆனல் நல்ல காலம், கையிலிருந்த சிமிழ் தான் எட்டப் போய் விழுந்தது. அதுவும் எங்கே? அவன் மடியில் போய் விழுந்தது!

'மெள்ளப் போகப்படாதேசடி அம்மா? அவனைப் பார்க்கப்படாதுன்னு போனையோ இல்லையோ? பார்க்கும் படி ஆயிட்டுது! பாத்துக்கோ; பிராப்தம் அப்படித்தான் இருக்குமோ, என்னவோ?'' என்று சொல்லிக்கொண்டே அந்த அம்மாள் அவளுக்குத் துணைக்கு வந்தாள்.

சுந்தரம் சிரித்தான். 'என்ன மாமி இது? வந்தவாளைப் போய்—நல்ல காலம்—குங்குமம் எல்லாம் என் மடியிலேதான் விழுந்திருக்கு. கீழே கொட்டவில்லை' என்று சொல்லிக்கொண்டே குங்குமத்தைச் சாவகாசமாக எடுத்து, சிமிழில் அடைத்து, அவளை ஒரு தடவைக்கு இரண்டு தடவையாகப் பார்த்துவிட்டுத் தூண் ஓரமாக வைத்தான். இந்துவுக்கு அவசரம்; அவமானம். சட்டென்று அதைக் கையிலே எடுத்துக்கொண்டாள். கண்கள், ஒருமுறை அவன் கண்களைப் பாய்ச்சிவிடும்

போலச் சந்தித்தன. விடுவிடென அந்த அம்மாளிடம், 'போய்விட்டு வருகிறேன்' என்றுகூடச் சொல்லாமல், சொல்லத் தோன்ருமல், போய்விட்டாள்.

ஒருவரும் சிரிக்கவே இல்லை. ஆனுல் அவள் கொஞ்ச தூரம் போனதும் திரும்பிப் பார்த்தாள் எல்லாருடைய கண்களும் தன்னையே பின்பற்றி வந்ததைக் கண்டு, அவள் தலையைக் குனிந்துகொண்டு, மேலே நடந்தாள்.

"என் மாமி, வந்த பெண்ணிடத்திலே, 'ஆளைப் பார்த்துக்கோ—பிராப்தம் இருக்கு' என்று என்னமோ சொல்லி விரட்டி விட்டீர்களே! பாவம், அது இன்னும் கொஞ்ச நாழி நின்றுகொண்டிருந்தாலும் நின்றுகொண்டிருக்கும்" என்ருன் சுந்தரம்.

"உனக்கு இன்னும் சித்த நாழி பார்க்கணும்போல் இருந்தா இப்பவே போய் அவ அம்மாவிடம் சொல்லி அழைச்சுண்டு வரேன். பாவம், பணம் இருக்கு, காசு இருக்கு; படிப்பு இருக்கு, அழகு இருக்கு. அப்பா வக்கீல் பண்ணுகிருர். எல்லாம் இருந்து என்ன? அததுகாலா காலத்துலே ஒரு கல்யாணம்னு ஆனுத்தானே பெண்களுக்கு அழகு? நாளைக்கே கல்யாணம் ஆகட்டும். அது எப்படி ஆயிடும் தெரியுமோ? இப்போ கவலை!" என்ருள் மாமி.

"இப்பவும் என்ன, அழகாய்த்தானே இருக்கிருள்?" என்ருன் சுந்தரம்.

மாமிக்குக் குஷி பிறந்துவிட்டது.

"உனக்குப் புடிச்சிருக்கோ இல்லையோ?"

"அவளைப் புடிச்சிருக்கோ என்னவோ, அந்தச் சிமிழை எனக்கு ரொம்பப் புடிச்சிருக்கு. அது இல்

லாட்டா அந்தப் பெண் சிவப்பா, கறுப்பா என்றுகூடப் பார்த்திருக்க முடியாது'' என்றான் சுந்தரம்.

இப்படி எடுத்ததுமே - அந்தக் குங்குமச் சிமிழ் புகுக் கத்துக்கு வந்த அன்றே - அவளுக்கு "மங்களகரமான காரி யத்தைச் செய்துவிட்டது. அவள் வந்த பிறகு நடந்த வற்றை யெல்லாம் அந்த மாமி வந்து சொன்னபோது அவளுக்கு வெட்கம், ஆசை, அந்தச் சிமிழிடம் ஒரு பிரியம் எல்லாம் தோன்றின. குந்தளங்கூட அதைச் சொல்லிச் சொல்லிக் கல்யாணம் ஆகும் வரைக்கும் பரிகாசம் செய்து கொண்டிருந்தாள்.

கல்யாணத்தில், நலங்கின்போது அந்தச் சிமிழைத் தான் வைத்திருந்தார்கள். குங்குமத்தை எடுத்து, அவள் அவன் நெற்றியில் பொட்டிட்டாள். அவன் பொட்டிடு வதற்குப் பதில் அவள் கன்னங்களில் அதைத் தீற்றி விட்டான். யார் பேச்சையோ கேட்டுக்கொண்டு குறும் பாக அப்படிச் செய்தான்.

"நீயும் தீற்றடி!'' என்று இவள் பக்கத்து வாத்தி யார்க்காரி விரட்டினாள்.

அவளும் குறும்பாகக் குங்குமச் சிமிழில் விரலை வைக் கும்போது அவன் கபக்கென்று மூடி, ஒருவரும் அறியாமல் அவள் விரலைக் கிள்ளிவிட்டான். அந்த வலியை நினைத் தாலே இன்றும் இன்பமா யிருந்தது.

இப்படி எத்தனை எத்தனையோ, அதைச் சாக்கிட்ட அந்தரங்கமான விஷயங்கள்! அந்தரங்கமான இன்ப உணர்ச்சிகள்!

கல்யாணமாகிப் புக்ககம் போனாள். கணவனும் அவ ளும் பட்டணத்தில் தனிக்குடித்தனம் வைத்தார்கள். இரண்டு மூன்று தடவை பிறந்தகத்துக்கும் போனாள்.

இங்கு வந்தபோதெல்லாம், "ஏண்டி! ஸ்நானம் பண்ணிண்டுதான் இருக்கையா? நீ வரப்போறே இன்னு சொன்னதும் வளை காப்புன்னு நினைச்சேன்" என்று அக்கம் பக்கத்து வீட்டுப் பெண்கள், பெரியவர்கள் அவளிடம் வந்து சொல்வார்கள். அங்கே கணவனுடன் இருக்கும்போது டிராமாவென்றும் சினிமாவென்றும் பீச்சென்றும் கோவிலென்றும் அவர்கள் விச்ராந்தியாகப் போகத் தவறுவதில்லை. சுந்தரங்கூட மேலுக்கு வெகு சுதந்தரமாய், உல்லாசமாய் இருப்பதுபோலக் காட்டிக்கொண்டு, "இப்போ நம்ப ரெண்டு பேராய் இருக்கோம், ஒரு கவலையும் இல்லாமல்; ஹாய்யாகப் போயிட்டு வர முடியறது. நாளைக்குக் குழந்தைகள் என்றும் குட்டிகள் என்றும் ஆகிவிட்டால் இது எல்லாம் முடியுமா, இந்து?" என்று கேட்பான். அது எவ்வளவு பெரிய பச்சைப் பொய் என்பது அவள் மனசுக்குத்தான் தெரியும்.

"உங்களுக்குத்தான் குழந்தைகள் என்றால் உயிராச்சே! எதிர்வீட்டுக் குழந்தையைக் கொஞ்சு கொஞ்சு என்று கொஞ்சுவீர்களே!" என்பாள் இந்து.

"அதுக்கு என்ன பண்றது? குழந்தைகள் என்றால் உயிர்தான். ஆனால் அவர்கள் குழந்தைகளை வைத்துக்கொண்டு படும் பாட்டைப் பார்க்கும்போது, எந்த இடத்துக்கும் போகமுடியாமல் திண்டாடுவதை எண்ணும்போது, 'போதும் போதும், நமக்குக் குழந்தைகளே வேண்டாம்!' என்றுதான் தோன்றுகிறது" என்பான்:

"ஏன் உள்ளதை மறைத்துப் பேசுகிறீர்கள்? உங்களுக்குக் குழந்தை என்றால் கொள்ளை ஆசைதான்!"

சுந்தரம், மகா சாமர்த்தியக்காரன். அவள் மனவேதனையைப் புரிந்துகொண்டு, மெதுவாக, அழுத்தமாக,

"எனக்கு அதைவிட உன்னிடந்தான் கொள்ளை ஆசை அதற்கு என்ன சொல்கிறாய்?'' என்பான்.

குழந்தைகள் இல்லையே என்பதற்காக அவளிடம் அவனுக்கு அன்பு குறையவில்லை என்பதை ஒவ்வொரு விஷயத்திலும் அவன் ஊர்ஜிதம் செய்வதுபோல நடந்து கொள்வான்.

"இந்தத் தடவை ஊருக்குப் போனால் அந்தக் குங்குமச் சிமிழைக் கொண்டுவரப் போகிறேன்'' என்றாள் இந்து,

அவளுடைய நம்பிக்கையை வாய்விட்டுச் சொல்ல அவளுக்குத் திறன் இல்லை. இந்த மூட நம்பிக்கையைக் கேட்டு, அவன் பரிகாசம் செய்து தீர்த்துவிடுவான். இருந்தாலும் அவள் அதை ஒரு தடவை வாய் தவறிச் சொல்லிவிட்டாள்.

"எந்தக் குங்குமச் சிமிழ்? நம்ப கல்யாணத்துக்கு முன்னே என்மேல் விட்டெறிந்தாயே, அதைத்தானே?''

"ஆமாம்; விட்டெறிந்தார்கள்! பேச்சைப் பார்!''

"சரி சரி; அது எதுக்கு? இங்கே வேறே வாங்கினால் போச்சு. நம்ப கல்யாண ஞாபகம் இருக்கணும்னு கொண்டுவா. வேண்டாம் என்று நான் சொல்லவில்லை'' என்றான் அவன்.

நல்ல வேளை. அவன், அவள் கருத்தைப் புரிந்து கொள்ளாத வரையில் க்ஷேமந்தான்.

அவளுக்கு அந்த நம்பிக்கை என்னவோ நாளுக்கு நாள் வலுப்பட்டுக்கொண்டே வந்தது. அந்தக் குங்குமச் சிமிழ் ஆகிவந்தது. அது தன்னிடம் இருந்தாலே வீட்டில் குழந்தைகள் இருக்கும். அதனால்தான், "நீ சொன்னாலும் சொல்லாவிட்டாலும் அதை இந்தத் தடவை எடுத்துக்

கொண்டுதான் போகப்போகிறேன்'' என்று அம்மாவிடம் சொல்லிவிட்டு, அதை எடுத்துக்கொண்டு போனுள்.

குந்தளத்துக்கு இப்போது எங்கெல்லாமோ வரன் பார்த்துக்கொண்டிருந்தார்கள். பட்டணத்தில் கொண்டு போய்க்கூடத் தங்கையை அவள் இரண்டு மாதம் தனக்குத் துணையாக வைத்துக்கொண்டிருந்தாள். 'அங்கேயே அவருக்கு எவ்வளவோ பேர் தெரிஞ்சவா இருக்கா. ஏதாவது அவரே ஏற்பாடு செய்தாலும் செய்வார்' என்று தான், விடமாட்டோம் என்று வைத்திருந்த பெண்ணைப் பிடிவாதம் பிடித்து அவள் அழைத்துக்கொண்டு போனுள். அக்காவுக்கும் தங்கைக்கும் அவ்வளவாக ஒத்துப்போகாது. இருந்தாலும் இந்து அவளுக்கு விட்டுக் கொடுத்து விடுவாள். அக்காவும் அவள் கணவனும் இருந்த அந்நியோந்நியத்தைக் கண்டாள் குந்தளம். சுந்தரம் இவள் விஷயமாக ஒன்றுமே கவனிக்கவில்லை. அவனுக்கு முதலில் நேரமே இல்லை. 'பெண்டாட்டியைக் கொஞ்சுவதற்கு மட்டும் நேரம் இருந்த தாக்கும்' என்ற அளவுக்குக் கூடக் குந்தளம் எண்ணிவிட்டாள்.

திரும்பி ஊருக்கு வரும்போது, ''இந்து, இந்தக் குங்குமச் சிமிழை நான் எடுத்துக்கொண்டு போகிறேன்'' என்று சொல்லிவிட்டு, அவள் பதிலை எதிர்பாராமலே அதை எடுத்துப் பெட்டியிலும் வைத்துக்கொண்டு விட்டாள் குந்தளம். 'மாட்டேன்' என்று அதை எப்படித் திரும்ப வாங்கிக்கொள்வது?

'சரி; நாம் போனுல் வந்தால் எடுத்துக்கொண்டு வந்தால் போகிறது' என்று எண்ணிக்கொண்டாள் இந்து.

அப்பொழுது இங்கே வந்த சிமிழ் அது. குந்தளம் ஒரு சமயம் வேண்டுமென்றே எடுத்து வைத்திருப்பாளோ

என்றுதான் அவள் கேட்டாள். அதற்கு இதுவா பேச்சு? 'எடுக்கவில்லை' என்று வார்த்தைக்காவது சொல்லிவிட்டுப் போவதுதானே?

*　　　*　　　*

"அப்பா, உங்களுக்கு நமஸ்காரம் பண்ணுகிறேன், அம்மா, உனக்கு நமஸ்காரம் பண்ணுகிறேன். அண்ணு, நீயும் நில்லேன்" என்று இந்து ஒவ்வொருவராக நமஸ்காரம் செய்துவிட்டு, வண்டியில் போய் ஏறிக்கொண்டாள். அதுவரையில் குந்தளத்திடம் பேசக்கூட அவளுக்குப் பிடிக்கவில்லை. 'இவ்வளவு கெட்ட எண்ணக்காரியா இவள்?' என்ற வெறுப்பு ஒரு புறம். 'இருந்தாலும் அவள் சின்னவள்; கல்யாணமாகாதவள்' என்ற ஆதங்கம் ஒரு புறம். கடைசியாக மனசு கேட்காமல், "குந்தளா, நான் போயிட்டு வரட்டுமா? கடிதம் அடிக்கடி எழுதுகிருயா?" என்று கேட்டாள்.

"சரி......நீயும் எழுது" என்ருள் குந்தளம்.

இரவில் தமையனுடன் ரெயிலில் போகும்போதெல்லாம், 'அவளும் என்னைப்போலத்தானே? எனக்கு எப்படியாவது கல்யாணமாகாதா என்று இருந்ததைப்போலத் தானே அவளும் எண்ணுவாள்? அந்த எண்ணத்துக்கு ஒரு நம்பிக்கை வேண்டுமே. வெகுநாள், "அந்தக் குங்குமச் சிமிழால்தான் கல்யாணமாயிற்று" என்று அவள் பரிகாசம் செய்தவள் ஆயிற்றே. அந்த ஆசையில்தான், அதைத் தானே வைத்துக்கொள்ள வேண்டும் என்று அவள் விரும்பி யிருக்கிருள். இதில் தவறு என்ன?' என்று எண்ணமிட்டு வந்தாள். அவள் எதற்காக அந்தக் குங்குமச் சிமிழை வேண்டுகிருள் என்பது குந்தளம் ஒருத்திக்குத்தான் சரியாகத் தெரிந்தது. அதுதான் இந்துவை

வெகுநேரம் வருத்தியது. 'மற்றவர்களுக்காவது விஷயம் தெரியாது; போகட்டும். இவளுக்குத்தான் தெரியுமே. அப்புறமும் அதைக் கொடுக்கக் கூடாது என்றுதானே நினைக்கிருள்? அதாவது கெட்ட எண்ணம்: எனக்குக் குழந்தை கூடாது, குட்டி கூடாது என்று. இவள் எண்ணப்படிதான் எல்லாம் நடந்துடுமாக்கும்!' என்று தன்னையே அவள் தேற்றிக்கொண்டாள்.

கடைசியாக, 'போகட்டும்; இதைவிட அவளுக்குக் கல்யாணம் ஆகவேண்டியதுதான் முக்கியம். இந்தக் குங் குமச் சிமிழ் இருந்தால், கல்யாணம் நடக்கும் என்பது உண்மையாளுல் அப்படித்தான் ஆகட்டுமே. அதில் எனக்குச் சந்தோஷந்தான்' என்று நிம்மதியாகப் படுத் துக் கொண்டாள்.

மறுநாள் காலையில் சுந்தரம் ஸ்டேஷனுக்கு வந்திருந் தான். அன்று முழுவதும் அவளுக்கு வீட்டு வேலை சரி யாக இருந்தது. மூச்சுவிட நேரம் இல்லை.

"எங்கே சாப்பிட்டீர்கள்? உடம்பு ஏன் இவ்வளவு இளைப்பாக இருக்கிறது? ஹோட்டல் சாப்பாடு ஒத்துக் கொள்ளவில்லை என்ருல் முன்னுலேயே எழுதுவதற் கென்ன?" என்றெல்லாம் கோபித்துக்கொண்டாள். தகர டப்பாக்களை யெல்லாம் ஒழித்து, சாமான்களை நிரப்பி வைத்தாள். அதிகாரம் செய்தாள்; அட்டகாசம் செய் தாள்.

"எல்லாம் கிடக்கட்டும். நாம் சிறிது நேரம் கோவி லுக்குப் போய்விட்டு வரலாம். உன் தங்கை குந்தளத் துக்கு ஒரு வரன் பார்த்துப் பேசி வைத்திருக்கிறேன். எல் லாம் முடிவானது போலத்தான். உனக்கும் பிடித்திருந் தால் அதற்குமேல் உங்க அப்பாவுக்கு எழுதி, பெண்ணை

இங்கே வரவழைத்துப் பார்க்க வேண்டியதுதான். நீயும் அதற்கு முன்னதாக ஒரு தடவை பார்த்துவிடு. உன் அண்ணுவும் பார்க்கட்டும். அப்படியே அவர்கள் வீட்டுக்குப் போய்விட்டு வரலாம். நீ வந்ததும் உன்னே அழைத்துக்கொண்டு வருவதாகச் சொல்லியிருக்கிறேன்" என்ருன் சுந்தரம்.

இந்துவுக்கு ஒரே பிரமிப்பாக இருந்தது. குங்குமச் சிமிழ் நினைப்புத்தான் மலைப்பாக இருந்தது.

"இருங்கள்; முகத்தை அலம்பிக்கொண்டு வேறு புடைவை எடுத்து உடுத்துக்கொண்டு ஒரே நிமிஷத்தில் வருகிறேன்" என்று பெட்டியைத் திறந்தாள். ஸ்கார்லெட் கலர்ப் புடவையைக் கட்டிக்கொண்டால் சுந்தரத்துக்கு மிகவும் திருப்தியாக இருக்கும். அதனுல் அந்தப் புடைவையை எடுத்தாள்; பிரித்தாள். அடுத்த கணம், 'ணங்' என்று ஏதோ கீழே விழுந்து, உருண்டது. பார்த்தாள், அதே குங்குமச் சிமிழ்தான்!

'என்னிடமே அல்லவா இருக்கிறது இது? குங்குமச் சிமிழை எடுத்து வைக்கத்தான் அம்மா கேட்டிருக்கிருள் போல் இருக்கிறது. என் பெட்டியிலேயே வைத்துக்கொண்டு ஊரெல்லாம் தேடினேனே! குந்தளத்திடம் போய்க் கோபித்துக்கொண்டேனே! ஆமாம், எல்லாம் சரி, குங்குமச் சிமிழ் என்னிடம் இருக்கும்போது அவளுக்கு எப்படிக் கல்யாணம் நிச்சயம் ஆயிற்று? அப்படியானுல் இது அவளிடமே இருந்தால் எனக்கு......' என்று எண்ணமிட்டது அவள் மனம்.

அவர்களுக்கு அந்த இடம் பிடித்துவிட்டது. மறுநாள் தமையன் ஊருக்குப் புறப்பட்டபோது, "அண்ணு, சிமிழைக் குந்தளத்திடமே கொண்டுபோய்க் கொடு.

அவள் ஆசைப்பட்டாள்!'' என்று கொடுத்தனுப்பினாள். அதன் பிறகுதான் அவள் மனசு லேசாயிற்று.

பேச்சு வார்த்தை நடந்து அடுத்த மூன்றாவது மாதந்தான் குந்தளத்துக்குக் கல்யாணம் நடந்தது. இந்துவும் சுந்தரமும் பம்பரமாச் சுற்றி நடத்தினார்கள். ஆனால் இந்துவுக்குச் சாப்பாடே செல்லவில்லை. சாப்பிட்டதெல்லாம் வாந்தியும் ஓக்காளமுமாகக் குமட்டின.

"என்னடி இந்து, இது? உடம்புக்கு என்ன?" என்று தனியாகக் கேட்டாள் குந்தளம்.

''ஒன்றும் இல்லேடி, பைத்தியம்! இரைந்து பேசாதே! அம்மாவுக்குத் தெரிஞ்சால் ரகளைப் படுத்திவிடுவாள். இங்கே இருந்து போய் மூன்று மாசம் ஆகவில்லையா?'' என்று சிரித்தாள் இந்து.

# குங்குமச் சிமிழ்

## பூவாளூர் சுந்தரராமன்

"அம்மா, மாமி குங்குமச் சிமிழ் எங்கே?"

"என்னைக் கேட்டால்? எல்லாம் அங்கேதான் அலமாரி, கிலமாரியிலே இருக்கும், பாரு......"

"பார்த்தேனம்மா; காணவில்லையே!" என்று தொடர்ந்து சொன்னாள் பெண்.

"காணவிட்டால், போ! என்னால் கைவேலையை விட்டு விட்டு எழுந்து வந்து இப்போது தேடி எடுத்துக் தர முடியாது..."

"நீ பார்த்தாயா, அப்பா, மாமியின் குங்குமச் சிமிழை?"

"என் அலமாரியில்தான் இருக்கிறது; எடுத்துத் தருகிறேன்" என்று ராமநாதன் எழுந்து உள்ளே சென்றான்.

அது ஒரு சர்வ சாதாரணமான வெள்ளிக் குங்குமச் சிமிழ்; மிகுந்த வேலைப்பாடு ஒன்றும் இல்லை. ஆனாலும் ராமநாதனுக்கு அதைத் தொட்டு எடுத்தபோது, ஸப்த ஸ்வரங்களையும் ஒரே க்ஷணத்தில் மீட்டினால் அவற்றின் சம்மேளனத்தில் உண்டாகும் ஒலிபோல,பல்வேறு உணர்ச்

சிகள் உண்டாயின; இதற்கு முன்புகூட, எத்தனையோ தடவை அவன் அதை எடுத்திருக்கிறான். ஒவ்வொரு தடவையும் அதே மாதிரி பழைய எண்ண அலைகளும் அவற்றில் பிறந்த உணர்ச்சிச் சுழல்களும் கொந்தளிப்புகளும் ஏற்படத்தான் ஏற்பட்டன.

அதை வாங்கிக்கொண்டே அவனுடைய பெண் ஹேமா, "அப்பா, இதை அம்மாவுக்குக் கொடுத்த மாமி ஏன் ஒரு தடவைகூட நம் வீட்டிற்கு வரவில்லை?" என்று கேட்டாள்.

"வருவாள் அம்மா!" என்று சொல்லி, ஒருபெருமூச்சு விட்டான்.

ஹேமா அதை வாங்கிக்கொண்டு உள்ளே ஓடினாள்.

வீட்டில் எல்லாருக்கும் அது ஒரு சாதாரணக் குங்குமச் சிமிழாகத்தான் தோற்றம் அளித்தது. ஆனால் ராமநாதனுக்கு அப்படித் தோன்றவில்லை; அது ஓர் அசேதனமான வஸ்து என்றே இலக்கணம் வரம்பு கட்டியிருந்தும், அது வாய் விட்டுச் சொல்லாமல் சொல்லும் கதை, அவனுடைய காதில் கேட்காமலா போய்விட்டது? சகுந்தலாவே அந்தத் தோற்றம் எடுத்து வந்து அவனுடைய நடத்தையைக் கவனித்து வருவதுபோலத் தோன்றவில்லையா? அது வெறும் மாயத் தோற்றம், மனப் பிராந்தி என்றெல்லாம் சுலபமாக ஒதுக்கித் தள்ளிவிட முடியாதபடி, சகுந்தலாவின் கண்களின் விளிம்பிலே எல்லை கோலி நிற்கும் சோகக் கண்ணீர் அதில் பிரதிபலிக்கவில்லையா?

எத்தனையோ வருஷங்கள் ஆகிவிட்டன! அவனுடைய பெண் ஹேமாவுக்கே வயது ஆறு ஆகப்போகிறதே? அதற்கும் இரண்டு வருஷங்களுக்கு முன். காலம் எத்தனையோ விஷயங்களை மறக்கடிக்கத்தான் செய்கிறது.

என்றாலும் சிலர் விஷயத்தில் சிற்சில சம்பவங்களுக்கு முன், காலமும் முதுகிட்டு ஓடத்தான் ஓடுகிறது!

## 2

அப்போது ராமநாதன் எல். டி. பரீட்சையில் தேர்ச்சி பெற்றுச் சும்மா இருந்த சமயம். திடீரென்று ஒரு நாள் அவன் மாமா வீட்டிற்குள் நுழைந்தார். "மங்களம், உன் பிள்ளைக்கு எடுத்ததுமே அதிருஷ்டத்தைப் பார்! ஹெட்மாஸ்டர் வேலை ஆயிருக்கு!" என்றார்.

"ஆகக் கூடாதா, என்ன? ராமுவின் அதிருஷ்டம்னு தானா சொல்லணும்? ராஜத்தின் அதிருஷ்டம்னுதான் சொல்லேன்!"

"அதெப்படி, அம்மா. கழுத்தில் ஒரு முடிச்சு விழுவதற்குள் சொல்லிவிட முடியுமா?"

"அதென்ன, அண்ணா, நடுவில் அப்படி ஒரு வார்த்தையைத் தூக்கிப் போடுகிறாயே? அது கிடக்கட்டும்; எந்த ஊரிலே வேலை ஆயிருக்கிறது? அவன் 'அப்ளிகேஷன்' போட்டிருக்கான் என்கிற சமாசாரத்தையே என்னிடம் சொல்லவில்லையே!"

"அவனுக்கே தெரியாது. நான்தான் பிரயத்தனம் செய்தேன். முதல் முதலில் ஆறுமாதத்துக்குக் கண்ணாகுடி ஸ்கூலில் போட்டிருக்கிறார்கள்; ஊர் சின்ன ஊர் தான்; பள்ளிக்கூடமும் சின்னதுதான்..."

"ரொம்ப எட்டாக்கையாக இருக்கும்போல இருக்கே?"

"அதெல்லாம் ஒன்றும் இல்லை; கண்ணாகுடிக்கு நாலு மைலுக்கு அப்பால் பஸ் போகிறது. இது ஆறு மாதத்

துக்குத்தானே? பிறகு வேணுமானால் பக்கத்திலேயே மாற்றிக்கொள்ளலாம்'' என்று அவர் தைரியம் சொன்னார்.

இவ்வளவும் காமிரா உள்ளில் படுத்துக்கொண்டிருந்த அவன் காதில் விழுந்துகொண்டுதான் இருந்தது.

எல். டி. யில் தேர்ந்தபோது அவன் கற்பனையில் உருவாகியிருந்த 'கோபுரம்' வேறு: சிறு நகரத்துப் பள்ளிக்கூடம் ஒன்றில் ஆசிரியனாகப் புகவேண்டும்; கற்பிக்கும் ஆற்றலினாலும், மாணவர்களிடத்துக் கொண்டுள்ள அன்பினாலும் ஓர் ஆதர்ச ஆசிரியனாக விளங்கவேண்டும்; படிப்படியாக ஏறித் தலைமை ஆசிரியர் பதவியில் ஒரு பத்துப் பன்னிரண்டு ஆண்டுகள் ஒரு ரைட் ஹானரபிள் சாஸ்திரியாகவோ, அல்லது அவனுடைய ஹெட்மாஸ்டர் செல்லையா மாதிரியாகவோ பெரும் புகழுடன் விளங்கவேண்டும்; தன் காலத்தில் மாணவர் எண்ணிக்கை ஆயிரக்கணக்கில் பெருகவேண்டும் என்றெல்லாம் கோட்டைகள் கட்டியிருந்த அவன் உள்ளத்தில் அந்தக் கிராமத்தின் பெயர் அதிக உற்சாகத்தைத் தரவில்லை.

ஆனாலும் எடுத்த எடுப்பிலேயே தலைமை ஆசிரியர் பதவி வருகிறது என்று உள்ளத்தின் ஒரு மூலையில் உவகை இருக்கத்தான் இருந்தது.

## 3

கண்ணுகுடி அவன் எதிர்பார்த்தபடி கிராமந்தான்; பக்கத்து வட்டாரங்களில் உள்ள பத்துப் பதினைந்து கிராமத்துப் பையன்களும் பெண்களும் அந்தப் பள்ளிக்கூடத்துக்குத்தான் வந்து படித்தாக வேண்டும்.

பள்ளிக்கூடம் ஓட்டுக் கட்டிடம். பழைய காலத்துக் கெட்டிப் பலகைகளால் ஆன பெஞ்சுகளில் கிராம வாசனை

வீசும். மாணவர்களும் மாணவிகளும் உட்கார்ந்துகொண்டு, இருபத்துநான்கு மணி நேரமும் சூரியன் அஸ்தமிக்காது என்று கருதப்பட்ட ஆங்கிலேய சாம்ராஜ்யத்தின் பாஷையை மனம் போனபடி உச்சரித்து, உரக்கப் படித்துக்கொண்டும், ஐம்பது மைலுக்கு அப்பால் இருக்கும் நகரத்தையே பார்க்கக்கூடாமல் இருக்க, ஐயாயிரம் மைல்களுக்கு அப்பால் உள்ள நாட்டார்களின் பழக்க வழக்கங்களைப் புத்தகங்களில் படித்து, மிகவும் புரிந்துகொண்டவர்களைப்போலத் தலையை ஆட்டிக்கொண்டும் இருப்பதைக் காண ராமநாதனுக்கு வேடிக்கையாக இருந்தது. இந்தக் குழந்தைகளையா அவன் மனம் கற்பனையில் இத்தனை காலம் போற்றி வந்தது என்பதை நினைக்கும் போது, அவன் உள்ளம் வெடித்துவிடும்போல் இருந்தது.

மாணவர்கள் தாம் அப்படி என்றால், அவனுக்குக் கீழ் வேலைக்கு அமர்ந்திருந்த ஆசிரியர்களைப்பற்றியும் ஆசிரியைகளைப்பற்றியும் ஒன்றுமே சொல்லவேண்டியதில்லை. முதலாவதாக அவன் வயதுக்குச் சகாவாக ஒருவருமே அங்கு இல்லை; யாவரும் வயது ஆனவர்கள்; நெற்றி நிறைய விபூதியையோ திருநாமத்தையோ தரித்து, தினந்தோறும் தோய்த்து உலர்த்தின 'நீர்க்காவி' ஏறின வேஷ்டியையும், பித்தான் இல்லாத ஷர்ட்டையும் அணிந்து கொண்டு, 'ஸேப்டி ரேசரி'ன் உபயோகத்தையே தெரிந்து கொள்ளாமல், தீக்ஷை வளர்த்துக்கொண்டு இருக்கிற ஆசிரியர்கள். வெள்ளை ரவிக்கையையும், மில் புடவையையும் அணிந்துகொண்டு, காலில் செருப்பு மாட்டிக் கொண்டுவிட்டதாலேயே 'டீச்சர்' கௌரவம் பெற்ற ஆசிரியைகள்—இவ்வளவும் சேர்ந்தால் அவனுடைய இளவேனில் கற்பனைகள் என்ன ஆகும்? எப்படி இந்த ஆறு மாதம் கழியப்போகிறது, என்றைக்கு இந்த உத்தியோகத்துக்கு ஒரு தலைமுழுக்குப் போட்டுவிட்டுப் போகப்போகி

ரேும்? என்றுதான் ராமநாதன் அங்கு வந்த இரண்டாம் நாளே எண்ணத் தொடங்கிவிட்டான்.

மூன்ரும் நாள் காலே, ஒரு வாரம் ரஜாவில் சென் றிருந்த பாட்டு வாத்தியாரம்மாள் வந்து சேர்ந்தாள்.

அவளேதான் ஆரம்பித்தாள்.

"நான்தான் 'மியூஸிக் டீச்சர்'..."

"உங்கள் பேர்தானே சகுந்தலா......?"

இந்த இரண்டு வார்த்தைகள் பேசுவதற்குள் இருவ ருக்குமே ஏதோ வகை அறியாத ஒரு தவிப்பு ஏற்பட்டது. அதற்குக் காரணம் இல்லாமலும் இல்லே. அவளுக்கு நல்ல பருவ வயது; நல்ல அழகு; அந்த அழகும் யௌவனமும் அவளுடைய பார்வை, பேச்சு, செயல் மூன்றிலும் ஊச லாடின. சென்ற மூன்று நாட்களாக அந்த ஊர், அந்தப் பள்ளிக்கூடம், பள்ளிக்கூடத்தில் படிக்கும் மாணவர்கள், கற்பிக்கும் ஆசிரியர்கள் யாவற்றையுமே வெறுத்து வந்த மனத்தில் சிறிது சலனம் ஏற்பட்டது. அவனுடைய சரி வயதான ஒரு பெண் அந்தப் பள்ளிக்கூடத்தில் படிக்கும் குழந்தைகளின் முன்னேற்றத்தில் ஈடுபட்டிருக்கிருள் என்பதே அவனுக்குச் சிறிது ஊக்கத்தை அளித்தது.

அடுத்த சில நாட்களில், தினந்தோறும் மணி அடித்து, வகுப்புக்குப் போகுமுன் சகுந்தலா, ராமநாதனுடைய அறைக்கு வந்து, அவனேக் கண்டுகொண்டுதான் போவாள்; அதேபோல மாலே மணி அடித்ததும் அவனேப் பார்த்து விட்டே வீட்டிற்குச் செல்வாள்.

இந்த ஒரு க்ஷண சந்திப்பில் இருவரும் வாய்விட்டுப் பேசாவிட்டாலுங்கூட இரண்டு கண்ணிணேகளும் எவ்வ ளவோ பேசிக்கொண்டன. ஒன்றை ஒன்று பார்க்கத் தவிக்கும் ஆவல் இரண்டிலும் தென்பட்டன.

ஒருநாள் அவனுக்கு என்ன தோன்றிற்ருே, "உங்கள் பாட்டு இன்று மிகவும் நன்ருக இருந்தது!" என்று சொல்லி வைத்தான். உண்மையில் அவளுடைய பாட்டை அன்று ராமநாதன் கேட்கவே இல்லை.

"தாங்க்ஸ், ஸார்! நீங்கள் கேட்டுக்கொண்டே இருந்தீர்களா, என்ன?" என்று நாணத்தால் முகம் சிவக்க, ஆச்சரியம் பிரதிபலிக்கும் கண்களை ஒரு சிமிட்டுச் சிமிட்டிக்கொண்டே கேட்டுவிட்டுப் போனுள். அதற்குப் பிறகு அவர்கள் அடிக்கடி பேசினுர்கள். ஒரு ஹெட்மாஸ்டரிடம், ஒரு வாத்தியார் பேசச் சந்தர்ப்பம் இல்லாமலா போய் விடும்? பேச்சுக்கள் முதலில் லோகாபிராமமாக ஆரம்பித்தாலும், முடியும்போது இருவருடைய சொந்த விவகாரங்களாகவே இருக்கும்.

திடீரென்று ஒரு நாள் ஒரு பொட்டலத்தை அவனுடைய மேஜையின்மீது வைத்து, "இதை எடுத்துக்கொள்ளுங்கள்கள் ஸார்! வீட்டில் செய்தது!" என்ருள்.

ராமநாதன் மிகுந்த சங்கோசத்துடன், "இது எதற்கு?" என்ருன்.

"நீங்கள் எடுத்துக்கொள்ளத்தான் வேண்டும்!" என்று ஒரே பிடிவாதத்துடன் வற்புறுத்தினுள். அதற்குள் ராமநாதனுடைய கைகள் அந்தப் பொட்டலத்தை அவிழ்த்தன. வாழை இலையில் சுடச்சுடப் பாதாம்ஹல்வா! குங்குமப்பூவின் மணம் வீசிற்று. அதை ருசித்துக் கொண்டே, "இத்தனை நாள் உங்கள் பாட்டுத்தான் இனிக்கும் என்று நினைத்தேன். உங்கள் 'கையும்' இனிக்கத்தான் இனிக்கிறது!" என்ருன் ராமநாதன்.

சகுந்தலா, தட்டுத் தடுமாறிக்கொண்டு, "பாவம்! நீங்கள் உங்கள் வீட்டில் நாலும் செய்து சாப்பிட்டு

வழக்கம் இருக்கும். இந்தக் காட்டில் உங்களுக்கு மிகவும் அசௌகரியமாகத்தான் இருக்கும்!'' என்ருள்.

''அதைத்தான் வெகுவாக நீங்கள் குறைத்துவிட்டீர்களே!'' என்ருன். இருவருடைய கண்களும் காதல் பாஷையில் மௌன ரகசியத்தைப் பேசிக்கொண் டிருந்தன. அன்றுதான் இருவரும் சிறிது மனம் விட்டுப் பேசினுர்கள். சகுந்தலா, சிறு வயதிலேயே மஞ்சள் குங்குமத்தை இழந்தவள் என்றும், அவள் துணைக்கு ஓர் அத்தையை வீட்டில் வைத்துக்கொண்டு இருக்கிருள் என்றும் ராமநாதன் தெரிந்துகொண்டான் ராமநாதனும் தன்னுடைய தகப்பஞர் இறந்த பிறகு எப்படி மாமாவின் பராமரிப்பில் இருந்து வந்தான் என்பதையும், அவனுக்காக வளர்ந்து வரும் கன்னி ராஜத்தைப்பற்றியும் சொல்லி வைத்தான்.

## 4

ராமநாதன் கண்ணுகுடிக்கு வந்து, நான்கு மாதங்கள் ஆகிவிட்டன, இந்த நான்கு மாதங்களுக்குள் இருவருடைய உள்ளங்களும் எவ்வளவோ மாறுதல்களை அடைந்துவிட்டன. வந்த இடத்தில் இப்படி ஒரு நிலைமை ஏற்பட்டு, தன் கொள்கையையே மறக்கும்படியான நிலைமை ஏற்படும் என்று அவன் நினைக்கவில்லை. அவளுக்கும்—ஆழ்ந்த குளத்து மேல்மட்டத்தில் காணப்படும் அமைதிபோல், நிச்சலமாக இருந்த உள்ளத்தில்—தன் அதிருஷ்டக்குறைவை ஈடுசெய்வதுபோல, குழந்தைகளின் நேசத்திலே மூழ்கி ஓரளவு இன்பம் கண்ட அவள் மனத்திலும் சிறு புரைசல் ஏற்பட்டது. இருவருடைய நட்பும் வரம்பு கடந்து போகாவிட்டாலும், அந்தச் சிறு காலத்துக்குள் இருவருடைய உள்ளத்துக்குள்ளும் ஆயிரம் ஆண்டுகளாகக் கூடிக் களிக்கும் காதலர்களுடைய மனப்

பண்பும் மனமகிழ்ச்சியும் நிறைந்திருந்தன. ஒருவருடைய வெறும் கண்பார்வையே மற்றவருக்குக் காதல் முத்தம் இட்டதைப்போல மனத்தில் புளகிதத்தை உண்டாக்கிற்று. அவளுடைய குவிந்த வாயின் கடைக்கோணத்தில் ஒரு லேசான புன்சிரிப்புப் பூத்தது. ராமநாதனுக்கு அவளைத் தன் இரு கைகளிலும் ஆர்வம் பொங்க அணைத்துக்கொண்டதைப்போல மயிர்க்குச்சு எறிந்தது!

ராமநாதனுக்கு நாட்கள் வெகு வேகமாக ஓடுவதாகத் தோன்றின. ஒரு நாளுக்கு இருபத்து நான்கு மணி நேரத்துக்குப் பதிலாக, நாற்பத்தெட்டு மணியாக இருக்கக் கூடாதா என்று தவித்தான். ஆயிற்று; இன்னும் இரண்டு மாதங்கள் முடிந்து, ரஜாவில் சென்றிருக்கும் 'ஹெட் மாஸ்டர்' வந்துவிட்டால், தான் எங்கேயோ சகுந்தலா எங்கேயோ என்ற அச்சம் மனத்தை வெகுவாகக் கலக்கியது. அதற்குள் சகுந்தலாவைத் தன் உடைமையாகச் செய்துகொண்டுவிட வேண்டும் என்றும் அவசரப்பட்டான். அவனுடைய புரட்சிகரமான திட்டத்துக்கு அவனுடைய தாய் அநுமதி கொடுக்காவிட்டாலும் சகுந்தலாவை விட்டுப் பிரிவது என்பது சாத்தியப்படாத காரியமென்றே நினைத்தான்.

ஆனல் இன்னும் ஒரு தடவைகூட அவன் வாய்விட்டு, 'உன்னைக் காதலிக்கிறேன்!' என்று சகுந்தலாவிடம் சொல்லவில்லை; அவளும் சொல்லவில்லை. ஆனலும் அவர்கள் இருவருடைய கண்ணுந்தான் அந்த ரகசியத்தை இருதயத்துக்கு உணர்த்திக்கொண்டே இருக்கிறதே! உணர்ச்சி வசப்பட்டு இருக்கும்போது சொல் பிறக்குமா?

## 5

அன்று உள்ளூர்த் திருவிழாவிற்காகப் பள்ளிக்கூடம், மத்தியான்னத்திற்கு மேல் விடுமுறை அளிக்கப்பட்டது.

இரண்டொரு ஆசிரியர்களைத் தவிர மற்ற யாவரும் சென்று விட்டனர். ராமநாதன் 'ஆபீஸ்' வேலையாக இருந்தான்.

புடைவையின் சலசலப்புச் சத்தம் கேட்டுத் தலை நிமிர்ந்து பார்த்தான். சகுந்தலா நின்றுகொண் டிருந்தாள்.

"ஏன் வீட்டிற்குப் போகவில்லை?" என்று கேட்டான் ராமநாதன்.

"போக வேண்டும்; ஏதாவது வேலை இருந்தால்......" என்று சொல்லிக்கொண்டே மேஜைக்கு அருகில் வந்தாள்.

"உட்காருங்களேன்; சிறிது நேரம் பேசிக்கொண் டிருக்கலாம்."

ஒரு நாற்காலியை இழுத்துப் போட்டுக்கொண்டு, சகுந்தலா உட்கார்ந்தாள். ராமநாதனுக்கு மேற்கொண்டு வேலை ஓடவில்லை. அவளையே பார்த்துக்கொண் டிருந்தான்; தன்னை அவன் உற்றுப் பார்த்துக்கொண் டிருப்பதைத் தெரிந்துகொண்ட அவள், வேறு எங்கோ பார்த்த வண்ணமாக இருந்தாள்.

சகுந்தலாவினுடைய சௌந்தரியமும் யௌவன மெருகும் அவனுடைய உள்ளத்தில் புயலை எழுப்பிக்கொண் டிருந்தன. அவளுடைய ஒடிசலான தேகமும் கடைந்தெடுத்த சிலைக் கைகளும் சிறிது உயர்ந்த கழுத்தும் முகத்தின் முன் நெற்றியில் புரளும் சுருண்ட மயிரும் மயக்கும் இரு விழிகளும் அவனுக்குப் போதையைக் கொடுத்துக்கொண் டிருந்தன. அவள் அணிந்திருந்த ரோஜா வர்ணப் புடைவையும் ரத்தவர்ண ஜாக்கெட்டும் அவனுடைய மனத்தில் குங்கும வர்ணமாகவே தென்பட்டன.

"உங்கள் வீட்டுக்குப் பக்கத்து வீடு காலியாகப் போகிறதாமே! நான் வரலாம் என்று இருக்கிறேன்" என்று ஆரம்பித்தான் ராமநாதன்.

"வேண்டாம், ஸார்!......" என்றாள் சிரித்துக் கொண்டே; ஆனாலும் அதில் ஒரு வேதனை இருக்கத்தான் இருந்தது.

"ஏன்? உங்களுக்கு என்னால் ஏதாவது தொந்தரவு ஏற்படும் என்றா?"

சகுந்தலா உடனே பதில் சொல்லவில்லை. பொங்கி வரும் புன்சிரிப்பை அடக்கிக்கொண்டு, "அப்படி இருந் தாலும் இருக்கலாம்!" என்றாள்.

மேஜைமீது ஊன்றிக்கொண் டிருந்த அவளுடைய தங்கக் கைகளையே பார்த்துக்கொண் டிருந்தான் ராம நாதன். 'இனிக்கும்' அந்தக் கைகளை ஒரு தடவையாவது தொடவேண்டும் என்கிற மோகம் அவனுக்கு நிறைய இருந்தது. அதனால் மெதுவாகத் தன் கையை அந்தப் பக்க மாக நகர்த்திக்கொண்டே இருந்தான். ஒரு மயிரிழை இருக்கும் இரண்டு கைகளுக்கும்; அவனுடைய கருத்தைத் தெரிந்து கொண்டவள்போலத் தன் கைகளை எடுத்துக் கொண்டு, "நான் போய் வரட்டுமா?" என்று எழுந் திருக்க முயன்றாள்.

ராமநாதனுக்கு இருதயம் படபடவென்று அடித்துக் கொண்டது. அன்று தப்பினால் தன் மனக்கருத்தை அவ ளிடம் சொல்ல, வேறு சமயம் கிடைக்காது என்று எண்ணினான்.

"ஏன், நேரமாகிவிட்டதா?" என்று சிரித்துக் கொண்டே கேட்டுவிட்டு, "உட்காருங்கள்; போகலாம். பயமாக இருக்கிறதா? என்ன?" என்றான்.

"பயம் இல்லை; ஆனால் ஏன் அநாவசியமாகப் பிறர் நம்மைச் சந்தேகப்பட வேண்டும்?" என்றாள் அவள்.

"எல்லோருடைய சந்தேகத்துக்கும் ஒரேயடியாக முற்றுப்புள்ளி வைத்துவிடப் போகிறேன், கூடிய சீக்கிரத்தில்!"

அவனுடைய பேச்சின் கருத்தை உணராதவள்போல விழித்தாள்.

"உனக்கே இன்னும் புரியவில்லையா? நான் உன்னைப் பலரும் அறிய மணந்துகொள்ளப் போகிறேன்!"

சகுந்தலா 'இடி இடி'யென்று சிரித்துக்கொண்டே, "இது எத்தனை நாளாகத் தீர்மானம்?" என்று கேட்டாள்.

"உன்னைப் பார்த்த நாள் முதல் என்று சொல்ல மாட்டேன்; சென்ற பத்துப் பதினைந்து நாளாக."

"அப்படி என்றால் உங்கள் மாமா பெண்ணை நீங்கள் உண்மையாகக் காதலிக்க வில்லையா?"

"உண்மையாகத்தான் காதலித்தேன்."

"பின், அதற்குள் என்மீது ஏன் உங்களுக்கு இந்த மோகம் ஏற்படவேண்டும்?"

"சகுந்தலா, நான் உன்மீது கொண்டிருக்கும் பாசத்தை மோகம் என்று கூறாதே!"

"பின் எப்படி ஒரே சமயத்தில் இருவரையும் உங்களால் நேசிக்க முடியும்?"

"எனக்கே தெரியவில்லை, சகுந்தலா!" ராமநாதன் உண்மையை ஒப்புக்கொண்டான்.

"சரிதான்; இந்த இடத்துக்கு நான்; அந்த இடத்துக்கு அவள்; அப்படித்தானே?"

ராமநாதன் பதில் சொல்லவில்லை. அந்தச் சமயத்தில் தன்னுடைய மாமன் மகள் ராஜத்தையும் சகுந்தலையையும் மனத் தராசில் அவன் எடை போட்டுக்கொண்டிருந்தான்.

ராஜமும் நல்ல அழகிதான்; நகரத்திலேயே பிறந்து வளர்ந்தவளாதலால் நாகரிகப் பாங்கு நிறைய இருந்தது. நகத்துக்குச் சாயம் இட்டுக்கொள்வாள்; முகத்திற்கு அழகாகப் பவுடரைப் பூசிக்கொள்வாள்; நுனித் தலையைப் பின்னல் ரிப்பனுல் கட்டி விட்டுக்கொண்டிருப்பாள். கையில் புத்தகமோ அல்லது 'ஸ்வெட்டர்' போடும் 'உல்லன்' நூலும் ஊசிகளுமோ இருக்கும்; அந்த அழகு ஒரு விதம்.

இங்கே சகுந்தலா...கண்வருடைய ஆசிரமத்துச் சகுந்தலையை எத்தனையோ விதங்களில் ஒத்திருக்கிருள். இவளுடைய காம்பீர்யமும் உடம்போடு பிறந்த அமைதியும் பணிவும்...இந்த அழகு வேறுதான்! ராஜத்தின் அவ்வளவு நாகரிகமும் இந்தச் சகுந்தலாவினுடைய கண்ணிமைக்கு முன் நிற்காது என்றுதான் ராமநாதன் முடிவு கட்டினுன்.

ராமநாதன், பதில் சொல்லாமல் இருக்கவே, "நான் அன்றே சொன்னேன், என் துரதிருஷ்டத்தை; என் வாழ்க்கையில் இனிமேல் பூவும் குங்குமமும் இடம் பெறும் என்று நினைக்கிறீர்கள்?" என்ருள்.

ராமநாதன் அதற்குள் இடைமறித்து, "இதோ பார், சகுந்தலா; அப்படி எல்லாம் பேசக்கூடாது. உன் வாழ்க்கையை நான் எப்பாடு பட்டாவது மலர வைக்கிறேன்"

என்று ஆவேசத்துடன் கூறிக்கொண்டே மேஜை டிராயரைத் திறந்து, ஒரு வெள்ளிக் குங்குமச் சிமிழை எடுத்தான்.

"இதோ பார், சகுந்தலா; இது என்ன தெரியுமா?"

அவள் பதில் சொல்லாமல் அவனையே வெறித்துப் பார்த்துக்கொண் டிருந்தாள்.

"இதை எடுத்துக்கொண்டு போய் நீ உபயோகிக்க வேண்டும்!"

சகுந்தலை சிரித்தாள்; "நான் உபயோகிப்பேன்; உபயோகப்படுத்துவதற்கு முன் எத்தனையோ காரியங்கள் இருக்கின்றன; எவ்வளவோ விஷயங்களை ஆலோசிக்க வேண்டும்."

"நீ அப்படியே ஒரு நிமிஷம் இரு; நான் உன் நெற்றியில், அதில் இருக்கும் குங்குமத்தை என் கையால் இடுகிறேன்; அப்போதாவது என் உறுதியில் உனக்கு நம்பிக்கை ஏற்படுமா?"

"இருங்கள்; அவசரப்பட வேண்டாம்; 'நாள்செய்வது நல்லவர்கள்கூடச் செய்ய மாட்டார்கள்' என்று சொல்லுவார்களே. நல்ல நாள் பார்த்துச் செய்யலாமே?"

"சரி, நாளை ஆடி வெள்ளிக்கிழமை; நல்ல சுபதினம்; நீ அவசியம் 'அந்தக் கோல'த்துடன் வரவேண்டும்."

"இப்படிப் பதறினால் எப்படி? அதனால்தான் நான் ஆரம்பத்திலேயே இதை மோகம் என்றேன். உங்கள் மாமா பெண் என்ன ஆவது?"

வீணையில் ஒரு ராகத்தின் ஸ்வரத்தில் வேறு ராகத்தின் ஸ்வரம் கலந்து ஒலிப்பதுபோல அவனுடைய மனத்தில் அந்தக் கேள்வி விகற்பமாக விழுந்தது.

சமாளித்துக்கொண்டு, "என்ன ஆவது? அவள் கன்னிப்பெண்; மாமா பணக்காரர்; நான் இல்லாவிட்டால் அவளுடைய கல்யாணம் நின்று போய்விடும்!" என்றான்.

"எனக்கு மட்டும்?" விஷமச் சிரிப்புச் சிரித்துக் கொண்டே கேட்டாள் சகுந்தலா.

"விளையாடுகிறாயா, சகுந்தலா? நான் இல்லாவிட்டால் உனக்கு இந்தத் தைரியமே ஏற்படாது!"

"சரி, நான் வருகிறேன்" என்று சகுந்தலா கிளம்பினாள்.

"இதை எடுத்துக்கொண்டு போ; நான் சொன்னது ஞாபகம் இருக்கு அல்லவா?"

சகுந்தலா, ராமநாதன் கொடுத்த குங்குமச் சிமிழை எடுத்துக்கொண்டு போனாள். அப்போது அவளுடைய முகத்திலும் ஒரு புதிய சோபை இருக்கத்தான் இருந்தது.

## 6

அன்று இரவு ஏழு மணி இருக்கும்; திடீரென்று ஒரு 'டாக்ஸி' பள்ளிக்கூடத்தின் வாசலில் வந்து நின்றது. ராமநாதனுடைய மாமா பரபரக்க வண்டியிலிருந்து இறங்கினார். அவனுடைய தாய்க்கு மத்தியான்னத்திலிருந்து உடம்பு மிகவும் தடபுடலாக இருக்கிறதென்றும், உடனே ஒரு வாரம் லீவு எடுத்துக்கொண்டு புறப்பட்டு வரவேண்டும் என்றும் சொல்லி, அவனைக் கையோடு அழைத்துக் கொண்டு போய்விட்டார்.

அடுத்த நாள் ஆடி வெள்ளிக்கிழமை; இது ஒன்றையும் அறியாத சகுந்தலா, எண்ணெய் நீராடிவிட்டு, ஈரத்

தலையை நுனி முடிச்சுப் போட்டுக்கொண்டாள்; லேசாகக் கண்களில் மையையும் இட்டுக்கொண்டாள்; நடுங்கும் கைகளினால் நெற்றியில் திலகம் இட்டுக்கொண்டாள்; கண்ணாடியில் தன் அழகைப் பார்த்துக்கொள்ளும்போது அவளுக்கு உடம்பு புல்லரித்தது. பத்துமணிப் பள்ளிக்கூடத்துக்கு ஒன்பது மணிக்கே பள்ளிக்கூடத்துக்கு வந்துவிட்டாள். வாசல் ப்யூன், "அம்மா, ஹெட்மாஸ்டர் பத்து நாள் லீவாம். ஊருக்குப் போயிருக்கிறார்......" என்று சொன்னான். அதைக் கேட்டதும் அவளுடைய இருதயமே நின்றுவிடும்போல் இருந்தது! பைத்தியம் பிடித்தவள்போல் குழாயண்டை ஓடினாள்; முகத்தைக் கழுவிக்கொண்டு, வகுப்பில்போய் உட்கார்ந்தாள்.

அன்று ஊருக்குப்போன ராமநாதன் பிறகு திரும்பவே இல்லை; எட்டாம் நாள் அவனுடைய ராஜீநாமாக் கடிதம் வந்தது. ஊரில் அவனுடைய தாயினுடைய உடல் நிலை நிச்சயமில்லாமல் இருந்ததால், அவசர அவசரமாக ராஜத்தின் கழுத்தில் ஒரு முடிச்சைப் போடச் செய்தார்கள். அந்தச் சூழ்நிலையில் சகுந்தலாவின் ஞாபகமே ராமநாதனுக்கு இல்லை!

கல்யாணம் ஆன இரண்டு நாள் கழித்து, அவனுக்கு ஒரு பார்சல் வந்தது. அதில் ராமநாதன் சகுந்தலாவுக்கு வாங்கிக் கொடுத்த குங்குமச் சிமிழ் இருந்தது! அத்துடன், "இந்தச் செல்வத்தை உபயோகிக்கும் அதிருஷ்டத்தை எனக்கு வரமாகக் கொடுத்த கடவுள், மறைந்துவிட்டார். இனி மூன்றும் முறையாக அந்த அதிருஷ்டத்தைப் பரீக்ஷை செய்ய ஆசைப்படவில்லை!" என்று எழுதியிருந்தது.

"இது ஏது?" என்று அவன் மனைவி கேட்டாள்.

"என்னோடு வேலை பார்த்து வந்த வாத்தியாரம்மாள் உனக்கு அனுப்பியிருக்கிறாள்" என்று அவள் கையில் அதைக் கொடுத்தான்.

அவள் அதை மகிழ்ச்சியோடு வாங்கிக்கொண்டாள். அவளுக்குத் தெரியுமா அதனூடே புதைந்து கிடந்த ரகசியங்கள்!

# முதல் குழந்தை

கி. சரஸ்வதி அம்மாள்

“குழந்தை என்ன பண்ணுகிறுன்? இன்று உடம்பு கொஞ்சம் தேவலையா?”

“தேவலே இல்லாமல், என்ன? அவனுக்கு என்ன பெரிதாக வந்துவிட்டது? பவானிதான் தொட்டதற்கெல்லாம் பயந்து போகிருள்.”

“இருக்குமோ இல்லையோ; முதல் குழந்தை அல்லவா?”

“முதல் குழந்தை என்ருலும், இப்படியா! நான் பார்த்ததில்லை. எல்லாருந்தான் தலைச்சன் குழந்தை பெற்றிருக்கிருர்கள். யாரும் இப்படித் தவித்துப் போனதில்லை!”

“குழந்தை சுவர்ண விக்கிரகம்போலே இருக்கிருன்.”

“அழகில்லாவிட்டாலும் யாருக்கும் அவரவர் குழந்தை என்கிறது இல்லாமல் போகுமா? என்னவோ இவள்தான் தனியாகப் பெற்றுவிட்ட மாதிரி பிரமாதப்படுத்துகிருள். குழந்தைக்குத் தலையை வலித்து விட்டால் அதோடு உயிரை விடுகிருள்.”

இந்தச் சம்பாஷணை, வாசல் திண்ணையில் பவானியின் தாய்க்கும், அவர்கள் பக்கத்து வீட்டு அம்மாளுக்கும் நடந்தது.

காமரா உள்ளில் தூங்கிக்கொண்டிருந்தது குழந்தை. அந்தப் பக்கத்தில் உட்கார்ந்திருந்த பவானியின் காதுகளில் இந்தப் பேச்சுத் தெளிவாக விழுந்தது. குழந்தையின் ஆண்டு நிறைவு கழித்துப் பெற்றோரின் வற்புறுத்தலுக்கு இணங்கி, அவள் தன் பிறந்தகத்தில் சில நாள் தங்கிப் போக வந்திருந்தாள். அப்படி வந்த இடத்தில்தான் குழந்தைக்கு இரண்டு நாளாகச் சிறிது ஜலதோஷம் பிடித்து, லேசாகக் காய்ச்சலும் அடித்துக்கொண்டிருந்தது. இன்று தேவலையாகி இருந்தது. 'டாக்டர் இல்லாத பட்டிக்காட்டில் வந்திருக்கிறோமே; எங்காவது நிமோனியா என்று பெயர் வைத்துவிட்டால் என்ன செய்வது!' என்று அவன் பட்ட கவலையைத்தான் அவள் தாய் குத்தலாகச் சொல்லிக்கொண்டிருந்தாள். 'எல்லாருக்கும் முதல் குழந்தை பிறக்கவில்லையா என்கிறாள். ஆனால் என் முதல் குழந்தையும், மற்றவர்களுடைய முதல் குழந்தைகளும் ஒன்றாகிவிடுவார்களா? அம்மாவுக்கு நானும் முதல் குழந்தையாகப் பிறந்தேன். அவளுக்கும் என்னிடம் அன்பு இருக்கத்தான் இருந்தது. இருந்தாலும் என் குழந்தையிடம் எனக்கு இருக்கும் ஆசைக்கு அது உறைபோடக் காணுமா?' என்று நினைத்தாள் பவானி.

அவளைச் சதா வருத்திக்கொண்டிருந்த மனத் துயரத்தைப் போக்கடித்து, அவள் வாழ்க்கையைப் பாழ் பண்ணிக்கொண்டு விடாதபடி காப்பாற்றினான் அவள் மகன். அதிலிருந்து சந்தோஷமற்று, இருள் சூழ்ந்துகிடந்த அவள் இருதயத்தை, சூரியனைக் கண்ட தாமரையென மலரச் செய்த அவள் கண்மணிக்கு உலகில் மற்றக் குழந்தைகள் ஈடாவார்களா? மாட்டார்கள்.

'பிள்ளைக் கலிதீர்க்க வந்தவன், 'மலடி என்கிற அவச் சொல்லை நீங்கப் பிறந்தவன்' என்று அவள் பெருமைப் படவில்லை. குழந்தை பிறக்க ஒன்றும் நாளாகிவிடவில்லை. உரிய காலத்தில்தான் அவள் குழந்தையை ஈன்றாள். அவ் விதமானால் பவானி, தன் பிள்ளையைத் தனிச் சிறப்புடை யவனாகக் கருத என்ன விசேஷம் இருக்கும்? பவானியின் அடக்கமான சுபாவமும் அவள் நுட்பமான இருதயத் திலே தோன்றும் உணர்ச்சிகளும் அவளைப்பற்றிய மற்ற எல்லா விவரங்களும் தெரிந்தால்தான், இருண்டு சூன்ய மாகத் தோன்றின அவள் வாழ்க்கை, அவள் தலைச்சன் பிள்ளையால் எவ்விதம் இன்பம் நிறைந்து பிரகாசமாயிற்று என்பது தெரியவரும்.

* * *

'சிவப்பே ஓர் அழகு, சூடே ஒரு ருசி' என்று அழகிற்கு முக்கிய அம்சமாகச் சொல்லும் சிவப்பு நிறம் அவளுக்கு இல்லை. அதனால் அவள் அழகோடு சேர்த்தியில்லை என்றே எல்லாரும் நினைத்தார்கள். சிலரைப்போலத் தங்களிடத் தில் உள்ள சுய அபிமானத்தினால் தங்கள் குறைவை அவ்வளவாகப் பொருட்படுத்தாமல் இருக்கும் சுபாவம் உடையவள் அல்ல அவள். அவளுக்கு, தான் எல்லா அம்சத் திலும் உயர்வாக இருக்க வேண்டுமென்று ஆசை. அந்த ஆசைக்கு முதல் இடையூறாக அமைந்தது அவள் சிவப்பு இல்லாமல் போன குறை. கண்களால் பார்த்ததுமே ஜனங்கள் உயர்வாகக் கருதும்படி செய்வது ஒருவருடைய சௌந்தரியந்தானே! அது இல்லாவிட்டால் மற்ற உயர்வு கள் இருந்தாலும் அவை எளிதில் பிரகாசிப்பதில்லையே!

ஆனால் பவானிக்கு மன்மதனை யொத்த அழகு வாய்ந்த கணவன் கிடைத்தான். அதனால் அவள் தன் குறையை மறந்து சந்தோஷப்படலானாள். அவள் கணவன்

சிவந்த மேனியும் உயரமான உடலும் களை பொருந்திய முகமும் படைத்தவனாய், பார்ப்பதற்குச் சுந்தர புருஷனாய் விளங்கினான். 'திருப்பதி மரப்பாச்சி போன்ற கறுப்பு உருவம் கொண்ட எங்கள் பவானிக்கு, இத்தனை அதிருஷ்டம் இருந்ததே!' என்று அவள் அம்மாவே எல்லாரிடமும் சொல்லிப் பெருமைப்பட்டு மகிழ்ந்து போனாள் என்றால் சொல்லுவானேன்?

'காக்கைக்கும் தன் குஞ்சு பொன்குஞ்சு' என்று நினைக்க வேண்டிய தாயே, மகளைக் குறைத்துக் கூறிக் கொண்டாளென்றால் மற்றவர்களைப்பற்றிக் கேட்க வேண்டுமா? கல்யாணத்தின்போது, மணையில் பவானியையும், அவள் அகமுடையானையும் சேர்த்துப் பார்த்தவர்கள் பவானியின் அதிருஷ்டத்தை எண்ணி, அதிசயித்து மெச்சினார்கள். பவானியும் அப்பொழுது அவைகளைக் கேட்டு மகிழ்ந்துதான் போனாள். தான் எப்படி இருந்தாலும், தனக்கு எல்லோரும் கண்டு புகழும்படியான பேரழகு வாய்ந்தவன் கணவனாக வாய்த்துவிட்டான் என்கிறதில் அவளுக்கு உண்டான ஆனந்தம் அவளை ஆகாயத்திற்கே கொண்டுபோயிற்று.

புக்ககம் சென்று வசிக்கத் தொடங்கின பிறகுதான் அவள் ஆகாயத்திலிருந்து இறங்கிப் பூமிக்கு வந்தாள்: மெள்ள மெள்ள மறுபடியும் தன்னுடைய ரூபக் குறைவை எண்ணி, வருந்தும் நிலை உண்டாயிற்று. புது மாட்டுப் பெண்ணைப் பார்க்க வந்த அவள் மாமியாரின் சிநேகிதிகள், "ராஜாவுக்குப் போயும் போயும் இப்படி அழகில்லாத பெண்ணைப் பிடித்துக்கொண்டு வந்திருக்கிறாயே!" என்று பவானிக்கு எதிரிலேயே கேட்டு, அவளுக்கு இருந்த வருத்தத்தை மேலும் பெருக்கினார்கள். "அண்ணாவுக்கு மன்னி சந்திரனில் களங்கம்போல; அழகிய நெற்றிக்குச் சாந்துப்பொட்டுப் போல" என்

றெல்லாம் அவளுடைய நாத்தனார்கள் சதா விளையாட்டாக வர்ணித்தது கேட்டு, அவள் உள்ளுக்குள்ளே புழுங்கினாள். அவர்கள் நாவல் படித்தவர்கள். அதனால்தான் அப்படிச் சாதுரியமாகச் சொன்னார்கள்.

அவர்கள் வீட்டில் அவள் மாமியார், நாத்தனார் இருவர், இரண்டு ஓர்ப்படிகள் எல்லாருமே மிகுந்த லக்ஷணம் பொருந்தியவர்களாகவே இருந்தார்கள். விதவைக் கோலத்தில் இருந்தாலும் அவள் மாமியாரின் அழகு குன்றாமல் சோபித்தது. அவர்கள் மத்தியில் அன்னக் கூட்டத்தின் நடுவில் காக்கைக்குச்சமமாகத் தான் இருப்பதாகப் பவானி எண்ணினாள். ஒருநாள் அவர்கள் அகத்திற்கு வந்த பந்து ஒருத்தி, "ராஜா ஆயிரம் வக்கணை சொல்வானே; பவானியை எப்படிக் கல்யாணம் பண்ணிக் கொண்டான்?" என்கிற பாவனையில் கேட்டாள்.

"ஏன், பவானிக்கு என்ன குறைவு? அடுப்பங்கரைப் பெண்ணுக்கு இதைவிட அழகு என்னத்துக்கு?" என்று அவள் மாமியார், வந்தவள் வாயை அடக்கப் பேசினாலும், பவானியின் மனத்தில் அது ஊசி நுழைவதுபோல் நுழைந்து துன்புறுத்தியது.

அதுவரையும் தனக்கு அழகான கணவன் வாய்த்து விட்டான் என்கிற திருப்தியிலேயே அவள் இருந்தாள். ரூபமற்ற தன்னை மணந்தது அவனுக்கு எப்படி இருக்கும் என்பதை அவள் சிந்தித்துப் பார்க்கவே இல்லை. இப்பொழுதோ மனசு அதில் சென்று லயித்தது. அவனையும் அவன் சகோதரர்கள் இருவரையும் அவள் கூர்ந்து கவனிக்கத் தொடங்கினாள். அவன் தமையன்மார்கள் தங்கள் மனைவிகளிடம் நடந்துகொள்ளும் விதத்தையும், அவன் தன்னிடம் நடப்பதையும் ஒப்பிட்டுப் பார்க்க ஆரம்பித்தாள். அந்தத் தம்பதிகள் ஒருவருக்கொருவர் எல்லா

ருடைய எதிரிலேயும் சங்கோசமின்றிப் பரிகாசமாகப் பேசிச் சிரித்து விளையாடுகிறார்கள். அவள் கணவனோ அவர்களுக்கு முற்றும் விரோதமாக இருக்கிறான். இன்னொருவர் எதிரில் அவன் அவளுடன் சாதாரணமாகக் கூடப் பேசுவதில்லை. கண்ணோடு கண் நோக்கும்படி அவன் அவளைப் பார்ப்பதே இல்லையே! 'மணமான புதிது, வெட்கமாக இருக்கும்' என்று அவள் முதலில் நினைத்தாள். அந்த எண்ணம் இப்போது மாறி, வேறுவிதமாக எண்ணலானாள். 'இந்த அழகான பெண்டாட்டியுடன் பேச்சென்ன வேண்டியிருக்கிறது!' என்ற அருவருப்பினால் பேசுவதில்லை, ஆசையாகப் பார்ப்பதுகூட இல்லை என்று அவள் நிச்சயித்தாள். இவ்விதம் சந்தேகங்கள் எழத் தொடங்கின பிறகு கணவனுடைய ஒவ்வொரு நடத்தைக்கும் அவள் மனம் காரணங்களைக் கற்பிக்க ஆரம்பித்தது.

ஒரு சமயம் அவர்கள் எல்லாரும் நாடகம் பார்க்க வென்று கிளம்பினார்கள். 'இரவு நேரமாகுமே; ஆட்களை மட்டும் நம்பி, வீட்டைவிட்டுப் போகிறதா?' என்ற சந்தேகம் அவர்களுக்கு எழுந்தது. ஆண்பிள்ளைகள்தாம், நாடகம் பார்க்கவேண்டும் என்ற விஷயத்தையே ஆரம்பித்தவர்களாகையால் அவர்கள் போகவேண்டியது முக்கியமென்று தீர்மானமாயிற்று.

பவானியின் மாமியார், "இந்த வயசில் எனக்கு எதற்கு நாடகமும், இன்னொன்றும்? நான் வரவில்லை; நீங்கள் போய்வாருங்கள்" என்றாள்.

"நன்றாயிருக்கிறது அம்மா! நீ இல்லாமலா? உனக்குத்தான் சிவபக்தி அதிகம். சிவலீலா நாடகம் நீ கட்டாயம் பார்க்கவேணும், உனக்காகத்தானே நாங்களே போகிறோம்?" என்று மூன்று பிள்ளைகளும் பிடிவாதமாகச்

சாதித்துவிட்டார்கள். பவானியின் ஓர்ப்படிகள் இரு வரும், "நாங்கள் இருக்கிறோம்" என்று சொன்னதற்கு, "போதுமே; சிறிசுகள் நீங்கள் இருக்கிறதாவது!" என்று மாமியார் சொல்வதற்குள்ளேயே, அவர்கள் கணவன் மார்கள் இருவரும் தங்கள் மனைவிமார் நின்றால் தாங்களும் நின்றுவிடுவதாகப் பயமுறுத்தினர்கள். "மனைவியை விட்டு எங்களுக்கு நாடகம் ரசிக்காது' என்று சொல்லி விட்டார்கள். நாத்தனர்கள் சின்னப் பெண்கள். அவர் களை விட்டுப்போவது என்பது சாத்தியம் இல்லை.

"நான் நின்றுகொள்ளட்டுமா?" என்று பவானி தயக்கத்துடன் கேட்டாள். தமையன்மார்களைப்போல, அவள் போகாவிட்டால் தானும் போகவில்லை என்று தன் கணவன் ஏதாவது சொல்லுவானே என்ற ஆசையில் அவள் அவ்விதம் சொல்லியிருந்தால், அவள் மிகுந்த ஏமாற்றத்திற்குத்தான் ஆளாகி இருக்கவேண்டும்.

"காவலுக்கு ஆட்கள்மட்டும் போதாமல் என்ன?" என்று பட்டும் படாமலும் சொல்லிப் பேசாதிருந்தான், அவள் கணவன். அவள் தங்களுடன் வருவதும் வராத தும் ஒன்றுதான் என்ற பாவனையில் அவன் இருப்ப தாகவே அவளுக்குப் பட்டது.

"சின்னப் பெண்; நீ தனியாக இருக்கிறதாவது! நீ மட்டும் நாடகம் பார்க்கவேண்டாமா? ராஜா சொல்வது போல, வீட்டை யாரும் கொண்டுபோய்விட மாட்டார் கள்" என்று அவள் மாமியாரே அழுத்தமாகச் சொல்லிப் பிரச்னையைத் தீர்த்தாள்.

"மைத்துனரின் கெட்டிக்காரத் தனத்தைப் பார். எப்படியும் காரியம் நடந்துவிடும் என்னும் தெம்பில் தமையன்மார்களைப்போலப் பிதற்றமல், சாமர்த்தியமாக

வாயை மூடிக்கொண் டிருந்து விட்டார்'' என்று ஓர்ப்படிகள் ஒருவருக்கொருவர் சொல்லிக்கொண்டார்கள்.

அந்தப் பேச்சுப் பவானியின் காதில் விழவில்லை 'தங்கள் கணவன்மார்கள் தங்களிடம் ஆசையாக இருக்கும் பெருமையை அவர்கள் அவ்விதம் பறை சாற்றிக்கொள்ளுகிறார்கள். நம்மிடத்தில் அவர்களுக்கு உள்ளுக்குள் ஏளனங்கூட இருக்கும்' என்பது அவள் எண்ணம். 'கொண்டவன் தூற்றினால் கூரையும் தூற்றும்' என்பதல்லவா பழமொழி?

மேலும் மேலும் அவள் மனப்புண் அதிகமாவதற்கு ஏற்றபடியே காரியங்கள நடந்துகொண்டு போயின. அவள் கணவனுடைய கலாசாலை நண்பன் ஒருவன், புதிதாக மணமானவன், தன் மனைவியுடன் அவ்விடத்திற்குப் புதுக் குடித்தனம் செய்ய வந்திருந்தான். அவனைப் பார்த்து வரவேண்டியது முறை என்று சொல்லிப் பவானியின் கணவன் ராஜா, அவளையும் அழைத்துக் கொண்டு புறப்பட்டான். அவர்கள் இருவர் மட்டுமே தனித்துச் சென்றுங்கூட வழியில் அவன் அவளுடன் அதிகம் அளவளாவவில்லை. "அந்தத் தம்பதிகள் மிக நாகரிகமாக இருப்பார்கள் என்று நினைக்கிறேன். உனக்கு அது அதிகமாகத் தோன்றலாம், நீ அதை அவர்களுக்குத் தெரியும்படி வெளிக்காட்டக் கூடாது'' என்று மட்டும் எச்சரிக்கை செய்தான்.

அவள் என்ன அவ்வளவு பட்டிக்காடா? நாகரிகமாக இருப்பவர்களைப் பார்த்ததில்லையா? அதிசயத்தில் வாயைப் பிளந்துகொண்டு நிற்பாளா? அவன் எச்சரிக்கையைக் கேட்டு அவளுக்கு மிக்க வருத்தம் உண்டாயிற்று. அவனோடு முதல் முதல் தனித்துப் போகிறோம் என்ற உற்சாகம் சிறிது முதலில் ஏற்பட்டது; அதை இது போக்கடித்து விட்டது.

'கிராமத்திலே பிறந்தவர்களுக்கும் மனம் என்பது ஒன்று உண்டு. அவர்களுக்கும் எல்லாவற்றையும் நுட்பமாகக் கிரகித்துக்கொள்ளும் சக்தியும் புத்தியும் இருக்கும் என்பது இவருக்குத் தெரியவில்லையே!'' என்று அவள் வருந்தினாள். அவள் பட்டிக்காட்டிலே பிறந்தாலும் ஏதோ சில வகுப்புக்கள் படிக்கவேண்டி மாமாவின் அகத்தில் பட்டணத்தில் கொஞ்சநாள் இருந்திருக்கிறாள். அவள் நடை உடை பாவனைகளில் பட்டணத்துப் புது நாகரிகத்தை அநுசரிக்கா விட்டாலும், நாகரிகமா இருப்பது என்றால் என்ன என்பது அவளுக்குத் தெரியும். அதை அறியாமல் அவன், அவளை முழுப் பட்டிக்காடாக வைத்துப் பேசுகிறான் என்றால் அவளுக்கு வருத்தம் ஏற்படாமல் என்ன செய்யும்?

அந்த நண்பனின் வீட்டை அவர்கள் அடைந்த பொழுது அவள் எதிர்பார்த்ததற்கு மேலாக இருந்தது, அந்தத் தம்பதிகள் நடந்துகொண்ட மாதிரி. அந்தப் பெண் நல்ல அழகியாக இருந்தாள். கொடி போன்ற துவண்ட உடலும், பால்போல் வெளுப்பான மேனியும், நல்ல வட்ட வடிவமான அழகிய முகமும் படைத்தவளாக இருந்தாள். அவள் கணவன் அவள் அழகில் சொக்கிப்போயிருக்கிறான் என்பது வெட்டவெளிச்சமாகத் தெரிந்தது. இருவரும் பவானிக்கும் அவள் அகமுடையானுக்கும் எதிரில், மற்றொருவர் தங்களைப் பார்த்துக்கொண்டிருக்கிறார்கள் என்னும் நினைவே இல்லாதவர்களாக, ஒருவருக்கொருவர் வெகு சுதந்தரத்துடன் நடந்துகொண்டார்கள். அவர்கள் புதுக்குடித்தனம் வைத்திருந்தார்கள். வந்தவர்களும் உட்கார்ந்து, அவர்களும் உட்கார நாற்காலிகள் போதவில்லை.

''வா, உன்னை நான் மடியில் உட்கார்த்திக்கொள்கிறேன்'' என்று அவன், தான் ஒருநாற்காலியில் உட்கார்ந்து

கொண்டு பெண்டாட்டியிடம் கூறினன். "போதுமே! எனக்கொன்றும் உங்கள் மடி வேண்டியது இல்லை. பக்கத்தில் இடம் கொடுங்கள், போதும்" என்று அவள் சொல்லி, அவனை நாற்காலியில் ஒருபுறமாய்த் தள்ளிக்கொண்டு இடித்து உட்கார்ந்தாள்.

"என் மடியில் உட்கார்ந்தால் என்னவாம்? நம்முடைய ஈசுவராதிகள் அவ்வளவு பேரும் பெண்டாட்டியை மடியில்தானே வைத்துக்கொண் டிருக்கிறார்கள்; இல்லையாடா ராஜா?" என்று பவானியின் கணவனைத் தனக்குச் சிபாரிசு செய்ய அழைத்தான் அந்த நண்பன்.

"மடியில் மட்டும் என்ன? மார்பிலும் தலையிலுங் கூட வைத்துக்கொண் டிருக்கிறார்கள்" என்று ராஜா விளையாட்டாக விடை பகர்ந்தபொழுது, "நீங்கள் இவருக்குச் சரியான சிநேகிதராக இருப்பீர்கள்போல் இருக்கிறதே! இவரை மேலும் தூபம் போட்டுத் தூண்டிவிடுகிறீர்களே!" என்று, சற்றே கோபித்துக்கொள்ளும் பாவனையில் அந்தப் பெண் கூறினாள்.

அவர்கள் ஒருவரை ஒருவர் பரிகசித்துக்கொண்டு திரும்பத் திரும்பத் தங்களைப்பற்றியே பேசினார்களே தவிர, பொதுவான சம்பாஷணையே நடக்கவில்லை. காலையில் அவள் உப்புப் போட மறந்து, உணவு சமைத்ததை அவன் பரிகாசமாக எடுத்துச் சொன்னான். தனக்குச் சமையலில் உதவி செய்வதாக வந்து, தன்னையே சுற்றிக்கொண்டு அவன் தொந்தரவு கொடுத்ததால், தனக்குத் தட்டுக்கெட்டுப் போய்விட்டது என்று, அவன்மேல் அவள் குற்றத்தைச் சாட்டினாள். இவ்விதம் அவர்கள் ஒருவருக்கொருவர் கேலி வார்த்தைகள் பரிமாறிக் கொள்வதைப் பவானி, நாடகம் பார்ப்பதைப்போலப் பார்த்துக்கொண்

டிருந்தாள். அவளுக்கு அதில் கலந்துகொண்டு ஒரு வார்த்தையாவது பேசத் தெரியவில்லை.

அவர்கள் விடை பெற்றுக்கொண்டு கிளம்பின பொழுது அந்தத் தம்பதிகளும் சிறிது தூரம் அவர்களுடன் உலாவ வருவதாகப் புறப்பட்டார்கள். "நான் என்ன உடுத்துக்கொள்ளட்டும்?" என்று அவள் தன் கணவனைக் கொஞ்சலாகக் கேட்டாள்.

"இவள் வெளியே கிளம்பினுல், நான்தான் ஆடை பொறுக்கிக் கொடுக்க வேண்டும், நீங்கள் ஒன்றும் இது மாதிரி ராஜாவைத் தொந்தரவு செய்ய மாட்டீர்களே?" என்று அவன், தன் மனைவியிடத்தில் இருக்கும் சந்தோஷத்தில் பவானியைப் பார்த்துக் கேட்டான். அவன் திடீரென்று அவ்விதம் கேட்டால் அவள் என்ன பதில் சொல்லுவாள்? ஏதோ விளையாட்டுக்கு அவன் கேட்டாலும் அவளுக்கு ஒன்றும் சொல்லத் தெரியாமல் போயிற்று.

"நீ கலா ரசிகன். உன்னைப்போலவா நான்? என்னைக் கேட்டால் எனக்கு என்ன சொல்லத் தெரியும்?" என்று ராஜாதான் அவளுக்காக ஏதோ பதில் சொன்னுன்.

பவானிக்கு, தான் பேசக்கூடத் தெரியாமல் இடித்த புளிமாதிரி அவர்கள் மத்தியில் உட்கார்ந்திருப்பதாகப் பட்டது அவள் கணவன், அந்தத் தம்பதிகள், ஆகிய மூவரும் உற்சாகமாகப் பேசுவதற்குத் தான் தடையாக இருப்பதாக நினைத்தாள். அவளுக்கு அவர்களோடு சேர்ந்து, அந்த இடத்தில் இருக்கவே பிடிக்கவில்லை. அந்த நண்பனின் மனைவியைப்போலத் தான் அழகில்லை என்றுலும், அவள், தன் கணவனுக்குச் சமமாகச் சமத்காரமாக வார்த்தையாடுகிருளே, அதுமாதிரியும் தனக்குச் சிறிதும்

தெரியவில்லையே என்ற நினைப்பு, பின்னும் அவளை மௌனம் சாதிக்கச் செய்தது.

பிறகு அவர்கள் வீடு திரும்பினபொழுது வழியில் அவள் கணவன், "என்ன, அப்படிப் பேசாமடந்தையாக உட்கார்ந்திருந்தாயே?" என்று கேட்டான். அவன் குரலில் கோபம் தொனிப்பதாக அவளுக்குத் தோன்றிற்று. "எனக்குப் பேசத் தெரிந்தால்தானே?" என்று தாழ்மையாகப் பதில் சொன்னாள். "பேசத் தெரியாதென்று உண்டா? அப்படி என்ன பெரிய விஷயங்கள் பேசிவிட்டார்கள்? எப்பொழுதும் நாலு பேர் நடுவில் கலகலப்பாக இருக்கத் தெரிந்துகொள்ள வேண்டும்; தெரியுமா? அது தான் அழகு" என்று அவன் சற்றுக் கடுமையாகச் சொன்னான்.

சிநேகிதன் மனைவியையும் தன்னையும் ஒப்பிட்டுப் பார்த்து, தன்னுடைய குறைகளைப் பின்னும் அதிகமாகக் கண்டு, அவனுக்குத் தன்னிடம் வெறுப்பு மேலிட்டிருக்கிறது, என்று அவள் நினைத்தாள். துக்கம் அவள் நெஞ்சை அடைத்தது. 'நம்மைச் சொல்லுகிறாரே! இவர் என்ன செய்கிறார்? அந்தப் பெண்ணின் கணவனைப் போலவா இவர் நம்மிடம் ஆசை பொங்க நடந்துகொள்ளுகிறார்? வீட்டில் இவர் சகோதரர்களைப்போலக்கூடச் சகஜமாக நம்மிடம் பழகுவதில்லையே! வெளிப்படையாக அன்புகாட்டி, ஒரு வார்த்தை சொல்லுவதில்லையே! அப்படி இருக்கத் திடீரென்று இவரோடு தாராளமாக இருக்க எப்படித் தோன்றும்? இவர் அதை எதிர்பார்ப்பதுதான் நியாயமா?'

அவள் கண்களில் நீர் துளித்தது. அதை அரைகுறையாகக் கவனித்த அவன், "உன்னை யார் என்ன சொல்லிவிட்டார்கள்? எதற்காக அழுகிறாய்?" என்று

சொல்லி, மேலே ஒன்றும் பேசாமல் நிறுத்திக்கொண்டான். தான் சாதாரணமாகச் சொன்னதை அவள் தப்பாக எடுத்துக்கொள்ளுகிருள். மேலும் மேலும் அந்தப் பேச்சு வேண்டாமென்று அவன் நிறுத்தினுன். ஆனுல் காரணம் எதுவானுலும் பவானிக்குப் பேச்சு அந்த மட்டோடு நின்றதில் ஆறுதல் உண்டாயிற்று.

பேச்சுத் தொடர்ந்து நடந்தால் அவள் மனத்திலே உறுத்திக்கொண்டிருக்கும் எண்ணங்களை அவள் அசட்டுத்தனமாக வெளியிட நேரலாம். அவற்றை அவன் தெரிந்துகொள்ளாதவரைக்கும் நல்லதல்லவா? தெரிந்தால் அந்தப் பெண்ணிடத்தில் அவளுடைய அழகுக்காகவும் சமர்த்துக்காகவும் அவளுக்குப் பொருமை என்று எண்ணிவிடுவான். அவனும் அந்த அழகில் ஈடுபட்டுத்தான் அவர்களுடன் அவ்வளவு உற்சாகமாகப் பேசிக்கொண்டிருந்தான் என்பதை ஒப்புக்கொள்வானு? அதற்குத் தடையாக இருந்தாளென்று பவானியிடம் அவனுக்குக் கோபம் வருகிறது என்பதையும் ஏற்றுக் கொள்வானு? மாட்டான். தன்னைக் கலாரசிகன் அல்ல என்று கூறிக்கொண்டானே, பவானி மட்டும் அந்த நண்பனின் மனைவியைப்போல அழகியாக இருந்தால் அப்பொழுது அவன் தானுகவே ரசிகனுக மாறி, அவள் ஆடை அலங்காரங்களில் சிரத்தை காண்பிக்க மாட்டானு?— இவ்வாறெல்லாம் இருந்தது அவள் மனம்.

அவளுக்கு ரூபம் இல்லை, படிப்பு இல்லை, சமர்த்தும் இல்லை. இவ்விதம் ஒரு குறை இருந்துகொண்டு எல்லாக் குறைகளையும் அவளிடம் தோன்ற வைக்கிறது. 'இதனுலெல்லாம் அவருக்கு என்னிடம் பிரியம் இல்லை' என்று உறுதியாக எண்ணினுள் பவானி. 'என்னிடம் அன்பில்லாமல் இருக்கிறதே! என்னை ஏன் மணந்துகொண்டார்?' இந்தக் கேள்வியைத் தனக்குள்ளேயே கேட்டுக் கேட்டு

மனம் புழுங்கினாள். 'அம்மாவின் வற்புறுத்தலுக்கு வேண்டிக் கல்யாணம் செய்துகொண்டு விட்டாரோ?' ஆனால் அவள் மாமியார், ஒரு தரமும் அப்படிச் சொன்னதில்லை. "ஏண்டா, பெண்ணைப் பார்த்தாயே; கறுப்பே; பிடித்ததா, தேவலையா?" என்று பவானியைப் பார்த்து வந்த மகனிடம் அவள் கேட்டதற்கு, "அம்மா, நீதான் சொல்லுவாயே, அம்பாளே மரகத வர்ணமென்று. உனக்குப் பிடித்திருக்கிறது; குலம் இருக்கிறது; பணம் இருக்கிறது; குணமும் இருக்கும். வேறே என்ன வேணும்?" என்று பதில் சொன்னானும். மாமியார் வாய்க்கு வாய் அதைச் சொல்லுகிறாள். 'பவானி கறுப்பே!' என்று யாராவது கேட்டால், "விதியுடையாள் கண்ணுக்கு விளக்காய் இருப்பாள்; அவனுக்குப் பிடித்துவிட்டது; பண்ணிக்கொண்டிருக்கிறான்" என்றுதான் அவள் பதில் சொல்லுகிறது வழக்கம். இதைப் பவானி அடிக்கடி கேட்டிருக்கிறாள். இருந்தாலும் என்ன?

அவன் வாய்விட்டுச் சொல்லாவிட்டாலும் மனத்தினுள் அவனுக்குத் தன்னிடம் பிரியம் இருக்க நியாயம் இல்லை என்று அவளுக்கு நிச்சயமாகத் தோன்றிற்று. சந்தோஷம் இல்லாமல் நாட்களைக் கழிக்கத் தொடங்கினாள். இனி அவனோடுகூட ஜன்மத்துக்கும் எங்கும் போகக்கூடாது என்று உறுதி கொண்டாள். தன்னை உடன் அழைத்துச் செல்வதால்தானே அவனுக்குத் தன்னால் அவமானம் ஏற்படுகிறது? வெறுப்பும் அதிகமாகிறது? அதற்கு இடம் கொடுக்கக்கூடாது என்னும் எண்ணம் அவளுக்கு. பிறகு வாழ்க்கையே பிடிக்காமல் அவளுக்கு அலுத்துவரக் கேட்கவேண்டுமா? வீட்டில் நாத்தனார்கள், ஓர்ப்படிகள் இவர்களிடத்திலுங்கூட மன வேற்றுமை கொண்டாள். அவர்கள் பேசிய சாதாரண வார்த்தைகளெல்லாம் விபரீதமாகப் பட்டன.

ஒரு சமயம் அவள், ஸ்நானம் செய்யவில்லையோ என்ற அரை குறையான சந்தேகம் எழுந்தது. "மன்னி, உனக்குப் பெண் வேணுமா? பிள்ளை வேணுமா? குழந்தை யாரைக்கொண்டு பிறக்கவேணும்? உன்னையா, அண்ணுவையா?" என்று அவள் நாத்தனுர்கள் வேடிக்கையாகக் கேட்டார்கள். தன் ரூபத்தை அவர்கள் கேலி செய்வதாக அவள் எண்ணிக்கொண்டாள். அதற்கு அவள் ஓர்ப்படிகள் சிரித்தபொழுது அவளுக்கு அவர்களிடம் மிகுந்த கோபமே வந்தது. யாருடனும் சகஜமாக இராமல் ஒதுங்கி இருக்கத் தொடங்கினுள்.

'பவானிக்கு ஏன் நம்மைக் கண்டால் இப்படிப் பிடிக்காமல் போய்க்கொண்டு வருகிறது?' என்று அவள் புக்ககத்தவர்கள் நினைக்கலானுர்கள். ஒருவரை ஒருவர் புரிந்து கொள்ளாமல் சிறு குற்றங் குறைகள் தலைகாட்டத் தொடங்கி, மனஸ்தாபம் உண்டாக ஆரம்பித்தது. அவள் தன் செயல்களாலும் பேச்சாலும், புக்ககத்தில் தனக்கு வேண்டியவர்கள் யாரும் இல்லை என்கிற நிலைக்கு வந்து விட்டாள். இவ்விதம் அங்கு எல்லாரையும் பகைத்துக் கொண்டு போவதில் நம் கணவருக்கு எவ்வளவு ஏமாற்றத்தையும் வருத்தத்தையும் கொடுக்கிறேம் என்பதை அவள் புரிந்துகொள்ளவே இல்லை.

பட்டணவாசத்துப் பெண்களுடைய அடக்கமற்ற மாதிரிகள் பிடிக்காததனுலேயே, கிராமத்துப் பெண்ணுன அவளை மணந்தான் அவன். சுபாவத்தில் அவளுக்கு அமரிக்கையான குணம் பழகியிருக்குமென்று எதிர்பார்த்தான். நல்ல முறையில், வேணுமென்ற அளவு, புது நாகரிகத்தை அவளுக்குக் கற்றுக்கொடுத்து, தன்னுடைய தாம்பத்திய வாழ்க்கையைத் தன் மனம்போல உயர்வாகச் செய்து கொள்ள வேண்டுமென்று அவன் நினைத்திருந்தான். அவ்வளவையும் தன் சொந்தக் கற்பனைகளால் ஏதோ ஒரு

விதமாக நடந்து பாழ்படுத்திக்கொண்டாள் பவானி. அவன் தன்னிடம் நிஜமான வெறுப்புக் கொள்ளும்படி செய்தாள். அவள் தன் மனக்குறையை வாய்விட்டு அவனிடம் சொல்லியிருந்தாலும் அவன் அதை ஒருவிதமாகத் தீர்த்திருப்பான். அவ்வளவுக்கு அவனிடம் சொந்தம் தோன்றினல் அல்லவா அவளுக்கு அது சாத்தியமாகும்? ஆகையால் அதற்கு வழி இல்லாமல் போயிற்று. புக்ககத்தில் இருக்கவே அவளுக்குப் பிடிக்கவில்லை.

ஒரு முறை பிறந்தகம் சென்றவள், வருஷம் ஒன்ருகியும் திரும்பக் கணவன் வீடு செல்லாமல் இருந்தாள். ஊரில், அவள் கணவனுடன் சண்டை இட்டுக்கொண்டு வந்துவிட்டதாக, ஏதேதோ வதந்தி கிளம்பினதைக் கேட்டு, அவள் பெற்ருேர் அவளைப் பிடிவாதமாகக் கொண்டு போய் விட்டு வந்தார்கள். அவள் மனசு இல்லாமல் வந்து சேர்ந்தாள்.

இவ்வளவையும் மாற்றக்கூடிய நிலைமை ஒன்று அவள் எதிர்பாராமல் சீக்கிரமே உண்டாயிற்று. அவள் கர்ப்பம் தரித்தாள். ஏதோ ஓர் இன்ப உணர்ச்சி அவள் உள்ளத்திலே பரவத் தொடங்கியது. அவள் எப்படி இருந்தாலும் அவளை உண்மையாக நேசிக்கக்கூடிய ஓர் ஆத்மா உதயமாகப் போகிறதல்லவா? அந்த ஆனந்தம் அவள் மனத்தில் நிறைந்து, அவளையே மாற்றியது எனலாம். வீட்டில் கணவன், மாமியார் முதலிய எல்லாருமே அவள் உடல் நலத்தில் சிரத்தையும் கவலையும் காண்பிப்பதாகத் தோன்றவே, சிறிது திருப்தி கொண்டாள். அவள் பிரசவிக்க வென்று பிறந்தகம் புறப்பட்டபொழுது, அவள் குழந்தையும் கையுமாக க்ஷேமமாகத் திரும்ப வேண்டி, அவள் மாமியார் க்ஷேம தண்டுலம் கட்டிக் கொடுத்து, ரக்ஷையாகத் தலையில் வேப்பிலை செருகி, நெற்றிக்குச் சுவாமி விபூதி இட்டாள். கணவன் அவளை ரெயிலடி

வரையில் கொண்டுவந்து விட்டு, ஜாக்கிரதையாகப் பார்த்துக்கொள்ளும்படி மாமனாரிடம் சொல்லிச சென்றான். இவை அவ்வளவும் அவளை உள்ளூறப் பூரிப்படையச் செய்தன.

பிறகு அவளுக்கு ஆண்குழந்தை பிறந்தபோது, குழந்தை அவள் கணவனையே உரித்து வைத்தாற்போலச் சிவந்த மேனியுடன் விளங்கிற்று. பார்த்தவர்களெல்லாம் குழந்தையின் அழகை மெச்சினார்கள்; அவள் புக்ககத்தவர்கள் அவ்வளவு பேரும் குழந்தையின் அற்புதமான அழகில் மனத்தைப் பறிகொடுத்தார்கள். பவானியின் ரூபத்தைக் குறித்து அவள் நாத்தனார்கள், ஓர்ப்படிகள் இவர்களுக்குப் பரிகாச எண்ணம் இருந்திருந்தால், அது இப்பொழுது இருந்த இடம் தெரியாமல் போயிருக்க வேண்டும். அழகிகளான அவள் ஓர்ப்படிகளுக்கு இவ்வளவு லக்ஷணமான குழந்தை பிறக்கவில்லையே! பவானி, தான் அழகில்லை என்பதையே இப்போது மறந்து போனாள். அந்தச் சுந்தரமான குழந்தையைப் பெற்றுவிட்டதில், தானும் சுந்தரமாகிவிட்டதாக அவளுக்குத் தோன்றியது.

முதலில் குழந்தையையும் அவளையும் கணவன் பார்க்க வந்தபொழுது, குழந்தையை மட்டுமல்ல, தன்னையும் அவன் ஆசை பொங்கப் பார்ப்பதாக எண்ணினாள். அவன் கண்களிலிருந்து அவள் எதையோ புதிதாக அறிந்து கொண்டாள்.

கணவனிடம் புதிதாகத் தோன்றின ஒருவித சுவாதீனத்தில், "இனிமேல் உங்களுக்கு நான் அழகில்லை என்கிற குறை இருக்காதல்லவா?" என்று கேட்டேவிட்டாள். "நீ அழகில்லை என்று நான் குறைப்பட்டேனா? யார் சொன்னது?" என்று அவன் அதிசயத்தோடு கேட்டபொழுது, "ஒருவர் சொல்ல வேண்டுமா? எனக்குத் தெரியாதா?

நீங்கள் இவ்வளவு சுந்தர புருஷராக இருக்கும்பொழுது, நான் குரூபியாக இருந்தால், நியாயமாகக் குறை இருக்கத் தானே இருக்கும்? அதில் தவறு என்ன?'' என்ருள் பவானி.

அப்பொழுதுதான் அவனுக்கு விஷயம் விளங்கிற்று. இவ்வளவு நாளும் அவள் ஏதோ ஒருமாதிரி நடந்துகொண்டதற்குக் காரணமும் புரியத் தொடங்கியது. தான், அவள் நினைத்தபடி இருப்பவன் அல்ல என்று அவளுக்கு எடுத்துச் சொன்னுன். பிறகுதான், 'நம்முடைய விபரீதமான மனப் போக்கினுல் இவருக்கு மன வருத்தத்தைக் கொடுத்து நாமும் துன்புற்ருேமே?' என்பது அவளுக்குத் தெரிய வந்தது. நல்லகாலம்; முழுதும் அவ்விதமே இருந்து தன் வாழ்க்கையைப் பாழ்படுத்திக் கொண்டுவிடாமல், அந்த மட்டும் அழகான குழந்தையைப் பெற்றதன் பலனுக, மனம்விட்டுப் பேசிச் சரிசெய்து கொண்டோமே என்று அவள் மிகுந்த ஆறுதலை அடைந்தாள்.

இப்பொழுதெல்லாம் கணவனின் சௌந்தரியத்திற்குத்தகுந்தபடி தனக்கு ரூபமில்லையே என்கிற குறையோ வருத்தமோ அவளுக்குத் துளியும் இல்லை. தானும் அவனும் ஒன்று என்ற மனேபாவம் அவளுக்கு ஏற்பட்டுவிட்டது. இவ்வளவும் அவளுடைய முதல் குழந்தை, தந்தையைக் கொண்டு, மிகுந்த லட்சணத்துடன் பிறக்கக் கொண்டுதானே சாத்தியமாயிற்று? இனி அவளுக்குப் பிறக்கப்போகும் மற்றக் குழந்தைகள் எப்படி இருந்தாலும் அது ஒரு பொருட்டில்லை. உலகத்தில் எதிலும் முதல் தோற்றத்திற்குத் தனி மதிப்புத்தானே?

அவள் பிறந்தகம் வந்து, பத்துத் தினங்களே ஆகின்றன. அதற்குள் அவளை, 'எப்பொழுது வரப்போகிருய்?' என்று கேட்டுப் புக்ககத்தவர்களிடமிருந்து கடிதத்திற்கு

மேல் கடிதம் வந்தது. ஏன்? குழந்தையைப் பார்க்காமல் அவர்களால் இருக்க முடியவில்லை. அவளுடன்தானே குழந்தை வருவான்? அதனுல் அவர்கள் அவ்விதம் அவளை வருந்தி அழைக்கிருர்கள். அவர்கள் வீட்டில், அவள் எல்லோருக்கும் தாழ்வாக இருந்தவள்; இப்பொழுது, ராமனைப் பெற்ற கௌசலையைப்போல எல்லாருக்கும் மேலாகக் கருதிக் கௌரவிக்கப்படுகிருள். எல்லாம் அவளுடைய முதல் குழந்தையால்தான்.

அந்தக் குழந்தையும், அவள் ரூபத்துக்காகவோ, வேறு எதற்காகவோ அவளிடம் அன்பு செலுத்தப் போகிறதில்லை. எந்தக் குழந்தைக்கும் அதன் தாய் உலகத்தில் எல்லாரையும்விட மேலானவள், பிரியமானவள் அல்லவா?

பவானியின் குழந்தையும் அதுபோலத்தான். இப்பொழுது அவன் கண்ணை விழித்ததும் பவானியைப் பார்த்து, எவ்வளவு ஆவலுடன், எப்படி, வேகமாக அவளிடம் தாவி வருகிருன், பாருங்களேன்!

# முதல் குழந்தை

'சோமு'

'மன்ஞ உலகத்து மன்னுதல் குறித்தோர்
தம்புகழ் நிறீஇத் தாமாய்ந் தனர்ர''

என்ற அடிகள் மனத்தில் ஆழமாகப் பதிந்துவிட்டன மன்னனுக்கு.

சாதாரணமாகத் தினந்தோறும் விளக்கம் செய்கிற முறையிலேதான் புலவர் அன்றும் அந்தப் பாடலை அரசனுக்கு எடுத்து ஓதினர். ஆனல் அன்று இருந்த மனநிலை காரணமாகத்தானே என்னவோ, அந்த அடிகள் அரசனுக்கு ஏதேதோ நினைவை எழுப்பின.

'அழிகின்ற தன்மையது உலகம். இதில் அழியாமல் இருக்க ஆசைப்படுகிருன் மனிதன். அதற்கு வழி?—தனது புகழைப் பின்னே விட்டுத் தான் மடிகிருன். எவ்வளவு உண்மை!' என்று எண்ணமிட்டான் அரசன்.

அன்று புலவரின் தமிழ் விருந்து அத்துடன் நின்றது.

2

பெற்றெடுத்த முதல் குழந்தையை ஒக்கலிலே வைத்துக் கொஞ்சிக்கொண் டிருந்த மனைவியைப் பார்த்துப் பிறைசூடி கேட்டான்:

'பருவூசி ஐந்தும் பணித்தலைப் பட்டாற்
ருபவூசிப் பையும் பறக்கின்ற வாறே.'

'இப்படிப்பட்ட புன்புலால் உடம்பு எடுத்த ஒரு குழந்தையைக் கண்டு இத்தனை சந்தோஷமா?'

'இன்று வேளை சரியில்லை; இவரைத் தனியே சிந்தனையில் விட்டுவிட்டு உள்ளே செல்வதுதான் புத்திசாலித்தனம்' என்று நினைத்த மனைவி, குழந்தையை எடுத்துக் கொண்டு, வீட்டுக்கு உள்ளே சென்றுவிட்டாள்.

சிற்பி, பிறைசூடியினுடைய வாழ்க்கையில் அன்றைப் பொழுது அப்படிக் கழிந்தது. அவனுடைய உள்ளம் அழியாத சிருஷ்டியை நாடி நின்றது.

3

"அழிகின்ற இந்த உலகில் அழியாததொரு பெருங் கோயிலைக் கட்டி முடிக்கும் வல்லமையுள்ள கலைஞர்கள் நம் அரசவையில் இல்லையா?'' என்று கேட்டான் மன்னன்.

அம்பு பாய்ந்ததுபோல் 'சுருக்'கென்று எழுந்தான் பிறைசூடி.

''எந்த ஸ்தபதிகள் காமாரி திருக்கோயிலைக் கட்டினார்களோ, அதே ஸ்தபதிகளின் வம்சம் இன்றும் இல்லாமல் போகவில்லை. அரசருடைய ஆதரவு இருக்கும்போது கலைக்கு ஏது அழிவு?'' என்றான் அந்த அரசவைச் சிற்பி.

''என்னுடைய முன்னோர்கள் கட்டி நிறுத்திய காமாரி கோயிலையும் மிஞ்சும்படியான புகழ்படைத்த ஓர் ஆலயத்தை நாம் நிர்மாணிக்க முடியுமா?'' என்று மன்னன் கேட்டான்.

"முடியும்; ஆணவத்தினுல் பேசவில்லை; ஆசையினுல் சொல்கிறேன். என் இருதயத்தில் எத்தனையோ நாட்களாக நிரந்தரமான ஒரு சிருஷ்டியை நாடி, எண்ணங்கள் குமைகின்றன. உத்தரவுக்குக் காத்திருக்கிறேன்."

மட்டற்ற களிப்புடன் அன்று அரசவை கலைந்தது.

## 4

ஆயிரக்கணக்கான பொன் செலவானது. ஆயிரமாயிரம் மனிதர்கள் பணி செய்தனர். 'மன்னு உலகத்து மன்னுதல் குறித்த' இரண்டு இருதயங்கள் பழமையை வெல்லக் கூடிய புதுமையைச் சிருஷ்டிப்பதில் துடித்துக்கொண்டிருந்தன.

மன்னர் மன்னன் கட்டுகிற முதல் கோயில்; சிற்பியர் தலைவன் சமைக்கும் முதல் சிருஷ்டி; நீண்டநாள் தவங்கிடந்து உருவாகிற முதல் குழந்தை அது.

பத்து ஆண்டுகளாக அந்தக் குழந்தை கல்லிலே உருவாகியது. வானமும் பூமியும் அந்த வனப்பைக் கண்டு சொக்கின.

## 5

"உமக்கு எது மிகவும் பிடித்திருக்கிறது?" என்று மன்னன் அமைச்சரைக் கேட்டான்.

"கோயில் முழுவதுமே ஓர் அமர சாதனை. அதிலும் கோபுரத்தின் பேரழகும் நந்தியின் கம்பீரமும் வீரபத்திரரின் மூர்த்தன்யமும், யாளித் தூண்களின் கோலமெருகும் மன்மத ரதியரின் சுந்தரவடிவும்—என்ன சொல்வது! ஒவ்வொன்றும் கல்லில் உருவாகிய ஓர் இன்னிசைப் பண்!

இருதயத்தின் நாதம் அதில் கேட்கிறது!" என்ருர் அமைச்சர்.

"அப்படியானுல் என்னுடைய முதல் குழந்தை, கலை உலகில் மகுடம் சூடி, அரசு செலுத்தும் என்று சொல் லும்!"

"சந்தேகம் இல்லாமல்! பழமையை வென்று விட்டது புதுமை; நிலையற்ற உலகத்தில் தங்கள் புகழ் நிலைத்து விட்டது!"

6

உனக்கு எது மிகவும் பிடித்திருக்கிறது?" என்று கேட்டான் பிறைசூடி, தன் சீடனைப் பார்த்து.

"இந்தக் கோயில் என்றும் அழியாத இனிய காவியம். அதிலும் கோபுர வனப்பும், நந்தியின் கம்பீரமும், வீரபத்திரரின் பெருமிதமும், யாளித் தூண்களின் கோல மெருகும், மன்மத ரதியரின் சுந்தர வடிவமும்--ஒவ்வொன் றும் கல்லிலே நனவுகொண்ட தெய்வக் கனவு; மரணத்தை வென்று நின்ற நித்தியம்!"

"அப்படியானுல் என்னுடைய முதல் குழந்தை, மக்க ளுடைய இருதயக் கோயிலிலே என்றென்றும் கொலு விருக்கும் என்ரு சொல்கிருய்?"

"சந்தேகம் இல்லாமல்! பழமையை வென்று விட்டது புதுமை; அழிகிற உலகத்தில் அழியாது நின்றது தங்கள் கலை!"

7

"சிற்பியாரே! இது நீர் உருவாக்கிய முதலாவது கலைச் சிருஷ்டி; நான் கட்டி முடித்த முதலாவது கோயில். நிமித்திகரும் புனித நீராட்டுக்கு நாள் பார்த்துவிட்டார்.

இந்த மகிழ்ச்சியில் அந்தப் பழைய கோயிலுக்குள்ளே நுழைந்து, ஒரு தரம் பார்த்துவிடலாமே? நம்முடைய இந்தச் சாதனே, அதைவிட எத்தனே சிறந்தது என்பது ரிதரிசனமாகத் தெரியும் அல்லவா?'' என்று கேட்டான் மன்னன்.

''காத்திருக்கிறேன்'' என்று ஆனந்தம் பொங்கப் பிறைசூடி சொன்னுன்.

''புறப்படலாமா?'' என்ருர் அமைச்சர்.

8

இதென்ன, கோபுரம் இப்படிச் சரிந்து கிடக்கிறது?'' என்று மன்னவன் கேட்டான், அந்தப் பழைய கோயிலேப் பார்த்ததும்.

''இடி விழுந்து இப்படி ஆகிவிட்டது. இப்பொழு தெல்லாம் யாருமே இங்கே போவதில்லே. நகரத்தைவிட்டு எட்டி இருக்கிறதல்லவா?'' என்று அமைச்சர் கூறினுர்.

''நம்முடைய கோபுரம் நிற்கும் கம்பீரமென்ன! இந்தக் கூன் கோபுரத்தின் சரிவு என்ன! பார்த்தீரா சிற்பியாரே?''

மன்னனுடைய அந்த வார்த்தைகளில் அபாரமான மகிழ்ச்சி அலே வீசி வந்தது.

அவர்கள் கோயிலில் நுழைந்தனர்.

''இதென்ன நந்தியா? கன்றுக்குட்டி படுத்திருப்பது போல் இருக்கிறதே!'' என்ருன் அரசன்.

அமைச்சர்: ''கோபுரம் சரிந்ததிலிருந்து வெயிலும் மழையும் நித்திய வாசம் இங்கே. சிலே மழுங்கித் தேய ஆரம்பித்துவிட்டது.''

"அம்மிக் குழவிபோலே ஆகிவிடும் இன்னும் சில நாட்களில்" என்ருன் பிறைசூடிக்குப் பின்னுல் வந்த ஒரு சீடன்.

அப்பால் நடந்தனர்; அதோ வீரபத்திரர்!

"என்ன இது! ஓங்கிய கை அப்படியே ஓடிந்துகிடக்கிறது. மூக்கை, யார் கொண்டுபோய்விட்டார்கள்?" என்று எக்காளத்துடன் கேட்டான் மன்னன்.

அமைச்சர் சொன்னுர்: "யாரோ கலையின்பம் தெரியாதவர்கள் செய்த காரியம்."

"இராது. இந்த நாட்டில் கலைஞானத்துக்கு ஏது குறைவு?" என்று மன்னன் சொன்னுன்.

"யாரேனும் விஷமிகள் செய்த காரியமாக இருக்கலாமோ?" என்று வார்த்தைகளை இழுத்தான் பிறைசூடி.

மேலே நடந்தார்கள்.

யாளிச் சிலை தாங்கிய பெரிய தூண். யாளிக்கு வாய் திறந்திருக்கிறது. உள்ளே உருளுகிற கல் உருண்டையைக் காணவில்லை.

"என்ன சிற்பியாரே, நம்முடைய யாளி எங்கே? இந்த வாய் திறந்த பூதம் எங்கே?" என்ருன் மன்னன். பிறைசூடி முறுவல் செய்தான். வார்த்தை வரவில்லை.

மேலே நடந்தார்கள்.

மன்மதன் சிலை. கரும்பு வில்லின் வளைவிலே, கணு ஓடிந்து, பாதி வில் மட்டும் நின்றது. ரதி? ரதியினுடைய தலையைக் காணவில்லை. உடல் மட்டும் இருந்தது.

மன்னன் சிரித்தான். பிறைசூடி ஒன்றும் பேசவில்லை; கண் கலங்கியது அவனுக்கு.

"என்ன சிற்பியாரே? நடவும் உள்ளே" என்ருன் அரசன். ஒரு குழந்தையினுடைய குதூகலம் அவன் முகத்தில் தவழ்ந்து விளையாடியது.

கர்ப்பக்கிருகத்திற்கு வந்தனர். அத்தனைபேரும் அப்படியே ஸ்தம்பித்து நின்றுவிட்டார்கள். காரணம், உள்ளே மூர்த்தியைக் காணவில்லை!

"திரும்புவோமா?" என்று கேட்டார் அமைச்சர். தகப்பனுடைய வார்த்தைக்குக் கட்டுப்படுகிற குழந்தையைப்போல அந்த நேரம் ஒன்றுமே பதில் பேசாமல் அரசன் திரும்பினுன். பிறைசூடியோ தூண்போல நின்ருன்.

"சிற்பியாரே!" என்று கூப்பிட்டுத் தூணுக்கு உயிர் கொடுத்தார் அமைச்சர். அதற்குள் அரசன் எட்டி நடந்து விட்டான். பதறிப்போன சிற்பி, பின் தொடர்ந்தான்.

மறுபடியும் மன்மதன் சிலைக்கு வந்தார்கள். அமைச்சர் கூறினுர்: "மன்னர் பெருமானே, உண்மையிலேயே நம்முடைய புதிய மன்மதன் பிரமாதம். அதற்கும் இதற்கும் ஒப்புச் சொல்வதே தவறு."

அரசன் "ஆமாம்" என்ருன்; பாதி மனந்தான் அந்த வார்த்தையில் ஒலித்தது. பிறைசூடியோ அந்தச் சிலையை விட்டுவிட்டுப் பார்வையை யாளியின் பக்கம் செலுத்தினுன்.

"இந்த யாளியைப் பார்த்தால், ஏதோ பசி பிடித்த பூதம், வாய் திறந்த மாதிரியல்லவா இருக்கிறது?" என்ருர் அமைச்சர். மன்னன் சிரிக்க முயன்ருன். சிரிப்பு வரவில்லை. பிறைசூடியோ முகத்தைத் திருப்பி வீரபத்திரரைப் பார்த்துக்கொண்டு நின்ருன்.

"பேரிலுள்ள வீரத்தைத் தவிர, மூக்கில் கோரந் தான் தெரிகிறது" என்றார் அமைச்சர்.

அரசன் மேலே நடந்தான். பிறைசூடி எட்டி நடந்து, நந்தியின் அருகே சென்றான்.

மன்னன் மௌனமாக நந்தியைக் கடந்தான். சிற்பி, கோபுரவாசலிலே போய், இடி விழுந்த கோவிலை, அண்ணாந்து பார்த்துக்கொண் டிருந்தான்.

"சிற்பியாரே!" என்று அழைத்தான் மன்னவன். கோபுரத்திலே போய்ச் செருகியிருந்த கண்களை, பலவந்தமாக மீட்டு, அரசனை நோக்கினான் பிறைசூடி.

"நம் இருவருடைய உள்ளத்திலும் இந்த வினாடியில் ஒரே எண்ணந்தான் ஓடிக்கொண் டிருக்கிறது."—இப்படிச் சொன்னபோது மன்னனுடைய குரலில் ஒரு நடுக்கம் இருந்தது.

## 9

அன்று இரவு அரசன் ஒரு கனவு கண்டான். அந்தக் கனவிலே, புதிதாகக் கட்டப்பட்டிருந்த கோவிலுக்குள் சென்று, சிற்றுளியால் சிலைகளை யெல்லாம் தகர்த்துக்கொண் டிருந்தான் பிறைசூடி. "காலமும் மனித சமூகமும் சேர்ந்து செய்கிற அநியாயத்தை நானே செய்கிறேன்; அந்த ஒரு திருப்தியாவது எனக்கு இருக்கட்டும்" என்ற சிற்பியின் வார்த்தைகள் உளியிலே சிதறுகிற கற்களின் ஊடே, கோயிலின் மதிற் சுவர்களில் எதிரொலித்தன.

## 10

அன்று இரவு பிறைசூடி ஒரு கனவு கண்டான். அதிலே, புதிதாகக் கட்டப்பட்ட கோயிலை, பெரிய பெரிய

வீரர்களைக்கொண்டு கட்டப்பாறையால் பேர்த்து எறிந்து கொண்டிருந்தான் மன்னவன்! "பின்னொரு நாள் ஆவி யுலகில் இருந்துகொண்டு வடிக்கிற கண்ணீரை இன்றே வடித்துவிடுகிறேன்" என்ற அரசனின் வார்த்தைகள் இடிந்து விழுகிற மதிலிலே போய் எதிரொலித்தன.

## 11

"என்ன சோகமான கனவு!" என்று கண்களைத் துடைத்தவாறு எழுந்தான் மன்னன்.

"என்ன அதிசயமான கனவு!" என்று சொல்லிக் கொண்டே கண் விழித்தான் சிற்பி பிறைசூடி.

## 12

காலையில் அரசவை கூடியது.

"என்ன சிற்பியாரே, முகம் எல்லாம் வதங்கியிருக் கிறதே?" என்று மன்னன் கேட்டான்.

"பெற்றெடுத்த முதல் குழந்தையை ஒக்கலில் வைத் துக்கொண்டு கொஞ்சினாள் என் மனைவி. அதைப் பேதைமை என்றேன். ஆனால் நேற்று என்னுடைய முதல் சிருஷ்டியை எண்ணி, நான் பெருமைப்பட்டதும் அப்படித் தான்!" என்றான் பிறைசூடி.

அரசன் சொன்னான்: "உண்மை; என்னுடைய மூதாதைகள் மடிகிற மனிதர்கள், நான் மட்டும் சிரஞ்சீவி என்று எண்ணினேன். அதுவும் தவறுதான்!"

அமைச்சர் ஒன்றும் புரியாமல் திகைத்தார். சபை யிலே மரணத்தின் மௌனம் வியாபித்தது.

அரச குரு எழுந்தார்: "மன்னனே, உன் ஆட்சியில் நீ முதல் முதலாகக் கட்டி நிறுத்திய இந்தக் கோயிலுக்கு

எவ்வித விக்கினமும் இன்றிக் கும்பாபிஷேகம் நடத்திவிட வேண்டும். தாமதிப்பது கேடாகும்."

அரசன் பிறைசூடியைப் பார்த்தான். அந்த அதிசயச் சிற்பி சொன்னான்: "குழந்தையைப் பெறுவது தாயின் பணி. அது வளர்வதும் நிலைப்பதும் அதன் தலையெழுத்து."

"அப்படியானால் நம்முடைய முதல் குழந்தை அழியக் கூடியதுதானா?"

"அரசே! முதல் குழந்தை என்பது நம் உள்ளத்தில் உருவான கோயில். கண் முன்னே உருவாகி நிற்பது, அந்தக் கோயிலின் நிழல்தான்! நிழலின் மறைவைப்பற்றி ஏன் சிந்திக்கவேண்டும்? முதல் குழந்தைக்கு ஏது மரணம்? அதற்கு ஜனனந்தான் உண்டு!" என்றான் பிறைசூடி. இரவு கண்ட கனவு அவனுடைய உள்ளத்தில் ஓர் அபூர்வமான தெளிவைக் கொடுத்திருந்தது.

அரச குரு சொல்லுவார்: "மன்னனே, யோசித்துப் பார்த்தால் தோற்றம், மறைவு என்ற இரண்டுமே புற உலகிற்கு மனம் கற்பிக்கும் நினைவுகள்தாம். மனம் என்ற தாயினிடத்தில் பிறக்கும் எண்ணம் என்ற முதல் குழந்தைக்கு மரணம் இல்லை!"

மன்னர் மன்னன் பேராதரத்துடன் கட்டி முடித்த முதல் ஆலயத்திலே, கும்பாபிஷேகம் நடைபெற்றது. சிற்பியர் தலைவன் பிறைசூடி, தவங்கிடந்து பெற்றெடுத்த முதல் குழந்தை புனிதநீர் ஆடியது.

# மாதம் பிறந்தது

"விந்தியா"

ஸ்ரீமான் சேஷாத்ரி, தொழிலிலே முன்னணிக்கு வந்து கொண்டிருக்கும் வக்கீல். நாவன்மையினால் தொழிலில் பொருளீட்டினர்; வாழ்க்கையிலே ஏற்பட்ட கசப்புக்களை, மனத்திண்மையினாலே பொருள் செய்யாமல் வாழ்ந்தார். நிலையான மாத வருமானம் உள்ளவர் அல்ல அவர்; ஆனால் மாதந்தோறும் நினைப்பிற்கு வரும் நிலையான வருத்தம் ஒன்று, அவரது உள்ளத்திற்கு உண்டு.

மாதந்தோறும் முதல் தேதியன்று இரண்டு மணி யார்டர் தாள்களை எடுப்பார். சிந்தனைகள் எழ இடமளி யாமல், சரசரவென்று அவற்றைத் தபாலுக்குத் தயார் செய்துவிட்டு, எண்ணி எடுத்து வைத்திருக்கும் பணத் தொகையுடன் அவற்றை உடனே குமஸ்தாவிடம் ஒப்பித்துவிடுவார். அவர் அனுப்பும் இரண்டு மணியார் டர் தொகைகளிலே ஒன்று, அவர் குடியிருக்கும் வீட்டுச் சொந்தக்காரருக்குச் சேரவேண்டிய குடிக்கூலி; மற் றொன்று, என்றோ அவரை விட்டுப் பிரிந்துபோய்த் தனி வாழ்வு வாழும் முதல் மனைவிக்கு அவர் அனுப்பும் தாலிக் கூலி! வீட்டு வாடகையை எப்படிக் கடமை உணர்ச்சி யுடன் தருகிறாரோ, அதே கடமையுணர்வுதான் மற்

ருன்றினை அனுப்புகையிலும் இருந்தது. ஆனால் வாடகையை அனுப்பும் கடமையுணர்ச்சியினூடே நன்றியும், மற்றதை அனுப்பும்பொழுது அவமானமும் எழுவதை அவர் உள்ளந்தான் அறியும். வீட்டுக்காரர் வாடகையை உயர்த்திவிடாமல்-பத்து வருஷங்களாக வாங்குவது போலவே-இப்பொழுதும் இருபத்தைந்து ரூபாய்தான் வாங்குகிறார் என்ற எண்ணமே நன்றியுணர்வுக்குக் காரணம். ஆனால் அவருடைய வருமானம் மேல்மேலும் பெருகியதை அறிந்தும், அவர் முதல் மனைவி அதிகமான ஜீவனாம்சத் தொகை கேட்கவில்லை என்பதைக் குறித்து அவர் துளிகூட மகிழவில்லை! சில காலமாகக் கமலா, ரேடியோவிலே பாடியும், பாட்டு 'டியூஷன்'கள் ஏற்றும் வருமானத்தை வளர்த்துக்கொள்கிறாள் என்பது சேஷாத்திரியின் செவிகளை எப்படியோ எட்டியது, 'உன் ஜீவனத்திற்கு நான் இனிப் பொருள் தரவேண்டிய அவசியம் இல்லை' என்று அவர் வாதாடியிருக்கலாம் ஆனால் அதைப்பற்றி அவர் ஒன்றுமே நினைக்க விரும்பவதில்லை. எத்தகைய மாறுதலையும் அவர் இந்த விஷயத்திலே செய்ய நினைக்கவில்லை.

இரண்டொரு முறைகள், கமலா விலாசமாற்றம் தெரிவிப்பதற்காகக் கடிதங்கள் எழுதினபோது சேஷாத்திரி கலக்க முற்றார். பின் ஒரு தடவை கமலா, நாலு வரி கொண்ட நீண்ட கடிதமே எழுதிவிட்டாள்! எதற்கு? நன்றி கூறுவதற்கு. "நான்கு மாதங்களாக, மணியார்டர் டாண் என்று மாதம் பிறந்ததும் வந்து விடுவது கண்டு அகமகிழ்கிறேன். சில சமயம் எனக்கு வந்துசேர இரண்டொரு நாள் தாமதமானாலும், அங்கே நீங்கள் அனுப்பும் தேதி, முதல் தேதியாகவே இருந்து வருகிறது. இனியும் இவ்வாறே அனுப்பிவந்தால் நலம். மாதச் சம்பளம்போல இது எனக்குப் பேருதவியாக இருக்கிறது"

என்று எழுதினுள் கமலா. உடனே அதைக் கிழித்துப் போட்டுவிட்டார் சேஷாத்திரி. எனினும் அதைப் படித்ததன் நினைவு எங்கே போகும்? "நன்றி கூறுகிருளா? இளக்காரம் செய்கிருளா?" என்று கவன்ருர். இளக்காரம் தொனிப்பதாகவே எண்ணி, மனம் பதறினர். 'உன்மேல் சிரத்தை வந்துவிடவில்லையடி, அகங்காரி! வீட்டின் சொந்தக்காரர் வெளியூர் வாசம் செய்வதனுல் மாதம் பிறந்ததும் வீட்டு வாடகையை அவருக்கு அனுப்பும்பொழுது, உனக்கும் தொலைக்கிறேன்! அவ்வளவுதான்!' என்று ஒரு மறுமொழியை மனத்துள் வீசினர். கடிதம் எழுதுவாரா? அவளை லட்சியம் செய்வதுபோல் ஆகிவிடாதா?

ஒரு நாள் வீட்டின் சொந்தக்காரரிடமிருந்து ஒரு கடிதம் வந்தது. "நாங்கள் பெருந்தன்மையாக வாடகை உயர்த்தாதிருந்தோம். நீங்களோ அற்பத்தனம் காட்டி விட்டீர்கள். மணியார்டர் கூலி ஆறு அணுவை வெட்டி விட்டு அனுப்பியிருக்கிறீர்கள். கட்டணச் செலவு உமது தான். இனியும் உம்மிடம் எங்கள் பெருந்தன்மையைக் காட்டிப் பயன் இல்லை. இனி நீர் நாற்பது ரூபாய் வாடகை தரவேண்டும். இப்போது அந்த வீட்டிற்கு எழுபதும் எண்பதும் வரும். ஆனல் நீர் பத்து வருஷமாக இருப்பதால், நாற்பதுடன் நிற்கிறேன். வீட்டின் பொருட்டு, நாற்பது ரூபாய் எட்டணு செலவு செய்ய விருப்பம் இருந்தால் நீர் அந்த வீட்டிலே நீடித்து இருக்கலாம்!"

கடிதங் கண்டு, கோபமும் வருத்தமும் கொண்டார் சேஷாத்திரி. இருபது மாதங்களாக அனுப்புவது போலவே சென்ற மாதமும் அனுப்பினர். ஆனல் இப்படிக் கடிதம் வந்திருக்கிறதே!

உடனே மேஜை அறையில் துழாவினர். இந்தத் தடவை, தம் கையாலே மணியார்டரை எழுதாமல்

பணத்தை மட்டும் குமாஸ்தாவிடம் கொடுத்தார். குமாஸ்தா தவறு செய்துவிட்டார். கமலாவின் பெயருக்கு அனுப்பும் மணியார்டருக்குத்தான் கட்டணம் குறைப்பது வழக்கம். இந்தத் தடவை அது மாறிவிட்டது. அவளுக்கு முழு இருபத்தைந்து ரூபாய் அனுப்பித் தவறு செய்துவிட்டார் குமாஸ்தா.

சேஷாத்திரியைப் பொறுத்தமட்டில் இந்தச் சிறு பிழை, பெரும் புயலை எழுப்பிவிட்டது. ஆனாலும் அவர் குமாஸ்தாவைக் கோபிக்கவில்லை. வீட்டின் சொந்தக்காரருக்கு ஒரு கடிதம் எழுதினார். பிழை, குமாஸ்தாவினுடையது என்றும், ஆறணுவிற்கு அற்பத்தனமாக ஆத்திரத் தபால் போட்டது வீட்டுக்காரரே என்றும் சுட்டிக்காட்டி எழுதினார். நாற்பது ரூபாய் வாடகைகூடக் குறைவுதான் என்பதைத் தாம் ஆமோதிப்பதையும் கூறி, நாசுக்காகத் தம் பெருங்குணத்தைக் காட்டி, அந்தக் கடிதத்தை விடுத்தார். ஆனால் சேஷாத்திரிக்கு வேருெரு கவலை. "கட்டணத்தைக் குறைக்காமல் அனுப்பியிருப்பது கண்டு சந்தோஷிக்கிறேன்!" என்று ஏதேனும் சொல்லிக் கமலா கடிதம் எழுதிவிடுவாளோ?

கொஞ்சநாள் வரையில் அவருக்குத் திகில்தான். இருபது நாள் கழித்துத்தான் அமைதி ஏற்பட்டது. "எழுத மாட்டாள்; முடியாது" என்று தோன்றியது. இதற்குள் மீண்டும் அடுத்த மாதம் பிறந்தது.

மணியார்டர் தாள்கள் இரண்டையும் எடுத்தார் சேஷாத்திரி. 'நாற்பது ரூபாய் வீட்டு வாடகை; கட்டணம் எட்டணு. சாரதா நிலையத்திற்குக் குடிக்கூலியாக இதை ஏற்கவேண்டும்' என்று எழுதினார், கமலாவுக்கு அனுப்புவதற்காகத் தாளின்மீது பேனவை ஊன்றினார். ஆனால் என்றும்போலக் கை ஓடவில்லை. தயங்கினார்.

ஆறு அணுவைக் குறைப்பதா?

அன்று வந்த வீட்டுக்காரர் கடிதம் கண்டு, தமக்கு என்ன தோன்றிற்று? 'ஆறு அணுவிற்காக அற்பத்தன மாக ஒரு கடிதம் இப்படி எழுதிவிட்டானே? உள்ளூரி னின்று வெளியூர் போனவன் அவன்தானே? கட்டணச் செலவு எனதல்ல என்று நான் வாதாடக்கூடாதா?' என்று கோபம் வந்தது. ஆறு அணு விஷயம், வீட்டுக்காரர்மேல் இருந்த மதிப்பைப் பறித்துவிட்டது!

கமலா என்ன நினைக்கிருளோ?

கமலாவுக்கு இருபத்தைந்து ரூபாய் ஜீவனும்சம் 'அனுப்புவ'தாகத்தான் ஆதியிலேயே பேச்சு! கொடுப்ப தாக அல்ல! அப்படி இருக்க, முழுத்தொகையாகிய இரு பத்தைந்தும் அவளுக்குச் சேரவேண்டாமா? அவள் விஷ யத்திலே கண்டிப்பும் கருருமாக, மனம் கல்லாகிக் கிடப் பதைக் காட்டிக்கொள்ள, ஆறு அணுவைக் குறைப்பது சரிதான்; ஆனுல் அது நியாயந்தானு?

'உன் பெருந்தன்மையாலே அவள் மேன்மேலும் வாடிப்போக வேண்டாமா? துணிச்சலும் அகம்பாவமும் கோழைத்தனமாக மாறவேண்டாமோ அவளுக்கு!'' என்று சிந்தனை ஒரு சுழல் அடித்தது!

குமாஸ்தாவை அழைத்தார். "இதோ பாரும்; தப் புச் செய்யவே வழியில்லை. நாற்பது ரூபாய்க்கு எட்டணு, இருபத்தைந்திற்கு ஆறணு. அறுபத்தாறு ரூபாய்; இதோ நானே மணியார்டர் எழுதியிருக்கிறேன். வெயிலிலே திரும்பி வருவீர்களே; அந்த இரண்டணுவுக்கு ஒரு 'கூல் டிரிங்க்' சாப்பிட்டுவிடுங்கள்!'' என்று கூறிவிட்டு, ரூபா யுடன் குமாஸ்தாவை அனுப்பிவிட்டார். மனசு சற்று லேசாயிருந்தது.

ஆபீஸ் அறையை விட்டு வெளிவந்த சேஷாத்திரி, தம் முகத்தைக் குளிர்ந்த நீரால் அலம்பிக்கொள்ளப் பின் கட்டுக்கு வந்தார். அங்கே இருந்தாள் வைதேகி. அவளுக்குத் தெரியும், கணவர் மணியார்டர்களை அனுப்பி விட்டு வருகிறார் என்று.

இதுபோன்ற சமயங்களில் வைதேகி, அமைதியை நிலைநாட்டும் அழகு அற்புதம். இளையாள் என்னும் நினைப்பை ஒழித்தவளாய், சந்தோஷமும் உரிமையும் துலங்கும்படியாக எல்லாப் பெண்களையும்போல நாலு தினுசாக இருப்பவள் அவள். மாதம் பிறந்ததும் சிறிது மாறுவாள். மற்றச்சமயங்களிலே சினிமாவிற்குப்போகாத சிணுக்கத்தையும், தண்ணீரான பால்பற்றிய அலுப்பையும் வெளியிடத் தயங்காமல், மனைவி என்னும் ஸ்தானத்தின் முழு உரிமையையும் நிலைநாட்டுவாள் அவள். மாதம் பிறந்தால் அலுப்புச் சலிப்புகளை எட்ட நிற்க வைத்துவிடுவாள். வீட்டிலே தண்ணீர்க்குழாய் கோளாறுகி, இடக்குச் செய்தால்கூட அலுப்புக் காட்டமாட்டாள்.

இன்றும் வைதேகி சிரித்த முகத்துடன். "டிபனுக்கு இன்று மசால்வடை பண்ணுகிறேன். நிறையவே வைக்கிறேன், மற்றவர்களுக்கும் கொடுப்பதற்கு!" என்று சொன்னாள்.

"பேஷாய்!" என்று உற்சாகத்துடன் கூறிவிட்டு, துண்டினால் முகத்தைத் துடைத்தவண்ணம் ஓரப்பார்வையாக மனைவியைப் பார்த்தார் அவர். பிறகு, குரலிலே தெளிவான ஒரு மாறுதல் தொனிக்க, "இன்றைக்கு முதல் இந்த வீட்டிற்கு வாடகை நாற்பது; நினைவிருக்கிறதா?" என்று கேட்டார்.

* * *

'கணவன்தான் ஒரு பெண்ணின் முதல் குழந்தை' என்று யாரோ ஒரு பெரியார் கூறிய அறிவுரைக்கு 'விளக்கம் வைதேகி. தன் கணவன்பால் அவளுக்குப் பரிவு நிரம்பிய அன்பு. முன்பே நொந்த அவர் மனம், மேலும் துன்புறுவதை அவள் விரும்பவில்லை. கமலாவுக்கு அவர் அனுப்பும் மணியார்டரைப் பார்க்க வேண்டும், சோதனை செய்யவேண்டும் என்னும் எண்ணம் அவளுக்குக் கிடையாது. 'அந்தப் பெண்ணிடம் பற்றுதலே இல்லாதவர், ஆகையால்தானே நம்மை மணந்தார்?' என்ற நம்பிக்கை வைதேகிக்கு. மணியார்டர் அனுப்புந்தோறும் அந்த முதல் மனைவியிடம் இருக்கும் குறைபாடுகளும் அவள் செய்த அட்டகாசங்களுமே அவர் நினைவில் எழும் என்று அவள் உறுதியாக எண்ணியிருந்தாள்.

அந்த மனைவி வழக்குத் தொடர்ந்து, வாதாடி மாதந் தோறும் ஜீவனாம்சம் பெற்று வந்தாள். வழக்குத் தொடர்ந்த நாளிலே சேஷாத்திரி இளம் வக்கீல். இளைய மனைவி கொண்ட புதுமை அது. அந்த நாளிலே அவர் என்ன பாடு பட்டார்! மனம் வெதும்பினார். மொத்தமாகவே பெருந் தொகையை முதலில் கொடுத்துவிட்டு, 'பாரம் ஒழிந்தது' என்று நிம்மதி அடைய விரும்பினார். வருமானம் அதிகம் இல்லாவிடினும், எப்படியோ பணம் புரட்டி, 'தொந்தம் தொலைந்தது' என அமைதிகொள்ள எண்ணினார். பயமும் கூச்சமும் துக்கமும் துளும்பும் விழிகளுடன் வைதேகி நோக்கிய நோக்குகளையெல்லாம் கண்டு, தவிதவித்தார். ஆனால் கமலாவும் அப்பொழுது உயிருடன் இருந்த அவள் தாயும் அதற்கு உடம்படவே இல்லை. 'முடியாது; மாதச் சம்பளம்போலத்தான் வரவேண்டும்' என்று அடம் பிடித்தார்கள். நீதிமன்றத்திலும் அப்படியே முடிவாயிற்று, குடும்பச் சிக்கல், அம்பலத்திற்கு ஏறிய அந்த நாளிலே, சேஷாத்திரி பட்ட துன்பம் சொல்ல

வொண்ணுதது. கண்கலங்கி அழுதே விட்டார், வைதேகி யிடம்.

அன்றுதான் வைதேகி உறுதி பூண்டாள். கடமையைச் செய்வதற்காகக் கணவர், மாதந்தோறும் மணியார்டர்த் தாளிலே கையொப்பம் இடவேண்டும். அந்தச் செயலே அவர் தவிர்க்க இயலாது. கமலாவின் பெயரை இரண்டோர் இடங்களிலே எழுதி ஆகவேண்டும். யந்திரம் இயங்குவதுபோல் அவர் கைகள் இயங்கும். மனத்திலே அவள் நினைப்பு வந்தாலும், அது துன்ப நினைவாகவே இருக்கும். அதை ஒரு நாளும் பொருள் செய்யக்கூடாது. இதுதான் வைதேகி செய்துகொண்ட சங்கற்பம்.

அப்பொழுதுதான்-அந்தத் துன்பத்திலே-சேஷாத்திரிக்கும் வைதேகிக்கும் ஓர் உள்ளப் பிணைப்பு ஏற்பட்டது. வைதேகி அச்சமும் கூச்சமும் நீங்கியவளாய்ப் பரிவும் கனிவும் கொண்டாள், கணவரிடம். ஆறுதலும் தேறுதலும் சொல்லி, மனமார அன்பு செலுத்தித் துயராற உதவிய வைதேகியைச் சேஷாத்திரி மதிப்புடனும் கௌரவத்துடனும் நேசிக்கத் தொடங்கினுர்.

கணவனும் மனைவியும் துன்பத்தின் மூட்டத்திலே அன்பை வளர்த்து வந்தனர். குழந்தை பிறப்பதற்கான அறிகுறிகள் பன்முறை உண்டாகியும், ஒரு குழந்தையும் வைதேகியின் வயிற்றிலே ஒன்பது மாதம்வரை நீடித்திருக்கவில்லை. எல்லாம் கருச் சிதைவுகள், ஒவ்வொரு முறையும் உயிருக்குச் சிக்கல். கமலா, சேஷாத்திரியோடு வாழ்ந்தது சிலகாலம். அவள் தன் தாயைப்போலவே வாய்த்துடுக்குக்காரியாக இருந்தாள். மாமியாரின் சொல்லுக்கு அடங்காமல் பொல்லாங்கு தேடிக்கொண்டாள். தன் தாயின் அரவணைப்புப் போதும் என்று விலகிக்கொண்டு போய் அகம்பாவம் தணியாத பெண்

ணுய் விளங்கிப் புற அழகை யாரும் மதியாதபடி செய்து கொண்டுவிட்டாள்.

கமலா இப்போது தாயை இழந்த அநாதை! 'பெண்ணே, பொன்னே?' என்று பெண்ணைப் பாதுகாத்துப் பரிவுகாட்டிப் பாழாக்கிவிட்ட பிறகு, கண்ணை மூடி விட்டாள் அந்தத் தாய். ஆனுல் அவள் செல்லங்கொடுத்துக் கமலாவுக்கு இழைத்த தீங்கு இன்னமும் நிலைத்திருக்கிறது. அந்தத் தாயின் பக்கபலம் இல்லாதிருப்பின் கமலாவுக்கு இந்த நிலை வந்திராது. இளையாளாக வாழ்க்கைப்படும் துன்பமும் வைதேகிக்கு ஏற்பட்டிராது.

குற்றம், தன்பேரிலும் உண்டோ என்று சேஷாத்திரிக்குச் சில சமயம் தோன்றும்; வக்கீல் ஆகிய அவர், யார் பக்கமும் நீதி, அநீதி காணக்கூடியவர் அல்லவா? ஆனுல் அவருடைய சஞ்சலத்திற்கு அணைபோட்டுவிடும் வகையிலே வைதேகி இருந்து வந்தா ளாகையால், சேஷாத்திரி, வாழ்க்கையிலே அமைதியையே பெற்ருர். 'வாழ்க்கை வாழ்வதற்கு' என்று அவரும் வைதேகியைப்போலவே நினைத்தார். உள்ளூர் மாதர் சங்கத்து அங்கத்தினர்களிலே ஒருத்தியாக வைதேகி, வெளியுலகிலும் குதூகலத்துடன் உலவியதை அவர் வரவேற்ருர். தாழ்வு மனப்பான்மையே இல்லாதவளாகப் பெருமிதத்துடன் அவள், வீட்டிலும் வெளியிலும் உற்சாகத்துடன் உலவுகிருள் என்ருல் அவள் மனத்திலே குறையே இல்லை என்பதுதானே பொருள்?

* * *

கடந்த ஏழெட்டு ஆண்டுகளில் கமலா இரண்டு மூன்று ஊர்களிலே வாசம் மாறியிருந்ததை மட்டும் வைதேகி, யாரார் மூலமோ கேள்வியுற்ருள். ஆனுல் கண

வருக்கு விலாசமாற்றம் பற்றிக் கடிதங்கள் வந்தனவா என்றும், அவர் அந்தச் சமயங்களிலே நினைத்தது என்ன என்றும் ஆராய்ச்சி செய்ய அவள் புகவில்லை. ஜீவனும்சத் தொகையிலே முன்பு ஆறணாக் கட்டணம் வெட்டப்பட்டதும் அவளுக்குத் தெரியாது; பிறகு ஆறணாக் கூட்டப்பட்டதும் தெரியாது.

ஆனால் கமலா சென்னையிலே ஹிந்தி வாத்தியாரம்மாளாகக் குடியேறிவிட்டதைச் சேஷாத்திரியும் வைதேகியும் ஏறக்குறைய ஒரே சமயத்தில் அறிந்தார்கள். விலாச மாற்றம் தெரிவித்துக் கமலா சேஷாத்திரிக்குக் கடிதம் போட்டாள். ஹைகோர்ட்டிலே அலுவல் விஷயமாகச் சேஷாத்திரி அடிக்கடி சென்னை செல்வார். ஆகையால், அவர் சிறிது மனக்கிளர்ச்சிக்கு உள்ளானார். எங்கேனும் கமலாவைப் பார்க்கும்படி நேர்ந்துவிடுமோ என்று அஞ்சினார். 'தென்பட்டாலும் பராமுகமாக இருப்பது சிரமமா!' என்று பிறகு மனத்தைத் தேற்றினார்.

வைதேகி, மாதர் சங்கத்திலேதான் கேள்விப்பட்டாள். 'சென்னையிலே என் தங்கைக்குப் பாட்டும் ஹிந்தியும் கற்றுத்தர வந்திருக்கிறாள் ஒருத்தி. கமலாதேவியாம், முதல்தரமான பாட்டு. அவளை நாம் இங்கே அழைக்கலாம். அடுத்த மாதம் பிறந்ததும் இங்கே கச்சேரி வைக்கலாம்' என்று உற்சாகமாகப் பேச்சைத் துவக்கிய ஒரு பெண், அந்தக் கமலாதேவியின் நிலைமையை விளக்கும் சில தகவல்களையும் சேர்த்துச் சொல்லிவிட்டாள்; அங்கலாய்ப்புடன்தான் சொன்னாள். அருகில் இருந்த ஓர் அங்கத்தினள், தன் கண்களை ஒரு தினுசாகச் சுழற்றி, "பேசாதே!" என்று அந்தப் பெண்ணுக்குச் சமிக்ஞை செய்துவிடவே, அந்தப் பெண் அடங்கிவிட்டாள். பல பேருக்கு அந்தக் கமலாதேவி யார் என்பது தெரிந்திருக்கிறதென்று அறிந்துகொண்டாள் வைதேகி.

சங்கத்தின் காரியதரிசியைக் கண்டு, அவள் தன் மனத்தைத் திறந்து விட்டாள்.

'அவள் பாடும் சங்கீதம் எப்படி இருக்கிறது என்று கேட்கத்தான் நான் விரும்புகிறேன். அவளையே நாம் அழைப்போம்' என்று கூறினுள். காரியதரிசிக்கு வைதேகியின் துணிவு, வியப்பையும் பரிவையும் உண்டாக்கியது. 'வேண்டாமே வைதேகி; உன் மனம் நோகலாம்' என்று சொன்னுள். ஆனுல் வைதேகியின் வற்புறுத்தலின்மேல், கமலாதேவிக்கு அழைப்புப் பறந்தது. கமலா தேவியின் விலாசத்தை அறிய, வைதேகி தூதுபோக அவசியமின்றி, சேஷாத்திரி ஜீவனும்சம் அனுப்புவது அம்பலமாகாமல், நாரீசங்கத்தின் அழைப்பு, கமலாவிற்குப் போனதுதான் ஆச்சரியம்! கமலாவின் சங்கீதத்தைப் புகழ்ந்த பெண்மூலம் காரியம் எளிதிலே நடந்துவிட்டது. ஆனுல் அழைப்பைக் கமலா ஏற்றுக்கொள்ளவில்லை. 'இதுநாள் வரையில் மேடை ஏறிக் கச்சேரி செய்ய நான் முயன்றதும் இல்லை. விரும்பியதும் இல்லை. இளஞ்சிறு பெண்களின் கலை வளர்ச்சிக்கு என் சங்கீதம் இப்போது உதவுவதே எனக்குப் போதும். மன்னியுங்கள்' என்று எழுதினுள் கமலா. வைதேகி இதைக் கேட்டு, மெய் சிலிர்த்தாள். கணவனிடம் சொல்லத் துடித்தாள். நா எழவில்லை.

ஆனுல் சேஷாத்திரிக்கு விஷயம் எட்டிவிட்டது. கமலாவின் சங்கீதம் நடைபெற்றிருந்தால், பெண்கள் குழாம் அதைப் புகழ்ந்திருக்கலாம்; இகழ்ந்தும் இருக்கலாம். ஆனுல் கமலா எழுதிய சிறு கடிதமோ, மிகப் பெரிய கிளர்ச்சியை எழுப்பிவிட்டது. அதைப் பெண்கள், தத்தம் இல்லங்களிலே பரவச் செய்துவிட்டனர். அத்தகைய் கடிதம் வந்ததைக் கேள்வியுற்ற சேஷாத்திரி, 'கமலாவின் கடிதமா?' என்று அதிசயப்பட்டார். ஏதேனும்

பொது இடத்திலே ஒரே ஒருமுறை கமலாவைப் பார்க்கும் படி நேர்ந்தால், அவளுடைய தோற்றத்தின் மூலம் ஏதே னும் மாறுதல் ஏற்பட்டிருக்கிறதா என்பதைத் தெரிந்து கொள்ள வேண்டுமென்ற எண்ணம் தோன்றியது அவருக்கு.

அவருடைய இந்த நினைப்பு, விடுவிடுவென்று வளருவ தற்குச் சந்தர்ப்பம் கிடைத்தது. ஒரு மாத இறுதியில், சென்னைக்குக் கோர்ட்டு அலுவலாகப் போன சேஷாத்திரி, அங்கே நாலு நாள் தங்க நேர்ந்தது. அவர் சென்னையிலே இருந்தபொழுது மாதம் பிறந்தது.

உள்ளூர் மணியார்டர் அனுப்புவதற்காகத் தாள்களை எடுத்த கைகள், பேனாவை ஏந்தத் தயங்கின. வீட்டின் சொந்தக்காரரைப் பார்த்து நாளாயிற்று. கையிலேயே வாடகைப் பணத்தைக் கொடுத்துவிட்டால் என்ன? அவளுக்கும் வீட்டிலேயே கொடுத்துவிட்டால்? ஒரு முறை, ஒரே தடவை; நொடியிலே பணத்தைத் தந்து விட்டு வரலாம்!

முதல் நாள் மாலைதான் அவர், கமலா வசிக்கும் தெரு வழியே நண்பர் ஒருவருடைய மோட்டாரிலே போனார். இரண்டு ஆண்டுகள் அவருடைய மனைவியாக வாழ்ந்திருந்த கமலா, அந்தத் தெருவில் வசிப்பதை நினைத்தார். அப் பொழுது எழுந்த பெருமூச்சு, கழுதைப்புலியின் விஷந் தோய்ந்த சுவாசம்போல் ஆகி, அவருக்குத் தளர்ச்சியையும் துன்பத்தையும் உண்டாக்கிவிட்டது.

சென்னையிலே அலுவலாக வருபவர் ஆதலால் ரிக்ஷா விலே ஏறும் வழக்கமே அறியாத சேஷாத்திரி, ஒரு ரிக்ஷாவை அமர்த்தினார். முதலில் கமலாவைக் கண்டு, பணத்தைத் தந்து, ஒரு சுமையை இறக்கிக்கொள்ளலாம்

என்றும், பிறகு வீட்டின் சொந்தக்காரரைப் பார்க்கலாம் என்றும் எண்ணினர்.

தெரு முனையில் நுழைகையிலேயே படபடப்பு ஏற்பட்டது; தம்மையே கண்டித்துக்கொண்டார். வீட்டின் இலக்கத்தை நினைவு கூர்ந்தார். வீடும் வந்தது. சுற்று முற்றும் பார்த்தார். யாரையும் காணவில்லை. திரும்பிவிட எண்ணினர். முன் வைத்த காலைப் பின் வைக்க மனம் இல்லை. ரிக்ஷாவினின்றும் இறங்கினர். அந்த வீட்டிலே எத்தனையோ அறைகள் இருக்கலாம். எத்தனை ஒண்டுக் குடிகளோ? சிறிது மலைத்தார். பையன் ஒருவன் கையிலே பை சகிதம் ஓடோடி வந்துகொண் டிருந்தான், அந்த வீட்டினின்று. அவனைத் தடுத்து நிறுத்தி, விசாரித்தார் சேஷாத்திரி. "ஓ! கமலா தேவியா? உள்ளே போங்கோ! கடைசி அறை" என்று சொன்னன் பையன்.

'கடைசி அறை! எனக்குத்தானே? வைதேகி அறியாமல் வருகிறேனே! எனக்கு வேணும் பூசை!' யாரோ நாலு அறை அறைவதுபோல மனசு குன்றிவிட்டது. உள்ளே போகச் சேஷாத்திரி விரும்பவில்லை. ஓடும் பையனை நிறுத்தி, 'ஒரு காரியம், பையா. இதிலே ரூபாய் இருக்கிறது; மாமிக்குக் கொடுத்துவிடுகிருயா?' என்று கேட்டார்.

"கொடுக்கணும்னு கொடுக்கிறேன். சட்டுன்னு தாங்கோ. சீக்கிரம் காய் வாங்கி வராட்டா அம்மா என்னைத் திட்டுவாள்."

சேஷாத்திரி, பணப்பையைத் திறக்கும்பொழுதே ஒரு குரல் கேட்டது. "நல்ல வேளை; இருக்கையா பாபு? எங்கே, எனக்கும் கொஞ்சம், கால் வீசை தக்காளிப் பழம் வாங்கி வரயாப்பா?" என்று கேட்ட அந்தக் குரல் சேஷாத்திரியைத் தலைநிமிரச் செய்தது.

கமலாதான் அந்தக் குரலுக்கு உடையவள்!

"மாமியே வந்தாச்சு; நீங்களே தந்துடுங்கோ. தக்காளியா? அரைச் சேரா?" என்று பையன் ஓடிவிட்டான்.

"வாருங்கள்" என்று கமலா, தட்டுத் தடுமாறின படியே வரவேற்றுள். "வாடகைப் பணத்தைக் கொண்டு வந்தேன், கொடுத்து விடலாமென்று" என்று குழறினுர் சேஷாத்திரி.

"வாடகையா!" என்று கேட்கப் போதுமான துணிவு இப்போது கமலாவுக்கு இருந்தது.

"இல்லை,—— வாடகைன்னு?—— அதுவும் கொண்டு வந்திருக்கிறேன்—அதனுல்—நான் தரவேண்டிய பணம் இதோ!"

பணப்பையைத் திறக்கத் தலைகுனிந்த சேஷாத்திரி, "வாசலிலேயே நிற்கிறேளே! உள்ளே வாங்கோ!" என்று, கமலா கூறியதும் அவளைத் தொடர்ந்து சென்றுர்.

ஏழெட்டு அறைகளிலே வசிக்கும் சிறு சிறு குடித்தனங்களைத் தாண்டிக்கொண்டே போனுர்கள் இருவரும். கடைசி அறை; அறை வாசலிலேயே அழகிய திரை. உள்ளே சென்றதும் நாற்காலியிலே அவரை அமரும்படி கூறி, எட்டி நின்றுள் கமலா.

யார் பேசுவது? என்ன பேசுவது?

"முதல் தேதியே,–காலங்கார்த்தாலே" என்று கூறிச் சிரிப்பை வரவழைத்துக்கொண்டாள் கமலா. சற்று மெலிந்திருந்த அவளுடைய தோற்றமும் கண்களிலே தணிவும் மலர்ச்சி இல்லாத சிரிப்பும் தெளிவாகத் தெரிந்தன. வாழ்க்கையிலே, மணம் இருந்தும் அவள் அதை நாற்றமாக மாற்றிக்கொண்டு, துன்புறுவதை அவளே நொந்துகொள்கிறுள் போலும்!

"என்னவோ தோணித்து; இப்படி வந்தேன்" என்று சேஷாத்திரி, உண்மையைச் சொல்லிவிட்டார். கை, பணப் பையைத் திறந்தது. பொட்டலத்தை எடுத்தார். அதை மெல்லப் பெற்றுக்கொண்டு, உடனே பக்கத்தில் இருந்த சிறிய அலமாரியிலே வைத்துவிட்டாள் கமலா. எண்ணிப் பார்க்கத் தோன்றுமா அந்தச் சமயம்?

"ஏதோ எனக்கும் வரும்படி வருகிறது; இனிமேல் வேண்டாம் என்று எழுதி விடலாமா என்று சில சமயம் நினைப்பேன். ஆனால் அப்படி எழுதவும் மனசாகவில்லை." இதைச் சொல்வதற்கு, முதலில் ஏற்பட்ட தடுமாற்றத்தை எப்படியோ சமாளித்துக்கொண்டாள் கமலா.

'மனசாகவில்லை!'

எத்தனை ஒளிவு மறைவின்றிச் சொல்கிறாள்? அவள் சுபாவமே இதுதானே? அந்த நாளிலேயே அவள் பேசுவதும் கேட்கும் கேள்விகளும் பளிச்சுப் பளிச்சு என்று, சிறந்த வக்கீல் பேசுவதுபோலத்தானே இருக்கும்? அதனால்தானே வந்தது தொல்லை ?

சேஷாத்திரி, ஒரு தடவை சும்மா பார்த்தார். பேசவில்லை. 'எனக்கும் அதிக வருமானம் வருகிறது' என்று மனத்துள் நினைத்தார்.

"நானே எழுதணும் என்று நினைத்தேன். வக்கீல் என்ற தோரணையிலாவது இங்கே ஒரு முறை உங்களை வரச்சொல்லணும் என்றுதான் யோசனை" என்று கமலாவே மீண்டும் பேசினாள்.

'எத்தனை விஷயங்கள் எழுத நீ நினைத்தாய்?' என்னும் வினா, சேஷாத்திரியின் நாவிலே ஊசலாடியது; ஆனால் வெளிவரவில்லை.

"நீங்கள்தான் யோசனை சொல்லணும். ஊரில் இருக்கிற வீட்டைப்பற்றித் தகராறு ஒன்று ஆரம்பம்."

தொழிலை ஒட்டிய விஷயம் வந்ததும் சேஷாத்திரியின் குரல் எழும்பிவிட்டது.

"அப்படியா? எங்கே, நான் பார்க்கிறேன்! சொல்லுங்கள்...சொல்லு, எல்லாம்."

கமலா ஒரு தினுசாக அவரைப் பார்த்துவிட்டு, அலமாரியினின்று ஒரு கடிதத்தை எடுத்துவந்து, அவரருகே முக்காலியின் மேல் வைத்தாள்.

அந்த மிரட்டல் கடிதத்தைப் படிக்க அவர் முனைந்ததுமே, கமலா, பக்கத்தில் உள்ள சிறு அறைக்குள் போனாள். லொடபுடவென்று ஏதோ ஓசை. சேஷாத்திரி தலை நிமிர்ந்தார். இப்பொழுதுதான் அந்த அறையைக் கவனித்தார். சுத்தமான அறை; கச்சிதமாகப் பொருள்கள்; சவரோரம் உறையிலே—அது தம்புராதான்—வீணை அல்ல; இரண்டு குமிழ் இல்லை. ஏதேனும் புத்தகத்திலே, ஆசைக்கு, கமலா-சேஷாத்திரி என்று எழுதி யிருப்பாளோ?...ஏதாவது புத்தகத்திலே இருக்கலாம்!

மீண்டும் ஓசை அடுத்த அறையிலே, கடிதத்தைப் படிக்கத் தொடங்கினார் சேஷாத்திரி. கமலா வந்தாள். கையிலே கோக்கோக் கிண்ணத்தை ஏந்தி.

"எதற்கு?" என்று கேட்டார் அவர்.

"குடிக்கத்தான்! - குடிக்கக் கூடாதா?" என்று குறுநகை செய்தாள் கமலா.

மறுமொழி கூற இயலாத சேஷாத்திரியின் வாய், கோக்கோவின் துணையை நாடியது.

"நான் கவனிக்கிறேன், இந்த வீட்டு விஷயம். உங்கள் அம்மாவின் வீடு...உனக்குத்தான் சேரும். யாரும் ஒன்றும் செய்துவிட முடியாது. நான் இப்போது போகணும். அப்புறமாய் வருகிறேன்."

சேஷாத்திரி எழுந்துவிட்டார். வாசல் வரையில் வந்து அவரை வழியனுப்பக் கமலாவும் பின் தொடர்ந்தாள்.

"ஒண்ணும் சொல்லாமல் ஓடிப் பூட்டியே சாமி!" என்று கோபித்தான் ரிக்ஷாக்காரன்.

"இன்னொரு இடத்திற்கும் போகவேணுமேப்பா" என்று கூறியவாறே, ரிக்ஷா ஏறினார் சேஷாத்திரி. கமலா, "நமஸ்தே!" என்று கைகூப்ப, சேஷாத்திரியும் கை கூப்பினார்.

கமலா, தெருத்திண்ணையிலேயே நிற்பதைத் தெருத் திருப்பம் காட்டியது. ஏதோ தகாத காரியம் செய்துவிட்டாற்போன்ற பதற்றம் ஒரு புறமும், சாதிக்க முடியாத ஒரு செயலைச் சாதித்துவிட்டாற்போன்ற பெருமிதம் மறு புறமும் ஆட்கொண்டன சேஷாத்திரியை. வைதேகியை நினைத்துக்கொண்டார். 'உனக்குத் துரோகமா?' என்று மலைத்தார் ஒரு கணம். 'துரோகமாகுமா? கமலா யார்? வேசியா? பிறன் மனைவியா? இல்லையே! ஐயோ, எப்படித் துரோகம் ஆகும்? இரண்டாண்டுகள் என் மனைவியாக வாழ்ந்தவளாயிற்றே கமலா! வைதேகி?'

கமலா! வைதேகி! சுருள் கூந்தலும் கருவிழிகளும் மாநிற மேனியுங் கொண்ட வைதேகி; இளைய மனைவி! சிறிது செம்பட்டை பாவிய குழலும், நீள் விழிகளும், சிவந்த மேனியுங் கொண்ட கமலா; முதல் மனைவி! வைதேகி, கமலா இருவரும் அவர் மனைவிகள், அவர் இருவருடனும் வாழ்ந்தால் என்ன? கூடாதா? இன்றைச் சட்டம் இருமனைவிகளைத் தடை செய்கிறதா?...ஆனால்

சட்டம் தெரிந்த வக்கீல் ஆயிற்றே அவர்? சட்டத்தின் நெளிவுசுளிவு அறிவாரே!

சேஷாத்திரி, தாம் குடியிருக்கும் வீட்டின் சொந்தக் காரருக்கு வாடகைப் பணம் கொடுக்க, மீண்டும் பணப் பையைத் திறந்தபொழுதுதான் பணப்பொட்டலம் மாறி விட்டதை அறிந்தார். நாற்பது ரூபாய் போய்விட்டது கமலாவிடம். மனத்துள் சிரித்தவாறே, பையின் தனிப் பகுதியினின்று பதினைந்து ரூபாய்களை எடுத்து, இருபத் தைந்தோடு சேர்த்து வாடகைப் பணத்தை ஒப்பித்தார்.

''மாசம் மாசம் வாடகை கொடுக்கும் தொல்லை உமக் கும் வேண்டாம், அதை வாங்கிக்கொள்ளும் தொல்லை எனக்கும் வேண்டாம். வீட்டை வாங்கிக்கொள்ளுமே, தந்துவிடுகிறேன்!'' என்று சொன்னார் வீட்டுக்காரர்.

''யோசிக்கிறேன்'' என்று கூறிச் சிரித்தார் சேஷாத் திரி. 'அங்கே வீடு வாங்குவானேன்? சென்னை வாசம் மேற்கொள்ளலாமா?' என்பதல்லவா அவர் யோசனை?

சில மாதங்களாகவே கமலாதேவியின் கையொப்ப முள்ள மணியார்டர் ரசீதுகள் வீட்டிற்கு வராததை வைதேகி கவனித்தாள். கணவர் பணம் அனுப்புவதில் லையா? அவள் ஏதாவது மீண்டும் வம்பு செய்யமாட் டாளோ?

கணவரைக் கேட்கவும் தயங்கினாள் வைதேகி, 'கோர்ட்டு அலுவல்கள் வரவர அதிகமாகிக் கொண்டு வந்தன அவருக்கு. எப்படி 'அவள்' விஷயமாகப் பேச் செடுப்பது? வீட்டில் நிம்மதியாகச் சிரித்துப் பேசும் அவரை எப்படிக் கேட்பது?' என்று யோசித்தாள்.

குமாஸ்தாவை விசாரித்தாள். ''கமலா தேவின்னு ஒரு மணியார்டர் அனுப்புவாரே; அந்தம்மா பேருலே ஏதோ கேஸ் தகராறு வந்தது; ஐயா தீர்த்து வச்சாரு.

ஒரு வேளை பீஸுக்காக வச்சுக்கச் சொன்னுங்களோ என்னவோ?'' என்று சொன்னுர் குமாஸ்தா. வைதேகிக்கு ஆச்சரியந்தான். வேறு விவரம் எதுவும் குமாஸ்தாவுக்குத் தெரியவில்லை.

இந்தக் கேள்வி அவளை உறுத்திக்கொண் டிருந்த பொழுதே வேறொரு செய்தி, அவள் காதில் விழுந்தது. அடுத்த தெருவிலிருந்து ஒரு பெண் பட்டணம் போகிருள். எதற்கு? ஹிந்தி வாத்தியாரம்மாளாக! யாருக்குப் பதில்? கமலாவிற்குப் பதிலாகத்தான்! உடல் நிலை காரணமாக முதலிலே நான்கு மாத ரஜா வேண்டுமென்ற கமலாதேவி, பிறகு வேலை வேண்டாம் என்று ராஜீநாமாச் செய்துவிட்டாளாம். சந்தேகத்துக்கு இடமான முறையிலே பேசினுர்கள் கமலாவின் உடல்நிலை பற்றி.

கமலா கெட்டுப்போய்விட்டாளோ? அதனுல்தான் அனுப்பக் கணவர் அருவருக்கிருரோ? அவமானமாக இருப்பதனுல்தான் அவர் சில நாளாக ஒரு மாதிரியாக இருக்கிருரோ? ஒரு நாள் வாய்விட்டு, மனம்விட்டுப் பேசத்தான் வேண்டும். அப்பொழுதுதான் இருவர் மனசும் பாரம் இல்லாமல் இருக்கும். வைதேகிக்கு அமைதி இல்லை. 'வீட்டிலே குழந்தைகள் இருந்தால் எத்தனை கவலை இருந்தாலும் எங்களுக்கு லட்சியம் இராது. பகவான் சோதனை செய்கிருர். குடியும் குடித்தனமுமாகக் குழந்தையை வேண்டி நிற்கிருேம் நாம். வேண்டாத குழந்தை பிறந்து, அவர் மானத்தை வாங்கப்போகிறதுபோல் இருக்கிறது!' என்று வருத்தப்பட்டுக்கொண்டாள்.

* * *

மறுநாள் சென்னையிலிருந்து வந்து சேர்ந்த சேஷாத்திரி, சிறிது அலுப்பும் சோர்வுமாகத்தான் தென்பட்டார்.

குளித்துச் சாப்பிட்டானதும் எதையோ யோசித்துக் கொண்டு உட்கார்ந்திருந்தார்.

எங்கோ வெளியில் போய்விட்டு வந்தார் சேஷாத்திரி. கூடத்தில் உட்கார்ந்திருந்த அவரிடம் வைதேகி வந்து நின்ருள். அவளைச் சேஷாத்திரி கூர்ந்து கவனித்தார். பிறகு ஒரு சீட்டை அவளிடம் நீட்டினுர்.

"லேடி டாக்டர் கொடுத்த சீட்டா?" என்று வைதேகி துண்டுச்சீட்டைப் படித்தாள். பன் முறை படித்தாள். "நிஜமாகவா?" என்று அயர்ந்துபோனுள். இரண்டு ஆண்டுகளுக்கு முன்பு, ஒரு கருச்சிதைவின்போது விபரீதம் விளையாமல் சஸ்திர சிகிச்சை செய்யப்பட்ட விஷயம் மட்டும் வைதேகிக்குத் தெரிந்திருந்தது. ஆனுல், 'இனிக் குழந்தை உண்டாகாது' என்று லேடி டாக்டர் அவளிடம் பளிச்சென்று சொல்லவில்லை. மனைவியை அழைத்துவரச் சேஷாத்திரி ஆஸ்பத்திரி சென்றபொழுது, டாக்டரம்மாள் அவரிடம் சீட்டுமூலம் சொல்லிவிட்டாள். வெளிப்படக் கூறக் கூசினுள்போலும்.

அந்தச் சீட்டைப் பாதுகாத்து வைத்திருந்தார் சேஷாத்திரி. "எதற்கு இத்தனை நாள் காட்டாமல் இப்பொழுது சொன்னீர்கள்? முன்பே சொல்லக்கூடாதா எனக்கு?" என்று அழுதாள் வைதேகி.

"வருத்தம் உண்டாகும் என்று சொல்லவில்லை வைதேகி. இப்பொழுது சொல்லும்படி ஒரு நிர்ப்பந்தம்—

"நிர்ப்பந்தமா? அதென்ன? ஒரு தரம் தவறினுல் மூன்று தரம் தவறுமாமே. மறுபடியும் ஏதாவது கல்யாணம் செய்துகொள்ளவா?"

"அது வேறேயா வைதேகி?" என்று வெற்றுச் சிரிப்புச் சிரித்த சேஷாத்திரி மேலும் சொல்லலானுர்.

"கேள், வைதேகி. நானே வக்கீல். தப்புச் செய்தவன் பக்கத்து வக்கீலானால், அவனைத் தாக்கித்தான் வாதாட வேணும். இப்பொழுது நானே தப்புச் செய்து விட்ட பிறகு?"

கம்பமாய்ப்போன வைதேகி, எந்த இடியையும் ஏற்கத் தயாராகிவிட்டாள்.

"ஜீவனும்சம் வேண்டாம் என்று எழுத மனசாக வில்லையாம். தொடர்பு அறக்கூடாது என்கிற எண்ணமாம். இப்பொழுது அவளைப் பார், வைதேகி.—உனக்குக் கோபமே வராது. அவளுக்கு மாதம் பிறந்துவிட்டது. நீதான் உதவி செய்யவேணும், வைதேகி—"

நொடியிலே அனைத்தையும் ஊகித்தறிந்த வைதேகி, பொங்கிவரும் மனக் குமுறலைக் சில விம்மல்களின் மூலம் வெளியேற்றி ஒழித்துவிட்டாள்.

"மன்னிப்பானேன் நான்? இந்தமட்டும் க்ஷேமம். நான் நினைத்ததுபோல மூன்றுமவள் வரவில்லையே!" என்று மொழிந்த வைதேகியின் சோகச்சிரிப்பிலே இருந்தது என்ன?

# மாதம் பிறந்தது

## ஜி. எஸ். மணி

அன்று, மாதத்தின் கடைசித் தினம். மறுநாள் பொழுது புலர்ந்தால் முதல் தேதி. நாராயணன் மணி பர்ஸைத் திறந்து, அதில் இருந்தவற்றை மீண்டும் ஒரு முறை எண்ணிக் கணக்குப் பார்த்தான். அப்போது மிகுந்திருந்தது பதினைந்து ரூபாய் பன்னிரண்டரை அணுக்களே. எத்தனை முறை எண்ணினாலும், எவ்வளவு கணக்குப் பண்ணினாலும், அந்த மாதத்தின் நிகர மீதி, பதினைந்து ரூபாய், பன்னிரண்டு அணு, ஆறு பைசாவேதான்.

அதுவும் எவ்விதம் மிச்சம் பிடித்தது? அந்த மாதத்தில் அவன் ஒரு சினிமாவுக்குக்கூடப் போகவே இல்லை. தேவைக்கு அதிகமாக அவன் காபி ஹோட்டலில் ஒரு கப் காபிகூட அதிகப்படியாகச் சாப்பிடவே இல்லை; அடிக்கடி வெற்றிலை மெல்லுவதையும் நிறுத்திவிட்டான். இந்த மாதிரி சில்லறை இனங்களின் மூலம் அந்தத் தொகை மிச்சமாயிற்று.

அவசியமே இல்லாமல் அதுவரையில் ஒவ்வொரு மாதமும் பதினைந்து ரூபாய்களை விரயம் பண்ணி வந்தது அவனுக்கே அப்போதுதான் புலப்பட்டது. சிக்கனமாயிருந்து, தான் மிச்சம் பிடித்துவிட்ட சந்தோஷத்தை மனைவியுடன்

பகிர்ந்துகொள்ள வேண்டுமென்று அவனுக்குத் தோன்றியது.

தன் அறையில் அமர்ந்தபடியே, "நாராயணி, நாராயணி!" என்று உரத்த குரலில் கூவினான். அவள் வந்தாள்.

"என்னுடைய சில்லறைச் செலவுகளை நிறுத்திக்கொண்டு, இந்த மாதம் பதினைந்து ரூபாய் மிச்சம் பிடித்து விட்டேன்" என்று நாராயணன் முக மலர்ச்சியோடு சொன்னான்.

"ரொம்ப சரி; என்னுடைய சில்லறைச் செலவுகளையும் குறைத்துக்கொண்டு விடட்டுமா?" என்று புன்னகையோடு கேட்டாள் நாராயணி.

"எதெல்லாம் உன்னுடைய சில்லறைச் செலவு?"

"தினந்தோறும் ஓரணா இரண்டணாவுக்குப் பூ வாங்குகிறேன்; இன்னும் ஸ்னோ, பவுடர் முதலிய பொருள்கள்; இவை யெல்லாந்தான். இந்த இனத்தில் இன்னொரு பத்து ரூபாய் மிச்சம் கிடைக்குமென்றால் நல்லதுதானே?" என்று சிரித்தாள் நாராயணி.

"அப்படி ஒன்றும் இப்போது அவசியம் இல்லை; உன் செலவுகளை நீ குறைத்துக்கொள்ளவேண்டாம்" என்றான் நாராயணன்.

"யோசித்து யோசித்துத்தான் மிச்சம் காண முயலுகிறோம். பாங்குக் கணக்கில் அதிகத் தொகை ஏறவே இல்லையே!" என்றாள் அவள்.

"வாஸ்தவந்தான்; பாங்கில் பணம் கட்டி, மூன்று மாதங்களுக்குமேல் ஆகிவிட்டது. நாளைக்குச் சம்பளம் வந்ததும் முதல் காரியமாக ஐம்பது ரூபாயாவது பாங்குக் கணக்கில் ஏற்றியே விடுவதென்று தீர்மானித்துவிட்டேன்."

"இப்போதுள்ள தொகை எவ்வளவு?"

"முந்நூற்று நாற்பத்தைந்து ரூபாய்தான்" என்று அலுத்துக்கொண்டான் நாராயணன்.

அவளுக்குத் தூக்கி வாரிப் போட்டது. "ஐந்நூறு ரூபாய்க்கு எட்டியிருந்ததே! எப்போது எப்படிச் செலவாயிற்று?" என்று கேட்டாள்.

"இந்த மூன்று மாதங்களாகப் பணம் கட்டுவதற்குப் பதிலாக, எடுத்தே செலவு செய்தால் எப்படிக் கூடுமாம்?" என்றுன் அவன்.

"என்ன செலவு அப்படி?"

"உயிர் வாழ்வதற்கு வேண்டிய அவசியப் பொருள்களின் விலையெல்லாம் நாளுக்கு நாள் உயர்ந்துகொண்டே போகின்றன; ஆனுல் நான் வாங்கும் சம்பளப் பணமோ இரண்டு வருஷங்களுக்கு ஒரு முறைதானே ஐந்து ரூபாயாக உயருகிறது? செலவழிக்காமல் சாகவா சொல்லுகிருய்!" என்று சிரித்தான் நாராயணன்.

"இந்த மாதிரி செலவானுல் நீங்கள் எப்படித்தான் கடனை அடைக்கப்போகிறீர்களோ என்று எனக்கும் கவலையாகத்தான் இருக்கிறது" என்ருள் நாராயணி.

"எங்கேயாவது, எப்படியாவது, புதையல் கிடைக்குமா என்று எதிர்பார்த்துக்கொண்டே இருக்கவேண்டியதுதான்" என்று சொல்லி, அவன் சிரித்தான்.

"புதையல் கிடைக்கும் அதிருஷ்டம் நமக்கு இருந்தால், பாங்கில் போட்ட பணம் குறைவானேன்?" என்று எதிர் வெட்டுப் போட்டாள் அவள்.

"ஆமாம்? கையில் ஒரு தம்பிடிக்குக்கூட வழியில்லாமல் இருக்கும்போது, எதிர்பாராமல் எதிர்ப்படும் தனத்தைத்தானே புதையல் என்றும் அதிருஷ்டம் என்றும்

குறிப்பிடுகிறோம்? வேண்டாதபோது கிடைக்கும் பணம் புதையலாகுமா?''

''கையில் இருப்பதெல்லாம் கரைந்துவிட்ட பிறகு, நமக்கும் கட்டாயம் அதிருஷ்டம் அடிக்கும் என்று சொல்லுகிறீர்க ளாக்கும்'' என்று சிரித்துக்கொண்டே சொன்னாள் நாராயணி.

''செலவைப்பற்றி மலைக்காமல் இருக்கவேண்டு மென்றால் அப்படித்தானே நினைத்துக்கொண்டு, ஆறுதல் அடையவேண்டும்?''

''அப்படியென்றால், சேர்த்து வைப்பதைப்பற்றி இவ்வளவு தீவிரமாக யோசித்து, மண்டையை உடைத்துக் கொள்வானேன்?''

''ஏதோ புதையல் கிடைக்கும் வரையில் சும்மா இருக்காமல், சொந்த முயற்சியிலும் முண்டியடித்துப் பார்க்கலாமே என்கிற ஆவல்தான்'' என்றான் நாராயணன்.

பட்டும் படாமலும் அவர்கள் இந்தமாதிரி ஆராய்ச்சியிலே ஈடுபட்டிருந்தபோது, நாராயணனுடைய அத்தியந்த நண்பன், வெகு அவசரமாக அவனிடம் வந்தான்.

''என்ன இப்படித் தலை போகிற அவசரம் உனக்கு? எங்கே, நிலைப்படியில் இடித்துக்கொண்டு நிற்கப் போகிறாயோ என்று நானே பயந்துவிட்டேன்'' என்று வந்தவனை நாராயணன் வரவேற்றான்.

''மிகவும் அவசர காரியந்தான் நாணு; என் மாமியார் இறந்துவிட்டாளாம்; இப்போதுதான் தந்தி வந்தது; இன்று இரவு மெயிலிலேயே என் மனைவியை அனுப்பியாக வேண்டும். மாதக் கடைசி ஆகிவிட்ட தல்லவா? என் கையில் ஒரு பைசாக்கூடப் பணம் இல்லை. அதனால்தான்

உன்னிடம் வந்தேன்; ஒரு பதினைந்து ரூபாய் கொடு; அடுத்த மாசம் சம்பளம் வாங்கியவுடன் திருப்பித் தந்து விடுகிறேன்" என்றான் அவசரமாக வந்த நண்பன்.

நாராயணன், வாயே திறவாமல் பதினைந்து ரூபாயை எடுத்துக் கொடுத்து அவனை அனுப்பிவிட்டான்.

"சிக்கனமாக இருந்து சேர்த்த உங்கள் பணம் ஒரே நொடியில் கரைந்துவிட்டதே! ஐயோ பாவம்!" என்று சொல்லிப் பரிவுடன் நாராயணி சிரித்தாள்.

"என்ன செய்வது நாராயணி? நீயே சொல்: இந்தச் சமயத்தில் அவனுக்கு உதவாமல் அந்தப் பணம் நம்மிடம் இருப்பதில் என்ன பயன்? தவிர, நான் பாங்குக் கணக்கு வைத்திருக்கிறேன் என்பதும் அவனுக்குத் தெரியும். வந்து கேட்கும்போது இல்லை என்று சொல்வதுதான் அழகா?" என்றான் நாராயணன்.

"அது சரி; நாளைக்குப் பாங்கில் ஐம்பது ரூபாய் கட்டி விடுவீர்களா?"

"இப்போது அது முடியாது; அதில்தான் பதினைந்து ரூபாய் நழுவிவிட்டதே. ஏதோ. நாளைக்குப் பொழுது புலரட்டும்; அப்புறம் அதைப்பற்றி யோசித்துக்கொள் வோம்" என்றான் நாராயணன்.

ஒவ்வொரு மாதத்துடனும் அவன் பெரிதாகப் போரா டினான் என்று சொல்வதிலே மிகை ஒன்றும் இல்லை. அவனுக்கு நினைவு தெரிந்தது முதலே, பிறந்த ஒவ்வொரு மாதத்துடனும் போராட்டந்தான் அவன் கண்டது. மாதமே பிறந்து பிறந்து போராடுகிறதா அல்லது பிறந்த ஒவ்வொரு மாதத்துடனுமே போராட்டமா என்பதே புரி யாதபடி அது நிகழ்ந்துகொண்டே இருந்தது. அவ னுடைய தகப்பனார் காலத்திலிருந்தே அது துவங்கிவிட் டது. அவன் தகப்பனார், பள்ளிக்கூட வாத்தியாராக

வேலை பார்த்தார்; அதற்காக அவர் பெற்ற சம்பளமும் குறைவுதான். ஆனால் வாழ்க்கைக்கு வேண்டிய சாமான்கள் அனைத்துமே அவர் காலத்தில் கொள்ளை மலிவாக விற்றன; வேண்டியவையெல்லாம் ஏராளமாகக் கிடைக்கவும் கிடைத்தன. அப்படிப்பட்ட காலத்திலேயே குடித்தனம் நடத்த அவர் மிகவும் கஷ்டப்பட்டார். அவனைப் படிக்க வைத்து முன்னுக்குக் கொண்டுவர வேண்டுமென்று அவர் பட்டபாடு கொஞ்ச நஞ்சம் அல்ல. எப்போதும், எதுவுமே போதாத கொடுமைதான். வருவாய் போதவில்லை; ஆகவே குடித்தனச் சாமான்கள் போதவில்லை; அவனுடைய பள்ளிப் படிப்பிற்குத் தேவையான புத்தகங்கள் வாங்கிக் கொடுக்கப் பணம் இல்லை; நல்ல சட்டைத் துணி இல்லை; அவனுக்கு அப்புறம் பிறந்த தங்கைக்குப் பாவாடை இல்லை; நகை நட்டுக்கள் இல்லை. நல்ல நாள் இல்லை; கிழமை இல்லை. எப்போதுமே கஷ்டக் குடித்தனந்தான். 'இது வேண்டும் அது வேண்டும்' என்ற ஆசை இல்லை. தத்தளிப்புத்தான். விற்கக்கூடியது அனைத்தையும் விற்று விற்றே அவ்வப்போது அவசரத் தேவைகளை அவர்கள் பூர்த்தி செய்துகொள்ள வேண்டியதாயிற்று, பரம்பரைச் சொத்தாக வந்துகொண்டிருந்த மூன்று காணி நிலத்தில், இரண்டு காணிகளை அவன் தகப்பனார் காலத்திலேயே விற்றுத் தின்று தீர்த்தாகி விட்டது. மீதி இருந்தது காணி நிலந்தான்.

நாராயணன் கற்றுத் தேர்ந்து, ஆளாகி நின்றதும் அவன் தகப்பனார் மரணாவஸ்தையில் இருந்தார். அப்போது அவர் அவனை அருகில் அழைத்து, "அப்பா, உலகம் தெரிந்த பிள்ளையாகிவிட்டாய்; இனிமேல் நான் உனக்கு அதிகம் சொல்லத் தேவையில்லை; பொறுப்புடன் புத்திசாலித்தனமாக நடந்துகொள்வாய் என்று நம்புகிறேன்; மிஞ்சியிருப்பது ஒரே காணி நிலந்தான். உன் பங்கிற்கு,

நீயும் அதை விற்றுவிடாமல் நம்முடைய பூர்விகச் சொத்தாக வைத்துக்கொண்டே வாழ வேண்டுமென்பது என் ஆசை. உன் தங்கைக்குக் கல்யாணம் செய்துவைக்கும் பொறுப்பையும் நீதான் ஏற்றுத் தீரவேண்டி இருக்கிறது; என்னதான் வந்தாலும் மிஞ்சியிருக்கும் ஒரு காணி நிலத்தையும் விற்றுத் தீர்த்துவிடாதே. பரம்பரையாக வந்ததில் அந்த ஒன்றையாவது வைத்துக்கொண்டு காப்பாற்று'' என்று, ஆதங்கத்துடன் சொல்லிவிட்டு அவர், பிராணனை விட்டுவிட்டார்.

வாழவேண்டி, அவர், பிரதிமாதமும் நடத்திய போராட்டம் நாராயணன் அறிந்ததே. அதில் வெற்றி அவருக்குக் கிடைத்ததா, இல்லையா என்பதை நிர்ணயிக்கும் சக்தி அவனுக்கு இல்லை. அவருடைய வெற்றி தோல்வியைப் பற்றி அவன் கவலைப்படவும் இல்லை.

அதேமாதிரியான போராட்டத்திலேதான் அவனும் அப்போது ஈடுபட்டிருந்தான்; ஆனால் தகப்பனைப்போல் இன்றி, முற்றும் வேறுபட்ட வகையில் அவன் போராடிக்கொண்டிருந்தான். ஒவ்வொரு மாதமும் போராடினான்; வாழ்க்கையோடு போராடினான். அகவிலைகள் யாவும் 'எவரெஸ்ட்' சிகரத்தை அளாவி, உயர்ந்து நிற்கையில் அவன் போராடினான்; கள்ளச் சந்தையில் அகப்பட்டுக்கொண்டு, மீள வழியின்றி அவன் தவித்தான்; 'இல்லை, இல்லை, என்ற பேச்சினூடே அவன் புகுந்து புகுந்து புறப்பட்டான்.

இவ்வளவிலும் ஒரே ஒரு லட்சியத்தைப்பற்றி நிற்க முன் வந்து, அவன் தடுமாறித் தத்தளித்தான். பரம்பரைச் சொத்தாக வந்து, மிஞ்சி நின்ற ஒரே காணி நிலத்தைக் கடனில் கரைத்துவிடாமல் கைப்பற்றி நிற்க அவன் பெருமுயற்சியுடன் போராடினான்.

அவனே முன் நின்று முயன்று, தன் தங்கையைக் கல்யாணம் செய்து கொடுத்ததில் கடன் படாமல் இருக்க அவனால் முடியவில்லை. குடும்பப் பொறுப்பேற்றதும் தகுந்த இடத்தில் தங்கையைக் கொடுத்ததில் அவன் அளவற்ற பெருமையும் பூரிப்பும் அடைந்தான்; என்றாலும் அந்த ஒரே காணி நிலத்தை அடகு வைக்காமல் அந்தக் கல்யாணத்தைச் சிறப்பாக நிறைவேற்றி வைக்க அவனால் முடியவே இல்லை. வாங்கிய கடனைத் திரும்பக் கொடுத்து, நிலத்தை மீட்டுக்கொள்ளும் பெரு முயற்சியிலேதான், பிரதி மாதமும் நாராயணன், வாழ்க்கையின் மற்றப் பிரச்னைகளோடு எதிர்த்து நிற்கவேண்டி யிருந்தது.

"மாதம் பிறந்தது; போட்ட திட்டங்களெல்லாம் தவிடு பொடியாயின; சேர்த்த பணம் கரைந்தது; மற்றச் செலவுகள் இன்னும் அதிகரித்தன; வருவாய் போதவில்லை.

மாதம் பிறந்ததும் அவன், நூற்றைம்பது ரூபாய்கள் சம்பளமென்று வாங்கினான். வீட்டு வாடகை, விறகு, மற்றும் வயிறு வளர்ப்பதற்கு வேண்டிய சாமான்கள், துணிமணிகள், காபிக் கொட்டை, சர்க்கரை, சினிமா, ஹோட்டல் என்று செலவுகள் யாவும் போக மீதமென்று கண்டுபிடிப்பதே பகீரதப் பிரயத்தனமாக இருந்தது. இருந்தும் ஒவ்வொரு மாசமும் இருபத்தைந்து ரூபாய்களுக்குக் குறையாமல், முடிந்தால் ஐம்பது மட்டும், மிச்சம் பிடிக்க அவன் பெரிதும் போராடினான்.

"இன்று முதல்தேதி ஆயிற்றே; பாங்கில் எவ்வளவு கட்டிவிட்டு வந்தீர்கள்?" என்று நாராயணி ஆவலுடன் வினவினாள்.

"முந்நூற்று நாற்பத்தைந்தாகக் கணக்கில் இருந்ததை மறுபடியும் ஐந்நூற்றுக்கு உயர்த்திவிட்டேன்

நாராயணி!'' என்று பெருமை பிடிபடாமல் பேசினன் நாராயணன்.

நாராயணி, நம்ப முடியாமல் திகைத்தாள்: ''நிஜ மாகவா! நேற்றுத்தான் புதையல் கிடைக்குமென்று பய முறுத்தினீர்கள்! இன்றே அந்தப் புதையல் எங்கிருந்து கிடைத்தது?'' என்று கேட்டுச் சிரித்தாள்.

''புதையல் கிடைக்கும்போது கிடைக்கட்டும்; அதை யும் வேண்டாமென்று மறுக்க மாட்டேன்; இன்று நூற் றைம்பது ரூபாய் பாங்கில் கட்டியிருப்பதும் உண்மை தான்'' என்ருன் நாராயணன்.

''வாங்கிய சம்பளத்தை அப்படியே கட்டிவிட்டால் மற்றச் செலவுகளுக்கு என்ன செய்வதாம்?''

''என் கைக்கடிகாரத்தை நூறு ரூபாய்க்கு விற்று விட்டேன்; அதைக் கொண்டு, இந்த மாதத்தை ஓட்டிவிட முடியுமென்று நம்பிக்கை'' என்ருன் நாராயணன்.

நாராயணி, சொல்ல முடியாத பரிவுடன் அவனை நோக்கினுள்; அவள் கண்கள் கலங்கிநின்றன; ''வேண்டு மென்று, ஆசைப்பட்டு, நீங்கள் உங்களுக்கு வாங்கிக் கொண்ட பொருள்களை யெல்லாம் ஒவ்வொன்ருக இப்படி விற்றுக்கொண்டே வருவது எனக்கு வருத்தமாக இருக் கிறது. அப்போது பௌண்டன் பேனவை விற்றுவிட் டீர்கள்; இப்போது கைக்கடிகாரமும் போய்விட்டது. என்னிடம் மட்டும் இரண்டு வடச் சங்கிலியையும் கைவளை களையும் விட்டு வைப்பானேன்? உங்கள் கஷ்டத்தைவிட என் நகை எனக்குப் பெரிதென்று நான் நினைப்பேனு!'' என்று அவள் விம்மினுள்.

நாராயணன் சிரித்தான்: ''தங்கம்போன்ற உன் மனசு எனக்குத் தெரியாதென்று நீ நினைத்தாயா, நாராயணி? நாளைக்கு உனக்குப் பெண் குழந்தை பிறந்தால், அதற்குப்

போட்டு, அலங்கரித்து அழகு பார்க்கவாவது உன் நகைகள் உன்னிடமே இருக்கட்டுமே. ஆணுக்குப் பௌண்டன் பேனுவும் கைக்கடிகாரமும் அழகைக் கொடுப்பதில்லை; வெறும் ஆடம்பரந்தான். ஆனால் பெண்ணுக்கு நகைகள் அதிக அழகு செய்கின்றனவே! மேலும் மெருகு கொடுக்கின்றனவே! அதை மறந்துவிட முடியுமா?'' என்ருன்.

நாராயணி தலை குனிந்தபடி கண்ணீர் விட்டாள்; அப்போது அவள் ஐந்தாறு மாசம் கர்ப்பமாக இருந்தாள். ''எனக்கும் பெண் குழந்தையே பிறக்க வேண்டுமென்று நீங்கள் ஆசீர்வாதம் செய்கிறீர்களா? ஏற்கனவே ஒரு தங்கையைப் படைத்துவிட்டு நீங்கள் கடன் வாங்கிக் கஷ்டப்படுவது போதாதா?'' என்று கேட்டாள்.

நறுக்கென்று கிள்ளியதுபோல அவனுக்குக் கோபம் வந்துவிட்டது. ''என் தங்கையால் எனக்குத் தாங்க முடியாத கஷ்டமென்று, உன்னிடம் நான் எப்போது முறையிட்டுக்கொண்டேன்? அவளுக்காக நான் பட்ட கடனை, நீ உன் நகைகளை விற்று அடைக்க முன்வர வேண்டாம். முடிந்தால் என் சம்பாத்தியத்திலேயே அடைத்துக்கொள்ளுவேன்; முடியாவிட்டால் அந்த நிலத்தையே விற்றுத் தொலைத்துவிடுகிறேன். அவ்வளவு தூரத்துக்கு உன் பரிவு எனக்கு அவசியமில்லை'' என்று அவன் நிமிஷ நேரத்தில் அவளை வெடுக்கென்று தூக்கி யெறிந்து பேசிவிட்டான்.

'இவ்வளவு ஆத்திரப்படும்படி அப்படி-என்ன சொல்லிவிட்டேன்?'' என்று கேட்டு, நாராயணி விக்கி விக்கி அழுதாள்.

பதிலே பேசாமல் அவன் வெளியில் போய்விட்டான். அவர்களிடையே அந்த அற்ப மனத்தாங்கல் பிறந்த இரண்டு மூன்று நாட்களுக்கெல்லாம் நாராயணிக்குக் கர்ப்பச் சிதைவு ஏற்பட்டுவிட்டது. எந்த விஷயத்தைப்

பற்றி அவள் என்ன நினைத்துக்கொண்டு மனத்தைப் பிழிந் தெடுத்து வாட்டிக்கொண்டாளோ தெரியாது. உண்டான கர்ப்பச் சிதைவு அற்ப சொற்பமாகப் போய்விடாமல் பிரமாதமாக வளர்ந்துவிட்டது.

அவள் உயிரைக் காப்பாற்ற, நாராயணன் சேர்த்து வைத்திருந்த பணத்தை யெல்லாம் தண்ணீராக வாரி இறைத்துவிட்டான். வந்து வந்து போன மாதங்களெல் லாம் அவனுடைய பாங்குக் கணக்கை அடியோடு கரைத்து, வடிக்கும் வரையில் திருப்தி அடையவில்லை.

"உங்களுக்குச் சத்துருவாக நானே வந்து முளைத்து விட்டேனே!" என்று, உடம்பு தேறியதும், நாராயணி மிகவும் வருந்தினாள்.

"உன்னைவிடப் பணம் பெரிதென்று நினைக்கும் அற்ப னாக என்னை எண்ணிவிட்டாயா நாராயணி? இந்தமட்டும் நீ பிழைத் தெழுந்தாயே; அதுதான் எனக்குத் திருப்தி; உன் மனநிலை தெரியாமல் நான்தான் உன்னிடம் மிருகத் தனமாக நடந்துகொண்டேன். என்னை மன்னிப்பாயா நாராயணி?" என்று அவள் மன்னிப்பை அவன் வேண்டினான்.

"பாங்குக் கணக்கில் பணம் எவ்வளவு பாக்கி?" என்று சிரித்துக்கொண்டே கேட்டாள் நாராயணி.

"அதென்ன பிரமாதம்? இன்னும் சில மாதங்களில் மீண்டும் சேர்த்துவிட்டால் போகிறது!" என்று நாராயண னும் சிரித்தபடியே பதிலளித்தான்.

"புதையல்—?" என்று கேட்டு நிறுத்தினாள் நாராயணி.

"தன்னாலே கிடைக்கும்; பார்த்துக்கொண்டே இரு."

அடுத்த மாதம் பிறந்தது; வளர்ந்தது; போயிற்று அதற்கடுத்த மாதம் வந்தது; மறைந்தது. அதை அடுத்த மாதத்தோடு நாராயணனின் தங்கையிடமிருந்து தந்தி ஒன்று பறந்து வந்தது; அந்தத் தந்தி சொல்லியது: 'கணவர் திடீரென்று மாரடைப்பால் இறந்துவிட்டார். உடனே புறப்பட்டு வருக.—கௌரி.'

நாராயணனுக்கு மூச்சு முட்டியது; விழி பிதுங்கியது; எதைப்பற்றியும் யோசித்துக்கொண்டு நிற்க அவனுக்கு நேரம் இல்லை. எண்ணிப்பார்க்க அவகாசம் இல்லை. மனத்தில் அமைதி இல்லை. உடம்பில் தெம்பு இல்லை.

பிறந்து பிறந்து மோதிய மாதங்களின் வேகத்திலே அவற்றின் அதீத சக்தியிலே, அவன் தன்னை அறியாமலே அடித்துச் செல்லப்பட்டான்; மாதங்களின் சுழற்சியுடனே அவனும் உருண்டுகொண்டே போனான்.

அவன் தங்கை கௌரியும் வீட்டோடு வந்துவிட்டாள். அவள் வந்து சேர்ந்த சில நாட்களுக்கெல்லாம் அவளைத் தேடிக்கொண்டு மூவாயிரம் ரூபாய்களும் வந்து சேர்ந்தன. அதாவது இறந்துபோய்விட்ட அவள் கணவன் செய்து வைத்திருந்த இன்ஷ்யூரன்ஸ் தொகை அது!

"இந்தப் பணத்தை வைத்துக்கொண்டு நான் என்ன செய்யப்போகிறேன் அண்ணா? உன்னிடமே இருக்கட்டும்" என்று சொல்லி,நாராயணனின் தங்கை அந்தத் தொகையை அவனிடமே கொடுக்க முனவந்தாள்.

"இதை வைத்துக்கொண்டு இனி நான்தான் என்ன செய்யக்கிடக்கிறது கௌரி? விருப்பம் இருந்தால் ஆயிரம் ரூபாய் மட்டும் கொடு; ஈடு வைத்துள்ள நிலத்தைத் திருப்பி, அதையும் உன் பெயருக்கே எழுதி வைத்துவிடுகிறேன்; பாக்கிப் பணத்தை உன் பெயரில் பாங்கியில் கட்டிவிடுகிறேன்" என்றான் நாராயணன்.

அவன் தலையின்மீது தீராத கடன் சுமையாக ஏறி நின்ற பணம் அவன் தங்கைக்குக் கல்யாணம் செய் வித்தது; அப்புறம் புருஷனை இழந்து நின்ற அவளுக்கு அந்தப் பணமே துணையாக நின்றதுடன், நாராயணனின் கடன்சுமையையும் இறக்கிவிட வழி கோலிவிட்டது. இப் படித்தானே வியாக்கியானம் செய்ய வேண்டும்?

மாதம் பிறக்கிறதா அல்லது பணம் பிறக்கிறதா? இரண்டுமே பிறந்து, மனிதனைச் சாகவோ அல்லது வாழவோ வைக்கின்றன. மனிதனோ தானும் பிறக்கிறான்; மற்றவற்றையும் பிறக்கச் செய்கிறான்; கடைசியில் எல்லா வற்றையும் அழித்துவிட்டுத் தானும் அழிகிறான்.

நாராயணனுக்காகப் பிறந்த மாதத்தில் எந்த ஒரு குறிப்பிட்ட மாதம் அவனுக்கு அளவிட முடியாத நன்மை யையோ சொல்லில் அடங்காத தீமையையோ செய்தது என் பதைப்பற்றித் திட்டமாக அவனாலேயே அபிப்பிராயம் சொல்ல முடியாது.

முன்சென்ற மாதம் மறைய, அடுத்த மாதம் வழக்கம் போலே, உடனே, பிறந்துகொண்டே தான் வந்தது.

# புது வீடு

ஸரோஜா ராமமூர்த்தி

புது வீட்டு எஜமானி சிவகாமு அம்மாள், தன் வெள்ளெழுத்துக் கண்ணுடியைத் துடைத்துப் போட்டுக் கொண்டு, வாசல் ரேழியில் வந்து நின்றுகொண்டாள். வாய்க்கால் மேட்டுக்குமேல் 'ஸெடான்' கார் இரண்டு வந்து நின்றன. அதிலிருந்து புருஷர்களும் பெண்களும் குழந்தைகளும் சிரித்துப் பேசிக்கொண்டே, புது வீட்டை நோக்கி நடந்தார்கள்.

மடுவன்கரை கிராமத்தில் வாய்க்கால் ஓரமாக அமைந்த இந்தப் புது வீடு பழமையானது. அதற்கு வயசு நூறு வருஷங்கள் ஆகிவிட்டன என்று சிவகாமுப் பாட்டி நூறுதரம், தன் பேரன் பேத்திகளிடம் சொல்லி யிருப்பாள். அந்தக் கிராமத்தில் முதல் முதலில் அதிசயப்படும் படி எழும்பிய வீடு, அது ஒன்றுதான். அதற்குக் கிராமத்து ஜனங்கள் ஆசையுடன் வைத்த பெயர் இன்றும் நிலைத்திருக்கிறது. 'புது வீடு' என்று ஏழை முதல் பணக்காரன்வரை அதை அழைத்தார்கள். அந்த வீட்டில் இன்றைக்கு இருபது இருபத்தைந்து கல்யாணங்கள் நடந்திருக்கின்றன. பிறந்த குழந்தைகள் நாற்பது ஐம்பதுக்கு மேல் இருக்கும். இதில் அதிசயம் என்னவென்றால், மிருத்யு பயம் அந்த வீட்டுக்கு ஏற்பட்டதில்லை. அந்த

வீட்டில் பிறந்து வளர்ந்த குழந்தைகள் எல்லோரும் தீர்க்க ஆயுசுடன் நன்றாக இருக்கிறார்கள். சிவகாமுப் பாட்டி, புது மாட்டுப் பெண்ணாக அந்த வீட்டில் நுழைந்த காட்சியை, அவளைப்போல் தொண்டு கிழமாக இருக்கும் யாரையாவது அந்தக் கிராமத்தில் கேட்டால் பசி தாகத்தை மறந்து சொல்லிக்கொண்டே இருப்பார்கள். புது வீட்டுக்கு எஜமானியாக ஏற்பட்டதால் 'புது அம்மா' என்று அவளையும் செல்லமாக அழைத்தார்கள் அவர்கள். வயசு கிட்டத்தட்ட எண்பது ஆகியிருந்தாலும் 'புது அம்மா'வின் மனோ திடமும் ஆரோக்கியமும் அவளிடம் எல்லாரும் மதிப்புக் கொள்ளும்படி செய்திருந்தன. அவளுடைய உத்தரவையும் கட்டுப்பாட்டையும் யாரும் மீறி நடந்ததில்லை.

வீடு, மிகவும் அழகாகக் கிளி கொஞ்சிற்று என்று சொல்லலாம். விசாலமான வாசல் நடை. ஐம்பது பேருக்குமேல் படுத்துக்கொள்ள இடவசதி இருந்தது.

அதற்கு அடுத்தாற்போல் ரேழி. உள்ளே கல்யாணக் கூடம்; அகல முற்றம். கல்யாணக் கூடத்துச் சுவரில் அழகிய சித்திரங்கள் இன்றும் காணப்படுகின்றன. ஸ்ரீ மீனாக்ஷி சுந்தரேசுவரரின் கல்யாணம், சீதாகல்யாணம், ராதாகல்யாணம். இந்தப் படங்களில் ஒவ்வொன்றும் கூடத்தின் பெயரை ஸ்திரப்படுத்தின. காமிரா அறையில் பெரிய புரைகள் சுவரில் பதித்திருந்தார்கள்; இன்றை இரும்பு பீரோக்களைவிட உறுதியானவை. இவைகளுக்கு அடுத்தாற்போல் உக்கிராண அறை. அதற்கு அடுத்துப் பின் கட்டுக் கூடம். அங்கும் விசாலமான முற்றம்; சமையல் அறை. சாப்பிடும் கூடம், வாய்க்கால் வரைக்கும் பரந்து கிடக்கும் கொல்லைப்புறம்; இரண்டு கிணறுகள்; மாட்டுத் தொழுவம்; இன்னும் எவ்வளவோ ?

இவ்வளவு பெரிய வீட்டைப் பார்த்த கிராமத்து ஜனங்கள், பிரமித்துப் போய்த்தான் புதுவீடு என்று இதற்குப் பெயர் வைத்திருந்தார்கள்.

தூரத்தில் வருபவர்களைப் பார்த்துவிட்டு, சிவகாமுப் பாட்டியின் சுருங்கிய கன்னங்கள் சந்தோஷத்தால் மலர்ந்தன.

"அடியே சீதாலக்ஷ்மி! அவர்கள் எல்லாரும் வந்துவிட்டார்கள். கல்யாண கூடத்திலே எல்லாம் சரியா இருக்கா, பார்" என்று சொல்லிக்கொண்டே, வாசல் நடையில் காலை நீட்டிக்கொண்டு உட்கார்ந்துகொண்டாள்.

சீதாலக்ஷ்மு-சிவகாமுவின் மாட்டுப் பெண்-பரபரப்புடன் வெளியே வந்து, எட்டிப் பார்த்துவிட்டு, உள்ளே போனாள். "அடி சுலோ! பாட்டியை உள்ளே வந்து உட்கார்ந்துகொள்ளச் சொல்லேன். அவர்கள் வரும்போது வாசலில் காலை நீட்டிக்கொண்டு..." என்று ஏதோ முணுமுணுத்துக்கொண்டே சமையற் கட்டுக்குப் போனாள்.

"அம்மா என்ன சொல்லிவிட்டுப் போகிறாள்?" என்று சுலோசனாவின் தாய் அம்புஜம், தன் பெண்ணிடம் கேட்டாள்.

"புது அம்மாவை உள்ளே வரச்சொல்லணுமாம்."

"யார் போய்ச் சொல்கிறது, அவளிடம்?" என்று சொல்லிவிட்டு அம்புஜம் தன் வேலையைக் கவனிக்கச் சென்றாள்.

சிவகாமுவின் கொள்பேத்திதான் சுலோசனா. அவளுடைய கல்யாணத்துக்கு நிச்சயதார்த்தம், அன்று புது வீட்டில் நடக்க ஏற்பாடாகி இருந்தது. இதில் சீதாலக்ஷ்மிக்குத் துளிகூட இஷ்டம் இல்லை. கடல் மாதிரி, நகரத்தில்

ஒரு மாசத்துக்கு முன்புதான் கட்டிமுடித்த பங்களாவில் ஆடம்பரமாக எல்லாம் நடத்த வேண்டும் என்று அவள் திட்டம் போட்டிருந்தாள். "அம்மா ஒப்புக்கொள்ள மாட்டாளே" என்று, அவள் கணவர் நடேச சர்மா இருந்தாற்போல் கூறினர்.

"ஒப்புக்கொள்ளாவிட்டால் போகட்டும். கூரை தலையில் இடிக்கிற மாதிரி ஒரு கூடம். சுவரிலே திட்டுத் திட்டாக வர்ணச் சாயம். கூடத்திலே ஒரே இருட்டு. எனக்கும் வயசாகவில்லையா? உங்க அம்மாவுக்குத் தெரிகிற கண்கூட எனக்குத் தெரியவில்லை. சமையல் உள்ளில் பாம்பு பிடுங்கினுல்கூடத் தெரியாது."

"அதெல்லாம் இனிமேல் மாறப்போகிறதா? ஆகிவந்த இடத்தை விட்டுவிட்டுப் பங்களாவில் நடத்த அவள் ஒப்பமாட்டாளடி."

"அதுதான் சொன்னேனே: ஒப்பாவிட்டால் அவர் வீட்டோடு இருக்கட்டுமென்று. டில்லியிலிருந்து அம்புஜமும் அவள் அகமுடையானும் வந்தால் இந்த வீட்டைப் பார்த்துச் சிரித்துவிட்டுப் போவார்கள்."

"சிரிக்கிறது என்னடி? அம்புஜம் பிறந்து வளர்ந்த வீடுதானேடி இது?"

"மாப்பிள்ளைகூட இங்கேதான் பிறந்தாராக்கும்!"—சீதாலக்ஷ்மி கேலியாகச் சிரித்தாள்.

"மாப்பிள்ளைக்குப் பழைய சம்பிரதாயத்தில் மிகவும் நம்பிக்கை உண்டு. உன் பெண்ணைப்பற்றி வேண்டுமானுல் சொல். ஒப்புக்கொள்ளுகிறேன்."

"அந்தப் பெண் சுலோ, ஒரு நாழிகைகூட இங்கே இருக்காது. அதுக்குப் 'பாட்மிண்டன்' ஆடி வழக்கமாம். இங்கே ஆட வேண்டியதுதான், கிணற்றைச் சுற்றி!"

"போடி பைத்தியம்! நம் கொல்லையை ஒரு சுற்றுச் சுற்றிவிட்டு வந்தால் போதுமேடி."

"என்ன அப்பா! அம்மாவுக்குத் தகுந்தாற்போல் ஏதாவது சொல்லிக்கொண் டிருக்கிறீர்கள்? சுவரெல்லாம் காரை உதிர்ந்து கிடக்கிறதே. அசங்கியமாக இல்லை?" என்றான், இதுவரையில் இவர்கள் பேச்சைக் கேட்டுக் கொண்டிருந்த ராமபத்திரன்.

அவன், சீமைக்குப் போய்ப் பெரிய படிப்புகள் எல்லாம் தேறி வந்திருப்பவன். ஆனால், அவன் கப்பலேறுவதற்காகப் பம்பாய் புறப்படு முன் புது வீட்டுக்கு வந்து, பாட்டியை நமஸ்கரித்துவிட்டு, அந்த வீட்டிலிருந்து நல்ல வேளையில் புறப்பட்டு, ஆறு மைல் கட்டை வண்டியில் பிரயாணம் செய்து, ரெயில் நிலையத்தை அடைந்து, பம்பாய் சென்றான்.

"ஆமாண்டா அப்பா! எல்லோரும் தூஷிப்பீர்கள், என்னையும், புது வீட்டையும். சுவரைப் பழுது பார்த்தால் தானே நன்றாக இருக்கும்? உன் அப்பா ஆயிரம் ஆயிரமாகக் கொட்டி, பங்களா கட்டி இருக்கான். இருந்தாலும் இதன் கால் தூசுக்கு அது ஈடாகுமா? இந்த வீட்டிலே நடந்த கல்யாணம் எத்தனை? பிறந்த குழந்தைகள் எத்தனை? சுவரெல்லாம் சுண்ணும்புச் சன்னம் வைத்துக் கட்டியது. சுண்ணும்பு அரைக்க முப்பது பேர் வேலை செய்தார்களாம். மாட்டுக் கொட்டில் பக்கம் தூர்ந்து போய் இருக்கு பார், 'காடி அடுப்பு'; அதில்தான் வேலைக்காரர்களுக்குச் சாப்பாடு தயாராகுமாம். உன் அப்பா கட்டினை வீடு, ஒரு வேலைக்காரனுக்குப் பசிவேளைக்குச் சாப்பாடு போட்டிருப்பானு? கேள். ஆயிரம் ஆயிரமாக அன்னதானம் நடந்த வீடப்பா இது" என்று இதுவரையில் தூங்குகிறமாதிரி, பின்கட்டுக் கூடத்தில் படுத்திருந்த சிவ

காமுப் பாட்டி எழுந்து உட்கார்ந்து, பேரனுடன் சண்டைக்கு ஆரம்பித்தாள்.

''பாட்டி, பாட்டி, நான் சொன்னதெல்லாம் தவறு. உன்னாலும், இந்த வீட்டாலுந்தான் பாட்டி நான் இவ்வளவு உயாந்த நிலைக்கு வந்திருக்கிறேன்'' என்று சிரித்துக்கொண்டே ராமபத்திரன் பாட்டியின் அருகில் போய் உட்கார்ந்துகொண்டான்.

''உன்னை ஒன்றும் சொல்லவில்லையடா, கண்ணே! என் கண் எதிரில், என் காது கேட்கப் புது வீட்டை மட்டும் யாரும் ஒன்றும் செய்யாதீர்கள், சொல்லாதீர்கள்'' என்று கூறிவிட்டுக் கிழவி வாசலிலிருந்து கொல்லை வரை ஊடுருவிப் பார்த்தாள்.

அதற்குமேல் சீதாலக்ஷ்மியால் வாயைத் திறக்க முடியவில்லை. டில்லியிலிருந்து வந்த மாப்பிள்ளை, பாட்டியின் வாக்கு வேதவாக்கு என்று சொல்லிவிட்டார் சுலோவின் நிச்சயதார்த்தமும் புது வீட்டில் நடக்க ஏற்பாடாகியது.

## 2

'ஸெடான்' காரிலிருந்து இறங்கி வந்தவர்கள் புது வீட்டுக்கு வந்தார்கள். வாசலில் உட்கார்ந்திருந்த பாட்டி, சிரித்த முகத்துடன் அவர்களை வரவேற்றாள். மாப்பிள்ளைப் பையன், வீட்டை ஒரு மாதிரியாக அலட்சியத்துடன் பார்த்துக்கொண்டே உள்ளே நுழைந்தான், வீட்டில் இருக்கும் பெண்களின் நவநாகரிகத் தோற்றமும், அதற்கு நேர் விரோதமாக அவர்கள் இருக்கும் வீட்டையும் பார்த்ததும் சம்பந்தி வீட்டாருக்கு ஆச்சரியமாக இருந்தது. இவர்களுடன் பிள்ளையின் பாட்டியும் வந்திருந்தாள். தன்னைவிடப் பத்துவயது மூத்தவளாகிய சிவகாமுப் பாட்டியைப் பார்த்ததும் அவளுக்குச் சந்தோஷமாக இருந்தது

"வாருங்கள், அம்மா" என்று பிள்ளையின் பாட்டியை உபசரித்தாள் சிவகாமுப் பாட்டி.

"நன்ருக இருக்கிறதே அம்மா நீங்கள் என்னைப்'பகு' வசனத்தில் அழைப்பது! என் பெயர் காமாக்ஷி. காமாக்ஷி என்றே கூப்பிடுங்கள்" என்று சொல்லிவிட்டுக் காமாக்ஷி, சிவகாமு எதிரில் உட்கார்ந்துகொண்டாள்.

"புது அம்மா, உங்களை அம்மாவுடன் ஐயா உள்ளே வரச்சொன்னுரு" என்று வேலைக்காரன் வந்து அவர்களைக் கூப்பிட்டான்.

"என்ன யோசனை செய்கிறீர்கள்? நான் பல்லுப் போன கிழமானுலும் என்னைப் 'புது அம்மா' என்றுதான் இந்த ஊரில், குஞ்சு குழந்தைகள் முதல் பெரியவர்கள் வரையில் கூப்பிடுவார்கள். இந்த வீட்டுக்கும் புது வீடு என்றுதான் பெயர், காமாக்ஷி" என்று பெருமையுடன் சொல்லிக்கொண்டே சிவகாமு, வந்த பாட்டியுடன் உள்ளே சென்ருள்.

கூடத்தில் விரித்திருந்த ரத்தினக் கம்பளத்தில் உட்கார்ந்து சுலோசனு வீணை வாசித்துக்கொண் டிருந்தாள். புருஷர்கள் பல விஷயங்களைப்பேசிக்கொண் டிருந்தார்கள். பின்கட்டுக் கூடத்தில் இளம் பெண்கள் உட்கார்ந்து, வேடிக்கை வேடிக்கையாக ஏதோ பேசிக்கொண் டிருந் தார்கள். பாட்டிகள் இருவரும் காமரா உள்ளில் உட் கார்ந்திருந்தார்கள். பிள்ளையின் பாட்டியாகிய காமாக்ஷி, தன் வெள்ளெழுத்துக் கண்ணுடியைத் துடைத்து, மாட் டிக் கொண்டு, பேரனுக்கு வாய்க்கப்போகும் மனைவியை ஊடுருவிப் பார்த்தாள். பெண் மூக்கும் முழியுமாய்க் களைசொட்டும் முகத்துடன் இருப்பதைப் பார்த்துக் காமாக்ஷிப் பாட்டி மிகவும் திருப்தி அடைந்தாள்.

"குழந்தையைப் பிடித்திருக்கிறதா உங்களுக்கு?" என்று பாட்டி, காமாக்ஷியைக் கேட்டாள்.

"பிடிக்காமல் என்ன? லக்ஷணமாகத்தான் இருக்காள். பேரனுக்குப் பிடிக்கிறதுதானே முக்கியம், அம்மா, இந்தக் காலத்தில்? நம்முடைய காலமா இது?"

"நம் காலத்துக்கு என்ன குறைவு வந்துவிட்டதாம்? வீடும் வாசலும், பொன்னும் மணியும், நிலமுமாக இருந்த காலமில்லையா அது? இந்தக் காலத்தைப்போலவா வயிற்றுக்கு அளந்து சாப்பிட்டுக்கொண் டிருந்தோம்?" என்று சிவகாமுப் பாட்டி, லோக விவகாரத்தில் இறங்க ஆரம்பித்தாள்.

இதற்குள் கூடத்தில் இருந்த புருஷர்களின் குரல் வலுத்தது.

"எல்லாம் திருப்தியாகத்தான் இருக்கிறது..." என்று மாப்பிள்ளைப் பையன் ஏதோ சொல்ல வாயெடுத்தான். எல்லோரும் பேச்சை நிறுத்திவிட்டு, அவனைக் கவனிக்க ஆரம்பித்தார்கள்.

"மனசில் இருப்பதைச் சொல்லிவிடுங்கள்" என்று நடேச சர்மா கூறினர்.

"கல்யாணம் எங்கே வைத்துக்கொள்ளப் போகிறீர்கள்? எனக்கு ஏகப்பட்ட சிநேகிதர்கள் உண்டு. எல்லாரும் படித்தவர்கள். அயல் நாடுகளுக்கெல்லாம் போய் வந்தவர்கள்."

"அதனுல் என்ன அப்பா? தகுந்தபடி மரியாதை செய்துவிட்டால் போச்சு" என்ருர் நடேச சர்மா.

மாப்பிள்ளைப் பையனுக்குக் கோபம் வந்தது. 'இந்த வீடு, படு கர்நாடகம்! எனக்குப் பிடிக்கவில்லை! என்று இந்தக் கிழவருக்குச் சொல்ல வேண்டும்போல் இருக்கிறதே' என்று நினைத்துக்கொண்டான் அவன்.

"இன்னும் என்ன யோசனை செய்கிறீர்கள்?" என்று மேலும் தூண்டிக் கேட்டார் சர்மா,

"யோசனை ஒன்றும் இல்லை. கல்யாணத்தை இந்தப் பழைய வீட்டிலா வைத்துக்கொள்ளப் போகிறீர்கள்?" என்று வெளிப்படையாகக் கேட்டான் பையன்.

சிறிது நேரம் எல்லாரும் பதில் சொல்லத் தெரியாமல் விழித்தனர். பின்கட்டில் பெண்களுடன் பேசிக்கொண்டிருந்த சீதாலக்ஷ்மி எழுந்து வந்து, கதவுக்குப் பின் நின்றுகொண்டாள்.

"அதெல்லாம் இல்லை. டவுனில் புதுசா வீடு கட்டி முடிந்திருக்கிறது. அதிலே கல்யாணத்தை வைத்துக் கொண்டால் போச்சு. அதற்காக யோசனை பண்ண வேண்டாம்" என்று கூறி, அங்கு நிலவியிருந்த நிச்சப்தத்தைக் கலைத்தாள் அவள். இவ்வளவு தைரியத்துடன் ஒரு பிரச்னையை முடிவுக்குக் கொண்டுவந்துவிட்டதைப் பற்றிச் சீதாலக்ஷ்மி மிகவும் பெருமை அடைந்தாள்.

"இந்த விஷயம் அவ்வளவு லேசில் முடிந்துவிடாது அப்பா. என் தாய் சம்மதப்படவேண்டும் இதற்கு" என்று சர்மா, சீதாலக்ஷ்மியின் பதிலைச் சட்டை செய்யாமல் கூறினார். அவர், மாப்பிள்ளைப்பையன் கேட்ட கேள்விக்குப் பதிலைத் தன் தாயிடமிருந்து எதிர்பார்த்துக் கொண்டிருந்தார். இடையில் மனைவி குறுக்கிட்டது அவருக்குப் பிடிக்கவில்லை.

"நான் என்ன அப்பா சொல்லக்கிடக்கிறது? பிறந்த குழந்தையிலிருந்து தொண்டு கிழம் வரையில் இந்த வீட்டைப் புது வீடு என்றுதான் இன்று வரையில் சொல்லி வருகிறார்கள். பையன் ஒரு நிமிஷத்தில் இதைப் பழைய வீடாக்கிவிட்டானே? எங்கேயாவது கல்யாணத்தை நடத்திக்கொள்ளுங்கள். நான் மட்டும் புது வீட்டை விட்டு

வரமாட்டேன். கல்யாணம் ஆன பிறகு, குழந்தைகளை ஒரு நாளைக்கு அழைத்து வா, அப்பா. ஆகிவந்த இடத்தில் ஒரு நாள் தங்கட்டும்'' என்று வருத்தத்துடன் சிவகாமுப் பாட்டி கூறினாள்.

''நன்றாக இருக்கிறதே, நீங்கள் சொல்கிறது, அம்மா! நீங்கள் இல்லாமல் ஒரு கல்யாணமா? கல்யாணம் புது வீட்டிலேயே நடக்கட்டும். அப்பொழுதுதான் நானும் உன் கல்யாணத்துக்கு வருவேண்டா, பையா'' என்றாள், இதுவரையில் பேசாமல் இருந்த காமாட்சிப் பாட்டி.

பெரியவர் இருவரையும் மீறிப் பேசக்கூடியவர்கள் அங்கு யாரும் இல்லை.

ஒரு மாதத்துக்கு அப்புறம் புது வீடு ஜகஜ்ஜோதியாகப் பிரகாசித்தது. உதிர்ந்திருந்த சுவரெல்லாம் சன்னக்காரை மெழுகிவிட்டார்கள். பகவானின் கல்யாண வைபவங்கள் புதுச் சித்திரங்களாகத் திகழ்ந்தன. மடுவன் கரைக் கிராமத்தில் நடந்த புது வீட்டுக் கல்யாணத்தைப் பற்றியே ஜனங்கள் மாதக்கணக்கில் பேசித் தீர்த்தார்கள். சிவகாமுப் பாட்டி, பெற்ற குழந்தையைவிட அன்புடன் புது வீட்டின் சுவரைத் தடவிப் பார்த்துப் பெருமையும் பூரிப்பும் அடைந்தாள்.

# புது வீடு

'குமுதினி'

பெர்ஹாம்பூருக்கு மாற்றினார்கள், விஜயவாடா விற்கு மாற்றினார்கள், காகிநாடாவிற்கு மாற்றினார்கள். ஆந்திர தேசமெல்லாம் சுற்றினோம். தமிழ் நாட்டிலும் ஊர் ஊராக மூட்டை கட்டிக்கொண்டு சென்றோம். எங்கே போனாலும் வாடகை வீடுகள். வாடகையை வாங்கிக்கொண்டு வீட்டைப் புறக்கணிக்கும் சொந்தக் காரர்கள் ஆயிரத்திற்கு ஆயிரம் பேர்கள். அன்பற்ற அந்நியர் கைகளில் அகப்பட்டுக்கொண்டு துன்புற்று, வெயிலிலும், மழையிலும் அடிபட்டு, வார்னீஷைக் கண்டு ஜன்மங்கள் ஆன கதவு ஜன்னல்கள், ஜீவன் மாத்திரம் மிகுந்திருக்கும் கிழவியையும் கிழவனையும்போல் நின்றிருக் கும். சுவரில் திட்டுத்திட்டாகச் சுண்ணும்புகள் பெயர்ந்து விழுந்து, அழுக்குடன் விகாரமாக இருக்கும். சாக்கடைகள் கட்டைத் துடைப்பங்களால் தேய்த்துத் தேய்த்துக் கழு வப்பட்டுக் குழிகள் ஏற்பட்டுத் தண்ணீர் தேங்கி நின்று, துர்க்கந்தம் வீசும்.

இதெல்லாம் பொறுத்தாகிவிட்டது. கண்ணுக்கு அழகாகவும், சற்றுச் சுத்தமாகவும் இருக்கும் ஒரு வீட்டில், சிலகாலம் வசித்துவிட்டு இந்த உயிரை விடவேண்டும் என்ற சபலம் மனத்தில் இருந்தது. அவ்விதம் செய்யா

விட்டால் எனக்கு ஜடபரதர்போல் மீண்டும் மீண்டும் ஜன்மம் ஏற்பட்டுக்கொண்டே இருக்கும் என்று தோன்றியது. பென்ஷன் வாங்குமுன் ஒரு வருஷம் அவர் லீவு எடுத்துக்கொண்டார். "பென்ஷன் பணத்தை மொத்தமாக வாங்கி, ஒரு வீடு வாங்கிவிடவேண்டும்; சின்னதாக இருந்தாலும் போதும்" என்றேன்.

"பார்க்கலாம்" என்று அவர் எனக்கு அதிக ஆசை உண்டாக்காமல் முன் ஜாக்கிரதையுடன் சொன்னார்.

அவர் சொன்னதை வைத்துக்கொண்டு நான் சும்மா இருப்பேனா? தினமும் அவருக்கு ஒரு முறை ஞாபகப் படுத்தி, நச்சரித்ததுடன், நானாகவே விசாரிப்பது, பத்திரிகைகளின் விளம்பரங்களைப் பார்ப்பது, கன்டிராக்டர்களைச் சின்ன வீடு கட்ட என்ன செலவாகும் என்று திட்டங்கள் கேட்பது—இம்மாதிரி செய்துவர ஆரம்பித்தேன். ஒரு தினம் பத்திரிகையில் விளம்பரம் ஒன்றைப் படித்து, அவருக்குக் காண்பித்தேன்:

"விரைவில் விற்பனைக்கு-புது வீடு; நகரத்தின் தூசி, ஓசை முதலியவற்றிலிருந்து தனிமையில் இருப்பது. சொந்தக்காரர் வேறு ஊர் போவதால் உடனே விற்பனைக்குக் கிடைக்கும்."

"இங்கே காண்பி, பார்ப்போம்" என்று அவர் வாங்கிப் படித்தார். "புது வீடு என்று இருக்கிறதே. யுத்தத்திற்குப் பின் கட்டப்பட்டது என்றால் அசாத்திய விலை கேட்பார்களே!" என்றார்.

"புண்ணியம் உண்டு. தயவுசெய்து மலிவு என்ற காரணத்திற்காக ஒரு பழைய வீட்டை வாங்கி விடாதீர்கள்" என்றேன்.

"பழைய வீடு என்றால் என்ன? ரிபேர்களைச் சரியாகச் செய்தால் புது வீடு ஆகிவிடுகிறது" என்றார், வீட்டைப்

பற்றின எங்களுடைய தினசரி தர்க்கம் ஆரம்பித்தது. ஒரு மணிநேரம் தர்க்கம் செய்த பிறகு இறுதியில் வீட்டைப் பார்த்து, விலையைக் கேட்டு வருவது என்று தீர்மானித்தோம்.

பிற்பகல் ஒரு நண்பரின் வண்டியை இரவல் வாங்கிக் கொண்டு, காலையில் பத்திரிகையில் பார்த்த விலாசத்திற்குச் சென்றோம். புறப்படும் சமயம், அவர், கண்டிப்பான குரலில், "பத்துக்குள் இருந்தால்தான் என்னால் வாங்க முடியும். அதற்குமேல் ஒரு பைசாக்கூடக் கொடுக்க முடியாது" என்றார்.

"இந்தக் காலத்தில் இந்தப் பெரிய நகரத்தில் பத்தாயிரத்திற்கு ஒரு வீடு எப்படிக் கிடைக்கும்? ஒரே அறை தான் கிடைக்கும்" என்றேன். அவர் விடை எதுவும் சொல்லவில்லை. மௌனமாக இருந்தார். நல்ல வேளை! மறுபடியும் தர்க்கம் தொடங்கவில்லை என்று நன்றி செலுத்தினேன் இறைவனுக்கு.

நகரத்தின் நெருக்கமான தெருக்களைத் தாண்டி, வெளிச் சென்றோம். பாழ்மனைகள், சிறிய தோப்புகள், வயல்கள் தென்பட்டன. ஒரு கேட்டின் வாசலில் வண்டி நின்றது. உடைந்த கேட்டு; கம்பி கொண்டு கட்டப்பட்டிருந்தது. அதன் பேரில், 'புது வீடு' என்ற பெயர் புதிதாக வார்னிஷில் எழுதப்பட் டிருந்தது. கேடடைத் திறந்துகொண்டு உள்ளே சென்றோம். சுத்தமாகவும் மிகவும் ஒழுங்காகவும் இருந்த ஒரு சின்னத் தோட்டத்தின் நடுவில் சிறிய, மிக மிகச் சிறிய வீடு ஒன்று இருந்தது. அதை வீடு என்று சொல்வது சரியல்ல. குடிசை என்றே சொல்லலாம். வெளி வராந்தாவில் ஒரு சாய்வு நாற்காலியில் ஒருவர் படுத்து, ஏதோ புத்தகம் படித்துக் கொண்டிருந்தார். நாங்கள் வருவதைப் பார்த்துவிட்டுப் புததகத்தை மூடி வைத்துவிட்டு எழுந்தார். நல்ல உயரம்,

மிக வசீகரமான தோற்றம். சலவை செய்த வெள்ளை வேட்டியும் சட்டையும் தரித்திருந்தார்.

எங்களை அறிமுகப் படுத்திக்கொண்டோம். "வீட்டைக் காண்பிக்கிறேன்" என்று சொல்லி, உள்ளே அழைத்துச் சென்றார். ஓரே ஒரு பெரிய அறைதான் அந்த முழு வீடும். 25 × 40 அடி இருக்குமோ அல்லது சற்றுப் பெரிதாக இருக்குமோ தெரியாது. மேலே கூரை. இந்த அறை இரண்டாகத் தடுக்கப்பட்டு, ஒரு புறத்து அறையில் சாமான்கள், சிறிய கட்டில் முதலியன இருந்தன. மற்றொன்று உட்காரும் அறையாக, சில பிரம்பு நாற்காலிகள், எழுதும் சிறிய மேஜை, புத்தக அலமாரி இவைகளுடன் இருந்தது. பின்புறம் சென்றோம். வாசற்புறம் போல் அந்தப்புறமும் ஒரு வராந்தா இருந்தது. அந்த வராந்தாவும் இரண்டாகத் தடுக்கப்பட்டு, ஒன்று ஸ்நான அறையாகவும் ஒன்று சமையல் அறையாகவும் செய்யப்பட்டிருந்தது. சமையலறையில் மிக மிகச் சௌகரிய வசதிகள்: மின்றவண்ணம் சமைக்கும் விதம் புகையில்லா அடுப்பு, அடுத்தாற்போல் தண்ணீர்த் தொட்டி, அம்மி, கல்லுரல், பண்டங்கள் தயார் செய்யும் மேடை, எதிர்ப் புறத்துச் சுவரில், அலமாரியில், பளபளவென்று சுத்தி செய்து அடுக்கப்பட்ட பாத்திரங்கள் எல்லாம் எனக்கு மிக்க சந்தோஷத்தையும் ஆச்சரியத்தையும் கொடுத்தன. கப்பல்களில் சமையலறை முதலிய வசதிகள் மிக ஒழுங்காகவும் சிக்கனமாகவும் அமைக்கப்பட் டிருக்கும் என்று கேள்விப்பட் டிருக்கிறேன்; ஆனால் நேரில் பார்த்ததில்லை. இந்தச் சமையலறை மிக மிக வசீகரமானதாக, இதில் சமைக்க வேண்டுமென்ற ஆசையை உண்டாக்கிற்று. பாத்திரம் துலக்கும் மேடைக்குமேல் தண்ணீர்த் தொட்டி ஒன்று இருந்தது. அதில் குழாய் பதித்திருந்தது. அந்த மேடைமீது போட்டிருந்த கறுப்புச் சிமின்டைக் கையால்

தடவிப் பார்த்தேன். எண்ணற்ற வெளி முற்றங்கள், துர்க்கந்தம் வீசும் சாக்கடைகளின் ஞாபகம் உண்டாயின.

வீட்டுக்காரர் 'சிமின்ட் அல்ல' என்ருர், என் மனத்தில் இருப்பதை ஊகித்தவர்போல்.

"கடப்பைக் கல்லா?" என்றேன். கடப்பைக் கற்கள் சில சமயம் உடைந்துவிடுகின்றன. கனமான பாத்திரங்கள் வைத்துத் துலக்க ஏற்றவை அல்ல.

"இல்லை. நல்ல கருங்கல். அதை ஷண்முகம் தாமே 'பாலிஷ்' செய்தார்."

"யார் ஷண்முகம்?"

"இந்த வீட்டுக்குச் சொந்தக்காரர்."

"ஓ!"

இவர்தாம் சொந்தக்காரர் என்று நான் எண்ணியிருந்தேன்.

சமையலறையை விட்டு வெளியே வந்து,ஸ்நான அறையைப் பார்த்தோம். அங்கேயும் எல்லா வசதிகளும் மிக நாகரிகமாக இருந்தன. நான் இந்த இரண்டு அறைகளின் சௌகரியங்களைக் கண்டு மயங்கிவிட்டேன். இவ்வளவு குறைந்த செலவில் இவ்வளவு சௌகரியங்கள் செய்து கொள்ளக் கூடும், இவ்வளவு சுத்தமாகவும் அழகாகவும் வைத்துக்கொள்ளலாம் என்று நான் நினைக்கவில்லை; கனவிலும் நினைக்கவே இல்லை! "பகவானே! அவர் இந்த வீட்டை வாங்கும்படி செய்யவேண்டும்" என்று மனத்தில் பிரார்த்தித்தேன்.

வீட்டைக் காண்பித்த ஆசாமி, எங்களை ஸ்நான அறையிலிருந்து அழைத்து வந்து, அந்த வீட்டிற்கு வெளியில், பக்கத்தில் கட்டப்பட்டிருந்த மற்ருெரு சிறிய அறையைக் காண்பித்தார். "இது என்ன?" என்றேன். "அதிதி

அறை" என்றார். நம்மவர்களுக்கு அதிதி அறை வழக்க மில்லையே! கூடச் சென்றோம். மிகச் செளகரியமாகவும் சிக்கனமாகவும் கட்டப்பட்டிருந்த அதையும் பார்வை யிட்டோம். "மாட்டுக்கொட்டில்தானே?" இது என்று அவர் கேட்டார்.

"ஆமாம். மிகக்குறைந்த செலவில், ஷண்முகம் அதை ஓர் அறையாக மாற்றிவிட்டார்" என்று புன்சிரிப்புடன் கூறி, "இந்த அறையில் மிக மிகப் பெரிய அதிதிகள் தங்கி இருந்திருக்கிறார்கள். அமெரிக்க டி. வி. ஏ. அதிகாரி மார்க்கன், ஆக்ஸ்போர்டு புரொபஸர் எல்லிஸ் பார்க்கர் போன்றவர்கள் இதில் தங்கியிருக்கிறார்கள்" என்றார், அவ்வீட்டைக் காண்பித்தவர்.

"அட ராமா! ஷண்முகம் என்றது தேசீயக் கல்லூரி பிரின்ஸ்பால் டாக்டர் ஷண்முகத்தையா?" என்றார் என் கணவர் ஆச்சரியத்துடன்.

"ஆமாம், உங்களுக்கு அவரைத் தெரியுமா?"

"தெரியாது. ஆனால் அவருடைய பாண்டித்தியத் தைப்பற்றியும் அவருடைய தியாகத்தைப்பற்றியும் கேள்விப்பட்டிருக்கிறேன். அபாரத் திறமைசாலி தேசீயக் கல்லூரி, மிகக் கேவலமான நிலைமையில் இருந்த சமயம் அவர் அதற்குத் தலைவராக ஏற்பட்டு, அதை மிகவும் திருத்தி, முன்னணியில் நிற்கச் செய்தார் என்றார்களே; அவருக்குச் சம்பளம் நிறைய இருக்குமே! ஏன் இந்தக் குடிசையில் வசித்தார்?"

"முன்பெல்லாம் காலேஜ் ஹாஸ்டலிலேயே ஓர் அறையில் இருந்தார். ஆனால் கல்யாணம் ஆன பிறகு இங்கே வந்துவிட்டார். அவர் தமது சம்பளத்தில் முக்கால் பாகத்திற்குமேல் கல்லூரிக்கே திருப்பிக் கொடுத்து, நல்ல புத்திசாலிப் பிள்ளைகளுக்கு ஸ்காலர்ஷிப் ஏற்படுத்தி

யிருந்தார். ஆகையால் அவருக்குச் சொந்தச் செலவுக்குப் பணம் மிகக் கொஞ்சந்தான் இருக்கும்.'' இவ்விதம் சொன்னவண்ணம் அவர், எங்களை அழைத்துவந்து வாசல் வராந்தாவில் இருந்த வழுவழுப்பான திண்ணையில் உட்காரச் செய்தார். அவரும் தமது நாற்காலியில் உட்கார்ந்தார்.

''அவர் பிரம்மசாரி; எத்தனையோ பெண்கள் வந்ததை வேண்டாமென்று சொல்லிவிட்டார் என்றல்லவோ கேள்விப்பட்டேன்?'' என்றார் என் கணவர்.

''ஆமாம். அப்படித்தான் இருந்தார். முப்பது வயதான பின் அவரைத் தொந்தரவு படுத்துவதைக்கூட நிறுத்தி விட்டார்கள்; நாற்பது வயதிற்குமேல் இந்தத் தொல்லை ஏற்பட்டது.''

''எந்தத் தொல்லை''? என்று நான் ஆவலாகக் கேட்டேன். கதைப் புத்தகங்கள் வாசித்து வாசித்துக் கற்பனை செய்வதில் எனக்கு அதிகப் பழக்கம் ஏற்பட்டிருக்கிறது. ஷண்முகத்தின் சம்சார வாழ்க்கையை நானே சித்திரிக்க முயன்றேன். 'நாற்பது வருஷகாலம் கடுமையாக விரதம் புரிந்த அவருடைய மனத்தைக் கலக்க ஒரு மேனகை ஏற்பட்டாள். அவள் எப்படி இருந்திருப்பாள்? மிக மிக அழகாக இருந்திருப்பாள். எங்கே அவளைச் சந்தித்திருப்பார்? ஒருகால் காலேஜ் வாத்தியாரம்மாக்களில் ஒருத்தியோ? அவளிடம் இவருக்குத் தாங்கொணுக் காதல் ஏற்பட்டிருக்க வேண்டும். அவள்—இத்தனை அருமையான அறிவாளியை மணக்கும் அதிருஷ்டம் பெற்ற அந்தப் பெண்மணி—தனது பாக்கியத்தை எண்ணி நன்றி செலுத்தினளோ? இராது. பெண்களுக்கு அத்தனை நன்றி சாதாரணமாக இருப்பதில்லை.'—இவ்வாறெல்லாம் எண்ணி, நான் பெருமூச்சுவிட்டேன். உண்மையில் இந்த விருத்தாந்தங்களை எங்களுக்குச் சொல்லி வந்தவ

ருடைய வசீகரத் தோற்றத்தையும், ஷண்முகம் என்று இவர்கள் பேசிக் குறிப்பிடும் ஆளின் குணத்தையும் கலந்து இந்த இரண்டும் பெற்ற ஒரு கற்பனைப் புருஷனைப் பற்றியே நான் பெருமூச்சுவிட்டேன்.

''ஆஷாவின் தொல்லை; அவள் ஒரு வங்காளப் பெண் மணி. உணர்ச்சி நிறைந்தவள்; ஷண்முகத்தை விடமாட்டேன் என்றுவிட்டாள். ஷண்முகத்திற்குப் பிடிவாதம் உண்டு. ஆனால் அவள் இன்னும் அதிகப் பிடிவாதக்காரி. இவரை வென்றுவிட்டாள்.''

''எப்படி?''

''அவருடைய பிரம்மசரிய விரதத்திற்குப் பங்க மில்லாமல் நடந்துகொள்வதாகவும் அவர் சொல்வதை யெல்லாம் கேட்பதாகவும் வாக்களித்தாள்.''

''பாவம்!''

''யாருக்காகப் பாவம் என்று அநுதாபப்படுகிறாய்?'' என்று என் கணவர் என்னைக் கேட்டார். அந்த வீட்டைக் காண்பித்தவரும் என்னைப் பரிகாசப் பார்வையுடன் பார்த்தார்.

''ஏன், அந்தப் பெண் ஆஷாவிற்காகத்தான். இந்த மாதிரி பயனற்ற காதல் கொண்டாளே என்றுதான்.''

''அப்படிச் சொல்லமுடியாது. ஷண்முகம் ஆசிரியர் என்பதை மறந்துவிடாதீர்கள். ஆஷாவைக் கல்யாணம் செய்துகொண்டு இந்த வீட்டிற்கு அழைத்துவந்தார்...''

''வீடா இது?'' என்று என் கணவர் குறுக்கே கேட்டு வைத்தார்.

'இல்லை. வீடு இல்லை. குடிசைதான். இதை ஷண்முகம் வாங்கின சமயம்' இது இன்னும் மிகவும் கேவலமாக இருந்தது. வேலையாள் இல்லாமல் அவர்கள் இரண்டு

பேருமே இதைச் சரி செய்தார்கள். பாதிக்கு மேற்பட்ட மரச்சாமான்கள், ஷண்முகம், தாமே செய்தவை. அவருக்குத் தச்சுவேலையில் அதிகப் பிரியம். வீட்டிற்குச் சுண்ணும்பு அடித்தது, வர்ணம் பூசியது எல்லாம் அந்த அம்மாள். அதிதி அறையில், சுவரில் நீங்கள் பார்த்து, வியந்த சித்திரங்களெல்லாம் ஆஷாவின் வேலை. ஷண்முகம் அதிகமாகப் பேசுவார்: மனைவிக்குச் சதா லெக்சர் செய்து கொண்டே இருப்பார்...''

''பாவம் ஆஷா!'' என்றேன் நான் மறுபடியும். எத்தனை ஆயிரம் பெண்கள் இம்மாதிரி தம் உள்ளம் முழுவதையும் தாம் காதல் கொண்ட புருஷருக்கென்று அர்ப்பணம் செய்துவிட்டு, அடிமைபோல் உழைத்து, அதற்குக் கைம்மாருக அவர்களின் 'லெக்சர்'களைக் கேட்டுக் காலம் கழிக்கிருர்கள்! பெண்களின் நிலைபற்றி என் உள்ளத்தில் பரிதாபம் நிறைந்திருந்தது.

''பாவம் என்ன? ஷண்முகத்தைக் கல்யாணம் செய்து கொள்ள ஆசைப்பட்டாள். செய்துகொண்டு விட்டாள். இன்னும் என்ன வேணும்? உன் கற்பனைகளையெல்லாம் இங்கே வீணுக்காதே!'' என்று என் கணவர் கூறிவிட்டு, 'என்ன விலை இந்த வீடு?'' என்று கேட்டார்.

''விலை பற்றி யோசிக்காதே. ஆனுல், வீட்டிற்கு வருகிறவர்கள் இதன் அருமையை அறிந்து, இதை நன்ருகப் பார்த்துக்கொள்ள வேண்டும். ஆஷாவின் வேலைகளை அவர்கள் போற்றவேண்டும்'' என்று ஷண்முகம் என்னிடம் சொல்லிவிட்டுப் போஞர்.''

''ஓ, அப்படியானுல் நாளடைவில் ஆஷாவின் அருமை அவருக்குத் தெரியவந்ததா?'' என்று நான் கேட்டேன்.

''ஆஷா, சாதாரணப் பெண். அவ்வளவு புத்திசாலியும் அல்ல. அதிகம் படித்தவளும் அல்ல. இயற்கையின்

பெண் என்று சொல்லலாம். அருமையாக அவளிடம், பக்தி ஒன்றுதான் இருந்தது. ஷண்முகம் அவளுக்குப் படிப்புச் சொல்லிக்கொடுக்க ஆரம்பித்தார். வேதம், வேதாந்தம், தர்க்கம் எல்லாம்பற்றிப் பேசுவார். இந்த வீட்டிற்குப் 'புது வீடு' என்று ஆஷாதான் பெயர் வைத்தாள். தன்னை ஒவ்வொரு நாளும் மேன்மை பெறச் செய்து, ஈசுவரனின் வீட்டை அடைய இது வழிகாட்டும் என்பாள் அவள். தனது படிப்பை அவள் மிக ஆவலாகவும் பக்தியாகவும் ஏற்றுக்கொண்டாள்.''

''அவர்கள் இப்போது எங்கே?''

''ஏன் இந்த வீட்டை விட்டுவிட்டுப் போய்விட்டார்கள்?''

''ஆஷா போனபிறகு, ஷண்முகம் இங்கே இருக்கப் பிடிக்காமல் போய்விட்டார்.''

''ஆஷா போய்விட்டாளா?''

''ஆமாம், மரிக்கவில்லை. வடக்கே போய்விட்டாள்; அகதிகளுக்கு வேலை செய்வதற்காக. அவளுக்கு நகையிலும் புடைவையிலும் அலங்காரத்திலும் இருந்த சபலத்தை எல்லாம் ஷண்முகம் மாற்றினார். அது அவருக்கே தீங்காய் முடிந்தது. நாளுக்கு நாள் வைராக்கியம் பெற்று வந்தாள் ஆஷா. ஒரு தினம் ஷண்முகத்திடம் சொல்லாமலேயே இரவில் புறப்பட்டுப் போய்விட்டாள்.''

''ஏன்? இவள், அவர் பேரில் கொண்டிருந்த அன்பு?''

''அகதிகள் கஷ்டப்படுகையில் இது என்ன சபலம் என்றும், இந்த வாழ்க்கை என்ன பயன் என்றும் அவளுக்குத் தோன்றிவிட்டது. இரண்டே வருஷத்திற்குமுன் ஷண்முகத்தை ஆஷா விடமாட்டேன் என்று தொந்தரவு செய்தாள். இந்த இரண்டு வருஷத்தில் அவள், ஷண்

முகத்தைவிட அதிகப் பக்குவமிலே பெற்றுவிட்டாள். அகதிகளுக்கு உதவி செய்ய அவள் போகவேண்டும் என்ற போது, ஷண்முகம் அதன் நியாயத்தை ஏற்றுக்கொண் டாலும், அத்தனை தியாகம் செய்யத் தயாராக இல்லை. ஆஷா, கண்டிப்புடன் புறப்பட்டுப் போய்விட்டாள். இவர் இப்போது அவளின்றி வசிக்க முடியாமல் கஷ்டப் பட்டு விட்டு, அவளைத் தாமும் பின் தொடர்ந்து போய் விட்டார்'' என்றார் அந்த மனிதர்.

''நீங்கள் யார்?''

''ஷண்முகத்தின் தம்பி நான். இந்த வீட்டைச் சரி யானவர்களுக்கு விற்கும்படி அண்ணா என்னிடம் சொன் னார். நீங்கள் இருவரும் வந்து வசிப்பதென்றால் எடுத்துக் கொள்ளலாம். இதன் விலையைக் கல்லூரிக்குக் கொடுக்கச் சொன்னார். ஷண்முகம் இதை மூவாயிரத்துக்கு வாங்கி னார். பிறகு மூன்றிற்குமேல் இதற்குச் செலவு செய்தார்—'

என் கணவர் ஒன்றும் சொல்லவில்லை. தமது ஜேபியில் இருந்த செக் புத்தகத்தை எடுத்துப் பத்தாயிரத்துக்குச் 'செக்' ஒன்று எழுதிக் கொடுத்துவிட்டார்.

நாங்கள் இருவரும் மௌனமாக வீடு வந்தோம். தர்க்கம் செய்யவே இல்லை. அந்தப் 'புது வீட்டில்' நான் குடித்தனம் செய்யப்போவதை எண்ணினபோது எனக்கு மயிர்க்கூச்சு உண்டாயிற்று.

# கோபுர வாசல்

**கி. சந்திரசேகரன்.**

தரளிகை தனக்கு வந்த கடிதத்தை வாசித்துவிட்டு, பிரித்திருந்தபடியே அதைக் கையில் வைத்துக்கொண்டு சிறிது நேரம் யோசனையில் ஆழ்ந்தாள்.

மறுமுறை அவள் கண்கள் எந்த வரிகளைத் தேடினவோ அவை தட்டுப்பட்டன.

"......உங்களுடைய அற்புத நடனத்தை இங்குள்ளவர்கள் மட்டும் கண்டால் போதுமா? உலகம் உய்யுமே, ஒரு தடவை க்ஷேத்திரக்ஞர் பதத்துக்கு நீங்கள் அபூர்வமாய் அபிநயம் செய்து காட்டுவதைக் காண! அமெரிக்காவில் சிவதாண்டவத்தின் அழகிய உருவப் படங்கள் பல இடங்களில் காணப்படுகின்றன. கண்கூடாக நானே பார்த்திருக்கிறேன். ஆனால், 'காலைத் தூக்கி நின்றாடும்' தெய்வத் திருக்கோலத்துக்கு விரிவான வியாக்கியானம் செய்யும் உங்கள் அரிய கலையை மட்டும் அங்குள்ள ரஸிகர்கள் அநுபவித்தார்களேயானால் எப்படி எப்படி எல்லாம் உங்களுக்குப் பாராட்டுதலை வழங்குவார்களோ அறியேன்! உங்கள் திவ்ய அநுபவத்தையும் கலைத்தேர்ச்சியையும் உலகம் போற்ற இயலாதபடி நீங்களே ஏன் ஒரு திரையிட்டு அதனை மறைக்க வேண்டும்? மேலை நாடு

களில்தான் ஆர்வமும் அழகுணர்ச்சியும் இன்று மலிந்து கிடக்கின்றன. உங்கள் கலைக்கு அமெரிக்கா துரிதமாக வசப்படும்; இது நிச்சயம். வசப்பட்டால் பிறகு என்னவெல்லாம் எதிர் பார்க்கலாம் தெரியுமா!......"

இக்கடிதத்தை எழுதித் தனக்கு அனுப்பிய நண்பனும், தன் நாட்டியக் கலைக்கே புத்துயிர் ஊட்டியவனுமான வித்தியாசாகரன், ஆகாய விமானத்தில் தன்னை அழைத்துச் செல்வதைத் தரளிகை மனக் கண்ணில் ஒரு தடவை கண்டாள். இளமையும் கலையின்பமும் கூடிய இடத்தில் காதலையே, மூட உலகம் ஊகிக்கும். ஆனால் அவள்பால் வித்தியாசாகரனுக்கு இருக்கும் நட்பு, எவ்வளவு தூய்மையானது என்பதை அவள் இருதயம் அறியுமல்லவா?

* * *

அவள் தாய், தன் மகளுக்குச் சிறிய வயசிலேயே ஏற்பட்ட அதிருஷ்டத்தை நினைத்து, அடிக்கடி மனத்தினுள் கவலைப்படுவது உண்டு. சாமான்ய வாழ்க்கையை நடத்துவதற்கு ஏற்ற வகையில்தான் அவள் புருஷர் அவளுக்குச் சொற்பச் சௌகரியங்களை வைத்து விட்டு இறந்தார். அவருடைய ஒரே மகள் அபயாம்பாள், இப்பொழுது தரளிகை என்ற புதிய நாமகரணத்துடன் கலையுலகில் சிறகடித்துப் பறக்கும் யுவதி, அவர் இறந்தபோது எட்டு வயசு நிரம்பாதவள். அநாதையாய் விட்டுவிடாமல் அவர்கள் போஷணைக்கு வைத்திருந்த சிறிது தனம், அவர்களைக் காப்பாற்றியது. எல்லாவற்றையும்விட உண்மையில் திக்கற்றவர்களைக் காப்பாற்றுவதற்கு என்றே உருவெடுத்தவரைப்போல் இருந்த அவள் சகோதரர் சங்கர ஐயர் அச்சமயத்தில் தைரியத்தை ஊட்டியிராவிட்டால், தரளிகையின் தாய், மனம் உடைந்தே போயிருப்பாள்.

அடிக்கடி, பட்டணத்தில் நடைபெறும் நடனக் கச்சேரிகளுக்குத் தானும் வருவேன் என்று அபயாம்பாள் பிடிவாதம் செய்வாள்; அதற்குக் காரணம் நாட்டியத்திற் கென்றே உள்ள தனி இயல்பு அபயாம்பாளிடம் இருப் பதே என்று அவள் தாய் எண்ணினுள். அவள் எண்ணம் வலியுறுவதற்குத் தக்கபடி நட்டுவனுர் சோமசுந்தரம்பிள் ளேயும், 'குழந்தை விளேயாட்டாகக் காட்டும் முத்திரை களேயும் அங்க அசைவுகளேயும் பார்க்கையிலேயே நன் ருகப் பரத நாட்டியம் பழக்கி வைக்கலாம் என்று எனக் குத் தோன்றுகிறது. உங்கள் குழந்தை நாட்டியமாடுவ தற்கு என்றே பிறந்திருக்கிருள். நீங்கள் வேண்டுமானுல் பாருங்கள்; இரண்டே வருஷங்களில் அரங்கேற்றம் செய்து வைக்கலாம்' என்ருர்.

நல்ல முகூர்த்தத்தில் அபயம், நட்டுவனுர் சோமுப் பிள்ளேயிடம் நடனக் கலேயைக் கற்கத் தொடங்கினுள். அவர் குறிப்பிட்ட காலத்திற்குள் பிராபல்யமும் அடைந் தாள். 'பேபி'யாய் இருந்தவள் 'குமாரி' ஆகிவிட்டாள். வயசு இப்பொழுது பத்தொன்பது. எல்லாப் பத்திரிகை களிலும் அவள் பெயரும் நாட்டியப் படங்களும் நிறைந் திருந்தன. 'போட்டோ' பலிப்பதற்கான அழகிய சரீர வளமும் அவளுக்குப் பொருந்தி யிருந்ததைக் காண எல்லோருக்கும் திருப்தி—ஏன்—மோகம் என்றே கூறலாம். அவள் தாய்க்கு இருந்த பெருமையோ கரை கடந்து, நின்றது.

இவ்வளவுக்கும் மத்தியில், மாமா சங்கர ஐயர் ஒரு வரே அபயாம்பாளின் அருமைக் கலேவளர்ச்சியைக் கண்டு, பிரமிப்பை அடையவில்லே. அவருக்கு நாட்டியத் தின் பெருமை விளங்காமல் இல்லே. அவருடைய கலே யுணர்ச்சி மேன்மையானதுதான். ஆயினும் உயர்ந்த கலே யைக் கேவலப்படுத்தும், சிறு குழந்தைகளின் நடனங்களே

அவரால் ஆமோதிக்க இயலவில்லை. எவ்வளவுதான் அபயம் கலையிலும், அக்காரணத்தினல் வாழ்க்கையிலும் முன்னேறிய போதிலும் இன்னும் அவளுடைய மனோதர்மத்தில் திருப்தி உண்டாகவில்லை. சிறந்த கலையை உயர்த்த வேண்டுமானல், அதன் சூட்சுமங்களை நன்கு அறிந்திருக்க வேண்டாமா? ஆம், அவருக்குப் பரத நாட்டியத்தின்பால் உண்மையான கௌரவம் இருந்தது; அதனல், கண்டவர்களும் கேட்டவர்களும் அதன் சிறப்பை அறிந்ததாக நினைக்கும் போலித்தன்மையைப் பொறுக்க அவரால் இயலவில்லை.

தரளிகை என்ற பெயரின் பொருத்தம் எப்படி இருப்பினும், அபயாம்பாளை அவர் 'அவயம்' என்றே அருமையாய் அழைப்பார். நடனமாடுகையில் மின்னலைப் போல ஒசிந்து ஒளிர்ந்து விளங்கும் அழகு அபயாம்பாளிடம் பூரணமாய் வெளிப்படுவதாக, அவளுக்குப் புதிய நாமகரணமிட்டவர்கள் நினைத்தபோதிலும், அபயாம்பாள் என்ற பெயரின் அழகும் ஆழ்ந்த கருத்தும் அவர் உள்ளத்தில் நிலைத்திருந்தன. பயம் என்பதை அறவே விலக்கி அருள் புரியும் அம்பிகையின் திருநாமத்துக்கு உவமையுண்டோ உலகில்! என்றே சங்கர ஐயர் தம் மனத்தினுள் எண்ணி, எழுச்சி பெறுவார். உலகம் வெளித்தோற்றத்துக்குத்தான் மதிப்பைத் தருகிறது; உள்ளே காணும் உண்மை அறிவுக்கு விலை இல்லையே என்றும் அவர் மனம் தனிமையில் தவித்தது. தரளிகையானல் என்ன, அபயாம்பாளானல் என்ன, தம் சகோதரியின் ஒரே மகள் அல்லவா குழந்தை? அவளுக்கு உண்மையின் உயர்வில் நோக்கம் விழவேண்டுமென்ற விருப்பம், அவர் என்று அவர்கள் குடும்பத்தில் தமது முழுக் கவனத்தையும் செலுத்தத் தொடங்கினரோ அன்றிலிருந்தே ஏற்பட்டிருந்தது. அக்காரணத்தினல்தானே என்னவோ, தம்

சகோதரியிடம், அபயாம்பாளின் வாழ்க்கை, நாட்டியக்காரி வாழ்க்கை யாகிவிடக்கூடாதென்று அவர் அடிக்கடி விவாதம் செய்வார்.

* * *

தரளிகை இன்று கடிதத்தைப் புரட்டிப் புரட்டி வாசித்ததை அவள் தாய் கவனித்துவிட்டாள்.

"ஏது கடிதாசு?" என்று கேட்டாள் தாய்.

தரளிகையின் அதர நுனியில் ஒரு சிறு வளைவு தென்பட்டது. ஆனால் நகையாக மாறவில்லை அது. 'தெரியவில்லையா உனக்கு இன்னும்?' என்பதைப்போல் அவளுடைய கண்கள் பார்த்த பார்வை, தாயின் அறிவின்மையை ஏளனம் செய்தது.

"சாகரனா?" என்றாள் தாய்.

'ஆம்' என்பதைப்போல் தரளிகை தலையை அசைத்துவிட்டுப் பின்னும் ஒரு தடவை அதில் கண்ட உணர்ச்சிப் பெருக்கில் தானும் நீந்தத் தொடங்கினாள். அவள் ஒரு பெரும் கற்பனை மயக்கத்தில் அமிழ்ந்திருந்தாள். மேல் நாட்டில், அதுவும் அமெரிக்காவில், ஒருவருக்குப் புகழ் கிட்டுமானால் அதன் மதிப்பு என்ன சாமானியமாகவா இருக்கும்? அதிலும் வித்தியாசாகரனைப்போன்ற - சிறந்த செல்வாக்குடன் கூடிய ஒருவன் - தன்னை அழைத்துக் கொண்டு சென்றால் எதைத்தான் அங்கு அடைய முடியாது? அவள் கண்முன்னே பிரபல பத்திரிகை உலகத்தின் நிருபர்களும் படம் பிடிப்பவர்களும் ஒரு பெரிய சமுத்திரம் திரண்டு வருவதைப்போன்ற காட்சி அளித்தார்கள். எங்கும் தன் உருவம் பெரிதும் சிறிதுமாய் அழகழகான நடனக் கோலங்களில் எடுக்கப் பெற்று, கவர்ச்சியுடன், பார்ப்பவர்களின் கண்களைப் பறிப்பதாக எண்ணினாள்.

அவ்வளவுதானு? இன்னும் எத்தனையோ? எதிர்பார்க்க இயலாத வகைகளில், அவளது கலைக்குப் பிரசாரம் வலுத்து, அவள் கையெழுத்தை நேரே பெறுவதற்காக 'டாலர்கள்' மலையாய்க் குவியும் அபூர்வச் செய்தியைத் தன்னைப் பெற்ற இந்திய நாடு அறிந்து என்ன பெருமையடையுமோ என்பதையும் ஒரு தடவை நினைத்துப் பார்த்தாள்.

"என்ன, யோசனை பலமாயிருக்கே!" என்ருள் தாய், அவளுடைய மனச்சஞ்சாரத்துக்கு ஒரு தடையைப் போடுவதுபோல்.

"அம்மா, யோசனை செய்வது இனி முடியாது. வித்தியாசாகரன் சொல்வதை நீ கேட்டாயானுல், நீதான் முதலில் ஆகாய விமானம் ஏறத் தயாராவாய். அவர் புறப்படுவது நிச்சயம். சொந்த வர்த்தக விஷயமாய் வரும் ஜனவரி 26-ஆம் தேதி 'வாஷிங்டனி'ல் அவர் இருக்க வேண்டுமாம். அவருடன் நான் இப்போது செல்லாவிடில் அங்கெல்லாம் பிறகு எப்பொழுது போக முடியும்?" என்ருள் தரளிகை, தாயின் அங்கீகாரத்தை முழுவதும் எதிர்பார்த்தவளாய்.

"என்னவோ, அம்மா?" உன் மாமாதான் ஒப்புக்கொள்ளவேணும். எனக்குச் சாகரனுடைய நல்ல எண்ணத்தில் சந்தேகமே கிடையாது. அவன் கலைக்காக எதை வேண்டுமானுலும் செய்வான். அதுவும் உன்னுடைய நாட்டியத்தைப்பற்றி அவன் புகழ்ந்து பேசாத நாளே இல்லை" என்று கதவுப்பக்கம் திரும்பி, யாரையோ எதிர்பார்ப்பவளாகச் சொன்னுள். தரளிகைக்கா தாயின் கவலையை அறிய முடியாது? மாமாவைச் சரிப்படுத்தத் தனக்குச் சாமர்த்தியம் இருப்பதை அவள் தன் தாயிடம் விஸ்தாரமாகச் சொல்லவில்லை, ஒரே வார்த்தையில் தாயின் மனச் சஞ்சலத்தை ஒழித்தாள்.

"மாமாவையா சொல்கிறாய்? மாமாவுக்கு இதிலெல்லாம் அபிப்பிராயம் என்று தனியே ஒன்று உண்டென்று நினைக்காதே. எதையோ மாமா சொல்லத்தான் சொல்லுவார். அதற்காகக் கவலைப்பட்டால் அப்புறம் போக வேண்டியதுதான், மூட்டையைக் கட்டிக்கொண்டு, மயிலாப்பூர்ப் பழைய வீட்டுக்கே!" என்று குரலில் அலட்சியம் தொனிக்கக் கூறினாள்.

மயிலாப்பூரில் இருந்த பழைய வீட்டை விட்டுவிட்டு, மாம்பலத்தில் புதிய மாளிகையொன்றைத் தரளிகையின் தாய் வாங்கியது, சங்கர ஐயருக்கு ஒருகாலும் சம்மதமாக இருக்கவில்லை. வேலையாட்களையும் காரையும் புதிய சிநேகங்களையும் அவருடைய கர்நாடக சுபாவம் ஒப்பவில்லை என்றுதான் தரளிகையும் அவள் தாயும் கருதினார்கள். வாஸ்தவத்தில் சங்கர ஐயர் சுபாவமே தனிவிதம். அவர் தம் மனைவி மரித்த பின் மறுவிவாகம் செய்துகொள்ளாதவர். குழந்தைகள் தமக்கு இல்லையே என்று ஒருபோதும் வருந்தாதவர். சரியான காலத்தில் சந்தியாவந்தனம், பூஜை, புரஸ்காரம் முதலியவைகளைச் செய்வதில் அவருக்கு நம்பிக்கை ஒருகாலும் குறையவில்லை. கழுத்தில் நல்ல கௌரீசங்கரம் துலங்க, பெரிய ருத்திராட்ச மாலையைத் தரித்து, திருநீறு இட்டுக்கொண்டு தினசரி நியமங்களில் ஈடுபடுவார். 'அவயம்' என்று அவர் தன்னை அழைப்பதைக்கூடத் தரளிகை சில சில சமயங்களில் விரும்புவதில்லை. முக்கியமாகப் புதிய மனிதர்கள் அவளைப் 'பேட்டி' காண வருகையில் மாமா தன்னைப் பழைய பெயரைச் சொல்லிக் கூப்பிடுவதை நிச்சயம் அவள் வெறுத்தாள். ஆனால், தன் தகப்பனார் இறந்தபிறகு தங்கள் குடும்பத்தை ரட்சிக்க எங்கிருந்தோ ஓடிவந்த மாமாவை அவள் நன்றியுடன் கருதாமல் இருந்தால் அது நியாயமாகாது என்ற எண்ணத்தை மட்டும் அவள் மறந்தவளே

அல்ல. மாமாவின் கலையபிமானத்தில் வேண்டுமானால் அவளுக்கு நல்ல அபிப்பிராயம் இல்லாதிருக்கலாம் மற்றப்படி சங்கர ஐயருடைய சுபாவத்தில் காணப்பட்ட பொறுமையையும் ஒழுக்கத்தையும் அவள் அறிந்தவள் தான்.

ஒருவரை ஒருவர் அறிவது மட்டும் போதுமா? சமய சந்தர்ப்பங்களில் ஞாபகக் குறைவின்றி அவரவர் இருதயத்தில் எழும் அநாவசிய வேகங்களைக் குறைக்கப் பாடு படுவதன்றோ உண்மை வெற்றி? தரளிகை சிறுமியல்லவா? அவள் மனம் எவ்வளவோ நுட்பமான கலை அம்சங்களைக் கவனித்து, ஆராயும் சக்தி பெற்றதாயினும், சுபாவத்தில் வேரூன்றிய ஆத்திரத்தை மட்டும் விலக்க வகையற்று இருந்தது. பிற்பாடு, நிதானம் நிலவும் காலத்தில் அவள் மனம், தான் செய்ததைக் குறித்துச் சில வேளைகளில் வருத்தமடைவதும் உண்டென்றே கூறவேண்டும்.

* * *

"உங்கம்மா என்ன என்னவோ சொல்லுகிறாளே; புரியவில்லையே எனக்கு!" என்று தரளிகையினிடம் தனிமையில் ஆரம்பித்தார் சங்கர ஐயர்.

அவள் இதை எதிர்பார்த்துத்தான் இருந்தாள்; ஆனாலும் இதைக் கேட்டவுடன், ஒரு தடவை அவள் இருதயம் படபடத்தது. தன் முன்னேற்றத்திற்கு முட்டுக் கட்டையாகவேதான் தன் மாமா வரவரத் தயாராகிக் கொண்டு வருகிறார் என்ற எண்ணம் அவளிடம் பலம் பெற்றது.

"இதில் புரியாதது என்ன மாமா?" என்று அவள் சற்றுக் கோபம் கொண்ட குரலில் வினவினாள்.

சங்கர ஐயருக்கு அவளுடைய மனநிலை ஒருவாறு புலனாகியது. ஆயினும் வாழ்க்கை அநுபவம் படைத்தவ

ரானபடியால் சட்டெனத் தமக்குத் தோன்றியதை வார்த்தைகளில் கொட்டிவிடவில்லை. அதற்குப் பதிலாக ஒரு புன்னகையை வரவழைத்துக்கொண்டார். பொது வாகப் பேசலானார்.

''புரியாததா? சொல்லுகிறேன் கேள். அமெரிக்கா வில் உன் பரத நாட்டியக் கலையைக் காண்பிக்க நீ செல் வதில் புரியாத அம்சம் ஒன்றும் இல்லைதான். ஆனால் இந்த வித்தியாசாகரனுடன்தான் செல்லவேண்டுமோ? அதைச் சற்று எனக்கு விளக்கு, பார்க்கலாம்'' என்று தமது முகத்தை நன்ருக அவள் பக்கம் திருப்பிக்கொண்டு, அவளை ஊன்றிப் பார்த்தவராய்ச் சொன்னார்.

''தெரியும், மாமா; உனக்கு எதனால் தப்பு அபிப்பிரா யம் ஏற்பட்டது என்பது எனக்குத் தெரியும். வித்தியா சாகரன் என்ன சிறு பையனா? அவனுக்கு மனைவி இருக் கிருள் என்பது ஞாபகம் இருக்கட்டும். குழந்தைகள் வேறு, இருவர் இருக்கிருர்கள். போதாததற்கு அவனுக்கு எத்தனையோ ஜோலிகள். அவன் அமெரிக்காவுக்குச் செல்வதும் திரும்புவதும் வருஷத்துக்கு இரு முறையாவது இருக்கலாம். என்னைத் தன்னுடன் அழைத்துச் செல்வ தில் ஆர்வம் அவனிடம் உண்டாயிருப்பது என் பாக்கியம் அல்லவா? அவனுடன் போய் வந்தால் எத்தனையோ சௌகரியங்கள் ஏற்படும். அவனுக்கு அவ்விடத்தில் நிறையச் செல்வாக்கு உண்டு. உனக்குத் தெரியுமே! நான் எதற்குச் சொல்லவேண்டும்......இதோ பார் மாமா; என்னைப்பற்றி நீ ஏன் இப்படி நினைக்கிருய்? என்றைக் காவது நான் கண்ட புருஷனுடன் வேண்டிய அளவுக்கு மேல் பேசியதையோ அல்லது ஞாபக மறதியாக இருந் ததையோ நீ கண்டிருக்கிருயா?'' அவள் வார்த்தைகளில் சொல்ல முடியாத ஏக்கமும் கோபமும் கலந்திருந்தன.

சங்கர ஐயர் கனைத்துக்கொண்டார். அவள் பேசிக் கொண்டிருக்கையில் குறுக்கிடவில்லை. அவள் பேசி முடித்ததுங்கூட உடனே தாமும் தம் பிரசங்கத்தை ஆரம் பிக்கவில்லை. ஏதோ யோசனை செய்பவர்போல் சற்றுச் சும்மா இருந்தார். பிறகு சாந்தமாய்த் தமது சகோதரி யின் மகளை ஒரு தடவை பார்த்தார். தரளிகைக்கா அவ ருடைய திடசித்தத்தில் சந்தேகம்? இல்லை. அதுவேகூட அவளுக்கு மிகுந்த கலவரத்தைத் தற்சமயம் உண்டாக் கியது.

"என்ன மாமா, ஒன்றுமே நீ பேசவில்லை?" என்று அவள்தான் அவரைத் தூண்டினுள். இனி மௌனமாக இருப்பது, அவசியம் இல்லாத புகாருக்குத் தம்மை ஆளாகிவைக்கும் என்று சங்கர ஐயர் நினைத்தார் போலும். அவர் மெதுவாகச் சொல்ல ஆரம்பித்தார்.

"பேசாமல் இருப்பதற்கா, உன்னிடம் தனியாக வந் தேன்? ஆனல் என்ன பேசுவது இந்தச் சந்தர்ப்பத்தில் என்றுதான் திகைக்கிறேன். உனக்கு வயசு இன்னும் போதவில்லை. உலகம் எவ்விதமானது என்பதை உணர வேண்டிய நிலைமை ஏற்பட்டுவிட்டது. அப்படி இருக்கை யில் நான் சொல்வது சரியாகத் தோன்றுமென்று எண்ண வும் முடியவில்லை. ஆனலும் சொல்லாமல் இருந்தால், பிற்பாடு மாமாவின் உள்ளம் இதை ஒப்புக்கொண்டதா என்ற கேள்வி, உன்னிடம் உதித்தால் என்ன செய்வது? ஆகையால் சொல்லுகிறேன்.

"வித்தியாசாகரனுடைய நிஜமான கருத்து என்ன வென்று பரிசோதிக்க என்னல் முடியாது; பரிசோதிக்க வேண்டிய அவசியமும் இல்லை. நீ சொல்லும் காரணங்க ளெல்லாம் உண்மைதான்; ஆனல் மனிதன் மனிதன் தானே அம்மா? உனக்குத்தான், போதுமான வயசு ஆகி

விட்டதா, விவேகம் ஏற்பட? இல்லையே! அது போகட்டும். என்னைப் போன்றவர்களுக்கு இப்படித்தான் எதிலும் சந்தேகம் ஏற்படலாம். ஆனால் பரதநாட்டியக் கலையை வளர்க்கவும் பரிமளிக்கச் செய்யவும் அமெரிக்காவுக்குச் செல்லவேண்டுமா என்பதுதான் எனக்குத் தீராத பிரச்னை. அங்குள்ள பண்பாட்டிற்கும், நம் தேசத்துச் சம்ஸ்காரத்திற்கும் எவ்விதத் தொடர்பும் இல்லையே! கேவலம் விநோதமாக நம் நாட்டியம் இருப்பதாக அவர்கள் கருதலாம்; அல்லது காலையும் கையையும் தூக்குவதைப் பார்த்து, அவர்கள் இந்தியக் கலையிலும் புரியக்கூடிய அம்சம் உண்டு என மதிக்கலாம். இங்குள்ள கலைச் சிறப்பு முழுவதையும் அறிய வேண்டுமானால் அங்குள்ள ரஸிகர்களுக்கு நம்முடைய சம்பிரதாயமும் பண்பாடும் அவசியம் தெரிந்திருக்க வேண்டும் என்பதை அறிவாயா?

இங்குள்ள பரத நாட்டிய அபிமானிகளையே பார்; இவர்களில் எவ்வளவு பேர்களுக்குப் பரத நாட்டியத்தின் கலைநுணுக்களில் தோயும் நிஜமான ஆர்வம் இருக்கிறது? அப்படி இருக்குமானால் காலைத் தூக்கி ஆடும் தெய்வத்தை ரஸிகர்கள் உணர்வதற்கு, ஒரு காலை அளவுக்கு மேல் உயரத் தூக்கவேண்டுமா? யோசித்துப் பார். பரமசிவனும் பார்வதியும் போட்டியிட்டு நர்த்தனம் செய்ததாக அல்லவா புராணக் கதை சொல்கிறது? அச்சமயம் சிவபிரான் தமது இடது பாதத்தைத் தம் இடுப்புக்குமேல் தூக்கித் தாண்டவ நிருத்தியத்தைச் செய்யவும், பெண்ணானபடியால் தேவி, தலை குனிந்து தன் தோல்வியைப் புலப்படுத்தியதாகவும் அல்லவா கதை? கதையின் கருத்தை மேன்மைப்படுத்த அல்லவோ பரத நாட்டியத்தின் ஒரு கிளையான 'லாஸ்யம்' ஏற்பட்டிருக்கிறது. ஓர் அளவு வரையில்தான் பெண்கள் காலைத் தூக்கவேண்டும். சரி

யான மரபுப்படி வந்த முறையில் கற்றவள் எவளும் நடராஜ மூர்த்தங்களில் காணும் வண்ணம் காலைத் தூக்கி அபிநயம் பிடிக்கமாட்டாள். முதலில் இவ்விஷயத்தை அமெரிக்காவுக்குச் செல்லுமுன் நீ நன்ருய்ப் பரிசீலனை செய்து பார்க்கவேண்டும். நீ உன் காலை நன்ருய்த் தூக்கு வதில்தான் சொல்லொணு அழகு இருப்பதாக, உன் நாட்டியத்தை மெச்சும் வித்தியாசாகரனுக்கும் எண்ணம். இதை விவாதிக்க நேரம் இப்பொழுது எனக்கு இல்லை. நீ பரத நாட்டியத்தை நன்ருகக் கற்று, இங்குள்ள உண்மை ரஸிகர்களிடம் பாராட்டைப் பெறுவதற்குச் சரியானபடி வழி செய்யவில்லை; அதற்குள் அமெரிக்காவிலுள்ள பிர முகர்களின் ஆசி பெறப்போகிருய். நல்லது. நான் சொல் வதில் விபரீதமான கருத்துத் தோன்றலாம். ஏனெனில் கலைப் பயிற்சி மட்டும் போதாது; சுவாநுபவம் ஒவ்வொரு கலைஞனுக்கும் அவசியம்; சுவாநுபவம் உண்டான பிறகு இதை நீயாகவே ஒரு காலத்தில் உணர்வாய். இந்தப் பரத நாட்டியக் கலை, தெய்வத்தினிடம் நேராக வரம் பெற்று அமைவதல்லவா? நடராஜப் பெருமான் ஆட்டி வைக்கும் உலகம் முழுவதும் அவர் எழுப்பும் அற்புத லயத்தில் கலந்து கிடக்கிறது. அவர் செய்யும் தாண்ட வத்தை ஒரு தரம் அகக்கண்ணுல் கண்டால் எல்லாம் விளங்கும். பிறகு என்னைப் போன்றவர்களின் பேச்சுக்கு அவசியமே இல்லை......ஆனல்......சரி, அதிகம் பேசி விட்டேன்.

"சுகமாய்ப் போய் வா அம்மா! அமெரிக்காவும் ஐரோப்பாவும் பரத நாட்டியத்தை அறிவதானல் இந்தி யர்களின் வேதாந்த விசாரத்தையும் வழி வழியாக வந் துள்ள தத்துவ வேட்கையையும் இன்னுங்கூடச் சுலப மாக அறியலாமே!" சங்கர ஐயர் தம் பேச்சை முடித்தார். அவர் பிரசங்கம் செய்த மாதிரி முடிக்கவில்லை பேச்சை.

அங்கங்கே நிறுத்தி, நிதானம் இழக்காமல்தான் அவர் பேசினார்.

சங்கர ஐயர் பேசியதைத் தரளிகை ஆராய்ந்தாளா இல்லையா தெரியவில்லை அவள் சொன்னது இதுதான் : "இருக்கட்டும் மாமா; பார்த்துவிடுகிறேனே எல்லாவற்றையும். அமெரிக்காவுக்கு இம்மாதம் வித்தியாசாகரனுடன் நான் செல்வதை நீ மறுக்கவில்லையே! இதுவே நான் வேண்டியது. மற்றவைகளுக்கு என்னிடம் உள்ள கலைதான் விடை தரவேண்டும்."

இதைச் சொல்லி ஏதோ தீர்மானம் செய்துகொண்டவளைப்போல் தரளிகை எழுந்து சென்றாள். சங்கர ஐயர், "ஸ்ரீராமா, என் அப்பனே!" என்று வாய்விட்டு ஒரு தடவை சொல்லியவராய், தம்முடைய அலுவல்களைக் கவனிக்க, அவ்விடம் விட்டு நகர்ந்தார்.

## 2

அன்று பௌர்ணமியானதால் இரவின் சோபை அற்புதமாக இருந்தது. மேகங்களே இல்லாத வானத்தை நிலவின் ஒளி கவர்ந்திருந்தது. சென்னையின் செல்வக் குழந்தையான மாம்பலத்தின் சிறு கரங்களும் கால்களும் அந்நிலவின் எழிலில் பன்மடங்கு பிரகாசித்தன. சிறிய சிறிய புதிய பங்களாக்களும், வட்டமும் நேருமான ரோட்டுகளும் மாம்பலத்தின் நவநாகரிக வளர்ச்சியைக் குறிக்கும் சின்னங் களல்லவா? பங்களாக்களில் இரண்டொன்று மிகப்பெரியவைகளாகவும் இருந்தன. அம்மாதிரியான ஒன்றில் 'தரளிகாதேவி' என்ற விலாசம் 'கேட்டு'க்குப் பக்கத்தில், சலவைக் கல்லில், தங்க எழுத்துக்களில் பொறிக்கப்பெற்றிருந்தது.

அம்மாளிகையின், மேல்மாடத்தில், திறந்த இடத்தில், தரளிகை, இன்னும் ஒரு வாரத்தில் வித்தியாசாகரனுடன், தான் ஆகாய விமானத்தில் பறந்து செல்வதைப் பற்றித் தனிமையில் யோசிக்கையில், வேதனையும் சிறிது அடைந்திருந்தாள்; சங்கர ஐயருடைய எச்சரிப்பு அதற்கு முக்கிய காரணம் என்று சொல்லத் தேவையில்லை. ஆனால் அதிகமாய்த் தம் அபிப்பிராயத்தை அவர் வற்புறுத்திச் சொல்லாதபடியால் தரளிகையின் இருதயத்தில் மாமாவின்பால் உள்ள கௌரவம் அதிகமாகியதில் ஆச்சரியம் இல்லை.

இன்று வித்தியாசாகரன் அவளிடம் வந்து பேசிய பிற்பாடு ஏனோ அவ்வளவாக அவனுடைய புகழுரைகளைச் சுயநலமற்றவைகளாகக் கருத அவளால் இயலவில்லை?

"நாம் இருவரும் தனித்துச் சில நாட்கள் இருக்கப் போவதை நினைத்து நினைத்து, நான் பரவசம் அடைகிறேன்" என்று அவன் கூறியதே அவளைத் திடுக்கிடச் செய்தது. இருப்பினும் இயல்பாகத் தனக்குள்ள தைரியத்தை இழக்காமல் அவள், "நாம் எதிர்பார்க்கும் அலுவல்களில் வெவ்வேறு பாதைகளில் செல்ல நேரிடலாம். என்னுடைய நடனத்துக்காகச் சதா உங்களால் காத்திருக்க முடியாது. உங்களுடையதோ வர்த்தக சம்பந்தமான காரியம். அதை முக்கியமாகக் கவனிக்கவேண்டும் அல்லவா?" என்றாள். ஆயினும் அவள் மனம் சாந்தியற்றுவிட்டது.

சமயம் எவ்விதம் இருப்பினும் மாமா சங்கர ஐயர் தம் திடநம்பிக்கைக்கு உரிய விவகாரங்களில் என்றைக்குமே தடங்கல் ஏற்படாமல் பார்த்துக்கொள்வார். பொழுது விடிந்தால் ஆருத்திரா தரிசனம். மயிலையில்

ஸ்ரீ கபாலீசுவரருடைய திவ்ய தரிசனத்தை வழக்கம்போல் விடியும் நேரத்திலேயே காண அவர் தீர்மானித்திருந்தார். காலையில் மயிலாப்பூருக்குத் துரிதமாகச் செல்லக் கார் தேவை என்பதை அவர் உணர்ந்தவராய், மெத்தையில் தனித்து உட்கார்ந்திருந்த தரளிகையினிடம் சென்றூர்.

மாமாவின் வரவைத் தரளிகை எதிர்பார்க்காததால் முதலில் சிறிது சந்தேகங்கொண்டாள். "என்ன மாமா? கீழிருந்தே என்னைக் கூப்பிடக்கூடாதா? நீ என் படி ஏறி வரவேண்டும்?" என்று அலுத்துக்கொண்டவளாய்ச் சொன்னுள்.

"பாதகம் இல்லை. ஏறி வந்ததால் ஒன்றும் குடி கெட்டுவிடவில்லை. ஒரு சமாசாரம் சொல்லி வைக்க வில்லை டிரைவரிடம். உனக்குப் புது டிரைவர் வீடு தெரியுமோ?" என்றூர்.

"தெரியாதே; அவசரமாய்ப் போக வேண்டுமா?" என்று தரளிகை கேட்டாள்.

"அவசரம் இப்பொழுது ஒன்றும் இல்லை. காலையில் ஐந்து மணிக்குள் டிரைவர் வரவேண்டும். நாளைக்குத் திருவாதிரை ஆயிற்றே! நடராஜமூர்த்தியை மயிலாப்பூரில் சந்நிதித் தெருவில் நின்று, கோபுர வாசலில் வரும்போதே தரிசிக்கவேண்டும். வண்டி வேண்டாமா, அவ்வளவு சீக்கிரம் இங்கிருந்து போவதற்கு? அதனுலேதான் கேட்டேன், சரி, போகிறது; முதல் பஸ் 4-30 மணிக்கு உண்டாம். அதில் போனுல் போகிறது" என்றூர், தம்மையே சமாதானப் படுத்திக்கொண்டு.

"பஸ் எதற்கு, மாமா...ஆனுல் அவனை எங்கே இரவில் கண்டு பிடிக்கிறது?...இதற்குத்தான் யோசித்தேன், அவனை வேலையில் வைத்துக்கொள்ள. தூரத்தில் இருப்பவனை வைத்துக்கொண்டால் இம்மாதிரி அவசரத்துக்கு

ஆள் அகப்படவே மாட்டேள். ஆனால் அதனால் ஒன்றும் கவலை வேண்டாம். நான் ஓட்டுகிறேன் வண்டியை. உனக்கு ஏன் கவலை?'' என்றாள் வேகத்துடன்.

சங்கர ஐயர் யோசித்தார்; ''நீ எதற்கு அவ்வளவு சீக்கிரம் எழுந்திருக்கவேணும் அம்மா? இன்னும் ஒரு வாரங்கூட இல்லையே உன் பிரயாணத்துக்கு? வேண்டாம், நான் எதையாவது ஏற்பாடு செய்துகொள்ளுகிறேன். வருகிறேன்'' என்று அவ்விடம் விட்டு நகர எத்தனம் செய்தார்.

தரளிகையா சந்தர்ப்பத்தை விட்டுவிடுவாள்? ''என்ன மாமா, நான் என்ன தூங்குமூஞ்சியா? நானுந் தான் சுவாமி தரிசனம் செய்கிறேனே! ஒரு நாள் காலையில் சீக்கிரம் ஸ்நானம் செய்தால் போயிற்று. இதற்குக் கவலைப் படவேண்டாம். மயிலாப்பூரில் எவ்வளவோ காலம் இருந்தும் ஆருத்திரா தரிசனம் செய்யவில்லையே என்றே என் மனமும் குறைப்படுகிறது. இந்தக் குறையைப் போக்கிக்கொள்ளுகிறேனே, அமெரிக்காப் பிரயாணத் திற்குள்'' என்று சற்று விளையாட்டும் தீர்மானமும் கலந்த குரலில் சொன்னாள்.

சங்கர ஐயர் பார்த்தார். தாம் அவளைத் தடுப்பதை விட, அவளாகவே காலையில் எழுந்திராவிடில் அவள்மேல் குற்றம் தானாகவே ஏற்படுமல்லவா? அதைப்பற்றி அவள் தானே கவலைப்படவேண்டும் என்று நினைத்தவராய்ச் சிரித்துவிட்டு, ''சரி, படுத்துக்கொள்ளப் போகிறேன். நீயும் சீக்கிரம் எழுந்திருக்க வேண்டுமானால் படுக்கப் போவதுதான் உசிதம்'' என்று சொன்னார். மெதுவாகக் கீழே இறங்கி, மாமா போவதைத் தரளிகை கவனித்தாள். ஏதோ ஒரு பாரத்தைத் தற்சமயம் மனத்தைவிட்டு நகர்த்தி வைத்தவளைப்போல் ஒரு பெருமூச்சு விட்டாள்.

கணப்பொழுதில் அவளும் அவ்விடம் விட்டுக் கீழே இறங்கிச் சென்றாள்.

காலையில் மணி 4-30 இருக்கலாம். சங்கர ஐயர் இறைவன் திருநாமங்களை வாயினால் சொல்லியவாறே தமது ஸ்நான நியமங்களை முடித்துக்கொண் டிருந்தார். அவருக்குத் தான் கொடுத்த வார்த்தை தவறலாகாதென்ற பிடிவாதத்தால் தரளிகையும் வழக்கத்துக்கு விரோத மாகப் படுக்கையை விட்டுச் சீக்கிரமே எழுந்து, ஸ்நானம் செய்து, தனது கூந்தலையும் ஆற்றிக்கொண்டு, நுனியில் ஒரு முடிச்சுப் போட்டுத் தயாராகக் காரைப் 'போர்ட்டி கோ'வில் கொண்டுவந்து நிறுத்தியிருந்தாள்.

அவள் தாய்க்கு, தரளிகை மாமாவுடன் காரில் செல்வது தெரியாததால், மனத்தாங்கலுடன், "ஏண்டி யம்மா, நீயும் போகப்போறேன்னு என்கிட்டே சொல்லப் படாதோ? நான் மட்டும சாமி தரிசனம் செய்யக் கொடுத்து வைக்கலையா? நீ செய்யறது நன்னாயிருக்கு!" என்று புகார் செய்தாள்.

"என்ன அம்மா? மாமா என்றைக்கோ என்னை வண்டி கேட்டார். அதுக்கு நான் ஏற்பாடு செய்யவேண் டாமா, சொல்லு" என்று சாமர்த்தியமாகப் பதில் சொல்லிச் சிரித்தாள் தரளிகை.

அதனுடன் பேச்சு முடிந்தது. சங்கர ஐயர் சிவப் பழமாகக் காட்சி அளித்தபடி வண்டியின் பின்னே ஏறி உட்கார்ந்தார். அவர் கழுத்தை ருத்திராக்ஷ மாலை அலங் கரித்தது. திருநீறு இட்டுக்கொண்டு, சிவநாம ஸ்ரணை செய்யும் அவருடன் செல்வதில் தரளிகைக்குத் கொஞ்சம் சங்கோசமாகத்தான் இருந்தது. தனக்கும் மாமாவுக்கும் அபிப்பிராயங்களில் எவ்வளவு வேற்றுமை என்பதை அவள் நினைக்காமல் இல்லை, அச்சமயத்திலும்.

மணி இன்னும் ஐந்து அடிக்கவில்லை. மார்கழி மாதத்தின் பனித்திரை லேசாக வானத்தையும் பூமியையும் ஒரு மெல்லிய துகிலைப்போல் மூடியிருந்தது. பூர்ண சந்திரன் மேற்கே சாய்ந்துகொண்டிருப்பினும் நிலவைப் பொழிந்து, பனிப்படலத்தையும் தெளிவாக்கிக்கொண்டிருந்தான். மயிலாப்பூர்ச் சந்நிதித்தெருவின் கீழ்ப்பக்கம் தரளிகையின் கார் வந்து நின்றது. கோபுரம் அந்த நிலவில் நன்றாகத் தெரிந்தபோதிலும், பின்னேயுள்ள மதியின் பிரகாசத்தால் முன்னே இருள் மூடி, அதுவும் ஒரு விதத்தில் அக்காட்சிக்கு அழகு கொடுப்பதாக அமைந்திருந்தது. கோபுரம் உயரமாகக் கறுத்து நின்றிருக்கையில், அதன் பின், சற்று வலது பக்கமாக முழுமதியும் எட்டிப் பார்த்திருந்த காட்சி, மனத்தில் கிளர்ச்சியை உண்டாக்கியது. சங்கர ஐயர் வண்டியை விட்டு இறங்கி, தமது சென்னியின்மேல் கரம் குவித்துக் கண் இமைகளை மூடிக் கோபுரத்தை முதலில் வழிபட்டார்.

தரளிகையின் மனமோ ஏதோ புதிய உணர்ச்சிகளில் சிக்குண்டு தத்தளித்தது. காலை வேளையின் சுகமான சிலிர்ப்பும், ஸ்நானம் செய்ததால் உடலிலும் உள்ளத்திலும் தூய்மை ஏற்பட்ட உணர்ச்சியும் அவளை என்றும் உணராத ஒருவிதப் புதிய அநுபவத்தில் திளைக்கவைத்தன. அதனுடன் கோபுரம் இருட்டிக்கொண்டு உயர்ந்து, கம்பீரமாக நிற்பதும், அதன் ஓரங்களின் வெள்ளிக் கோடிட்டுக்கொண்டு வானத்தில் திங்கள் துலங்குவதும் கண்டு, கண்களை அகல விரித்துப் பார்த்தாள். இரண்டொரு கறுத்த மேகங்கள் நீண்டு, கோபுரத்தின் பின் ஆகாயத்தில் காணப்பட்டதும், அந்த அற்புத காட்சியை இன்னுங் கூடக் கற்பனைக் கண்ணில், விவரிக்கவொண்ணாத சித்திரமாக்கியது. கோபுரமே பெரிய ஜடாபாரமாகவும், மேகங்களின் நீண்ட வரிசை, அதிலிருந்து கிளம்பிய மயிர்க்

கால்கள் போலவும் அமைய, சந்திரன் சாய்ந்து ஒரு பக்கத்திலும் ஆருத்திரை நட்சத்திரங்களின் கூட்டம் ஒரு பக்கமும் தெரிந்த வைபவம் கற்பனைக் கண்ணுள்ளவர்களுக்குச் சிவபிரானே உருவெடுத்துச் சடையுடனும் மதியுடனும் நின்றதுபோல் தோன்றியிருக்கலாம். யாருக்குத் தோன்றியதோ இல்லையோ, தரளிகையின் அந்தரங்கத்தில் ஒரு புயல் கிளம்பி, அவளை மெய்ம்மறக்கச் செய்துகொண்டிருந்தது. அவள் தேகம் புல்லரித்தது. ஏதனால் கண்களில் நீர் மல்கியது என்பது அவளுக்கே புரியவில்லை. இருட்டுச் சூழ்ந்திருந்தபடியால் தன் கண்களில் நிரம்பிய நீரை அவள் உடனே அவசரப்பட்டுத் துடைத்துக்கொள்ளவில்லை.

அச்சமயம் கோபுரவாசலிலிருந்து தாரை தம்பட்டங்களும் மேளதாளங்களும் தீவட்டிகளும் சூழக் கபாலீசுவரர் நடனக் கோலத்தில் வெளியே எழுந்தருளி வந்துகொண்டிருந்தார். எதிரே நின்ற சிறு கூட்டம் கன்னங்களில் கரங்களால் போட்டுக்கொண்டும், சிரத்தின்மேல் அஞ்சலி குவித்துக்கொண்டும் கோபுர வாசலையே பார்வையிட்டுக் கொண்டிருந்தது. தூரத்தில் திருவாசி வளைந்து வெகு அழகாகத் தெரிந்தது. கீழே நடராஜப் பெருமானுடைய கழுத்துவரை வெண்மை வஸ்திரத்தினால் மறைக்கப்பட்டிருந்தது. கோபுர வாசலில் சுவாமி நின்றதும் கர்ப்பூர தீபஹாரத்தி எடுக்கப்பெற்றது. வாத்தியங்களின் சப்தங்கள் கலந்து மேலே எழும்பின. தீபஹாரத்தி முடியவும் வெண்மை வஸ்திரம் சுவாமியின் மேலிருந்து நீக்கப்பட்டது. சுவாமியும் ஸ்ரீபாதந் தாங்கிகளின் தோள்களின் மேல் வாத்தியங்களின் இசைக்குத் தகுந்தபடி நடன கதியில் வெளியே வந்துகொண்டிருந்தார்.

கிழக்கே, மண்டபத்தின் அருகில் நின்றிருந்த சங்கர ஐயர், "அவயம், நன்றாய்ப் பகவானைச் சேவித்துக்கொள். தூரதேசம் போகிறாய். நடராஜப் பெருமான் அருள்தான்

உன் க்ஷேமத்துக்கு அவசியம்'' என்றார். அவர், தம் அருகில் நின்றிருந்த தரளிகையைக் கவனிக்கவில்லை. சுவாமி ஊர்ந்து வந்துகொண்டே இருந்தார். ஜனக்கூட்டம் அவ்வளவு அதிகம் இல்லாததால், சுவாமியை அணுகிப் பார்க்க இயன்றது. இடது காலைத் தூக்கி, நடராஜப் பெருமான் நின்றிருந்ததும், அவர் இடது கையின் வீச்சும், வலது கரம் அபயப்பிரதானம் செய்வதும், கழுத்திலுள்ள திருவாபரணங்கள் ஒரு பக்கமாக இடக்கையின் மேல் புரண்டு, தீவட்டி வெளிச்சத்தில் மின்னிக்கொண் டிருந்ததும், முகம் மட்டும் நிமிர்ந்திருந்ததும், வாயினில் குமிழ்ச் சிரிப்புத் தேங்கி நின்றதும் தரளிகையை வைத்த கண்ணை எடுக்காத வண்ணம் நிலைக்கச் செய்துவிட்டன. அவள் தன்னையும் அறியாமல் இரு கைகளையும் உயரத் தூக்கி, ''எம்பெருமனே, உன்னை இக்கோலத்தில் இதுவரையில் நான் பாராததை மன்னிப்பாய்'' என்று முணுமுணுத்துக்கொண்டாள்.

ஒரே ஒரு சந்தேகம் மட்டும் அவள் மனத்தில் தோன்றித் தோன்றி அவளைச் சஞ்சலப்படுத்தியது. வெள்ளை சாத்தித் திறப்பதன் கருத்து என்ன என்பதே அவளுக்குப் புலனாகவில்லை. மெல்ல, ''மாமா!'' என்றாள். சங்கர ஐயர் வாயினால் வாழ்த்துக்களைச் சொல்லியவாறே, ''என்ன?'' என்பதுபோல் அவளை ஏற இறங்கப் பார்த்தார்.

''ஜபம் செய்கிறாயா, மாமா? அப்புறம் ஆகட்டும்'' என்றாள் தரளிகை.

மாமாவின் கண்களில் பிரகாசம் தோன்றியது. அவர் மண்டபத்தை வலம் வரும் சுவாமியையும் வெளுத்திடும் கிழக்கு வானத்தையும் உற்றுப் பார்த்தவண்ணம் இருந்தார். என்ன தோன்றியதோ அவருக்கு? ''ஆகா, என்னப்பன் வெள்ளையை நீக்கிக் கிழக்கு வெளுக்கச் செய்து விட்டான். இனி இந்த இரவும் பகலும் கலக்கும் விடிகாலை

யில் செய்யும் தாண்டவம் நின்றுவிடும். போவோம் வா, அம்மா, நம் இல்லத்துக்கு. நல்ல தரிசனம் கிடைத்தது. உனக்குப் பிரசாதம் வாங்கிவருகிறேன்'' என்று சொல்லிக்கொண்டே கிளம்பினர்.

தரளிகை அவரைத் தடுத்தாள். ''மாமா, என்னையும் மறந்து தரிசனம் பெற்றேன். பொழுது விடிகிறதே என்று தோன்றுகிறது. இனித் தாண்டவம் செய்யமாட்டாரோ பகவான்? ஏன்?'' என்று உண்மையாகவே ஆவல் தோன்ற அவரைக் கேட்டாள்.

''உனக்கு இதன் ரகசியம் சட்டென விளங்காவிட்டால் தவறில்லை. கேள், சொல்லுகிறேன். சிவபெருமான் பெரிய இரவை அகற்றி, ஜடப் பொருள் மயமான உலகை உய்விக்கும் பொறுப்பு உடையவ ரல்லவா? அவர் நடமாடுவதும் உலகம் சைதன்யம் பெறுவதும் ஒன்றுதான். அவனன்றி ஓரணுவும் அசையாது என்பதன் கருத்தும் அந்தத் திவ்ய நர்த்தனத்தில் அடங்கியிருக்கிறது. அவன் அசைவதே ஒரு நாட்டியமாயின் லயமும் எங்கிருந்தோ அதை அடைகிறது. அவனுடைய கூத்தின் உண்மைக்கு வம்புர உண்டா? இல்லை. இந்த லயமே மனித உள்ளத்தின் ஒழுக்கத்தின் சின்னமாம். இந்தத் தாள கதியே ருதுக்களின் வரிசையாக இயற்கையை உந்துகிறது. இந்த லய இன்பமே புல்லுக்குள்ளும் மலருக்குள்ளும் பாய்ந்து சென்று, காலத்துக்கேற்ற அழகையும் அழிவையும் புகுத்துகிறது. இந்தச் சலன ஓட்டத்தில் கட்டுப்பாடு ஒன்று இராவிட்டால், சூரியனும் சந்திரனும் சரியான காலங்களில் பரிணமித்து, மாறிமாறித் தோன்றமாட்டார்கள். தெரிகிறதா, அவயம்? சக்தி சொரூபமாகத் திகழும் தேவிதான் சிவபிரானுடன் கலந்து, இப்பெரிய இன்பத்திற்கும் ஊற்றுக்கால் ஆகிருள். தேவி அபயப்பிரதானம் செய்வதும், இவ்வித லயத்தில் கலந்தால் உலகின்கண் மாறி மாறி வரும் இன்பதுன்

பங்களுக்கு இரையாகாது இருக்கலாம் என்ற குறிப்பை உடையதே...நான் என்ன என்னவெல்லாமோ பிதற்று கிறேன் என்று கவலைப்படுகிருயா? உனக்குப் புரியக் கூடிய பாஷையில் சொல்லுகிறேன், கேள்.

"நாட்டியமாடும் பாஷையிலேயே கூறுகிறேன். இந்த இடது பாதம் எதற்காக மேலேயும் வலது பாதம் குஞ்சித மாயும் அஞ்சிதமாயும் கீழேயும் பதிந்து காண்கின்றன தெரியுமா? ஒன்றை ஒன்று தொடர்ந்து செய்யும் அசைவு களும் அங்கஹாரங்களும் தத்துவத்தின் பல திறப்பட்ட நுட்பங்களை வெளியாக்குகின்றன. வாழ்க்கையின் இன்றி யமையாத வெளித்தோற்றங்களில் எழுச்சியும் அடக்கமும் கலந்து காணப்படுகின்றன. சில வேளைகளில் கட்டுக்கு அடங்காதபடி மனவெழுச்சியில் அகப்பட்டுத் தத்த ளிக்கையில் அதற்கும் ஒரு லயம் ஏற்படுவதை ஞாபகப் படுத்திக்கொள்ள வேண்டும். உனக்கு நாட்டியக்கலை தான் தெரிந்த தாயிற்றே! இசை இன்பத்தைச் செவிகளில் தேக்குவதைக் காட்டிலும் அங்கங்களின் அசைவு குழைவு களால் இசையின்பத்தைச் சொந்தமாக்கிக் கொள்வது இன்னும் பெரிய சுகமெனத் தெரியாதா? இசை வேறு, லயம் வேறு, அங்க அசைவு வேறு என்பதே கிடை யாது. நல்ல யோக சாதனமாக நாட்டியத்தில் தேர்ச்சி பெற்றதும் உனக்கே தெரியும். நம்முடைய பாரதநாட்டி யம் மற்றச் சாமானிய நாட்டியங்களைவிடத் தனிச் சிறப் புடையது என்னும் உண்மை. சிவனுருடைய நாட்டி யத்தை நந்திகேசுவரரும், அவரிடமிருந்து பரத முனிவரும் அறிந்ததாகச் சொல்லுவார்கள். முனிவர்கள் தேடும் தத்துவமல்லவா நாட்டிய அரங்கத்தில் காணும் தெய்வ மாகத் தெரிகிறது? வெளியாட்டம் அல்ல இது; அந்தரங் கத்தில் ஆடும் சபேசனை, நடேசனை நீயும் நானும், ஒவ் வொருவரும், ஆனந்தத் தாண்டவத்தில் சதா பார்த்தும்

பாராமல்தான் தடுமாறிச் செல்லுகிறோம் என்பதை அப்பொழுது அறிவாய். ஐயோ! அவனுடைய காலின் வீச்சுக்கு, அவன் இடுப்பும் தோளும் ஓர் எல்லையா? எங்கும் வியாபிக்கக்கூடிய பாதம் அவனுடையது. காதின் குழை விழுந்ததும் அதனைக் கால் விரல்களில் இடுக்கி, அக்காலைக் கொண்டே செவியாபரணத்தைச் சரியாக அமைத்துக் கொண்டு ஊர்த்துவ தாண்டவம் ஆடிய வள்ளலாயிற்றே! அவனோடு போட்டியிடச் சக்தி சொரூபிணியான தேவியாலேயே இயலவில்லை! உன்னாலும் என்னாலுமா இயலும்! இனிக் காலை அவ்வளவு மேலே ஏற்றுதிருப்பதற்கே பாடுபடுவாய். சூசகமாகவே காலைத் தூக்கிக் காண்பி. மற்றவர்களைப்போல் அதிகமாகக் காலைத் தூக்குவது முற்றும் பிசகு. தெரிந்ததா?''

தரளிகை, சுவாமி, கோபுரவாசலைக் கடந்து உள்ளே செல்லுவதைத்தான் கண்ணிமை அசைக்காது பார்த்தாளோ அல்லது மாமாவின் வேதாந்த விளக்கத்தைக் கேட்டுத்தான் மௌனம் சாதித்தாளோ தெரியவில்லை.

மறுபடியும் சுவாமி, கோவில் உட்பிராகாரத்தை வலம் வந்து, கோபுர வாசலை அடைந்து, வெளியே வரும்வரை அங்கேயே நின்றிருக்கத் தரளிகைக்கு ஆசையாக இருந்தது. ஆனல் மாமா அதற்கு முற்றுப்புள்ளி வைத்தார். ''காலைக்கதிரவன் வரும் வேளை ஆகிவிட்டது. கோபுர வாசலில் நடராஜன் செய்யும் தாண்டவம், இவ்வளவு அழகுடன் இனி இருக்காது; மனவெழுச்சியும் முன்போல் இருக்காது. போகலாம் வா. உன்னுடைய பிரயாணம் அடுத்த இதே திங்கட்கிழமை அல்லவா? அமெரிக்கா சென்று, நாட்டியம் ஆடுகையில் காலைத் தூக்கும்பொழுது ஜாக்கிரதையாக இரு!'' என்றார் சிறிது புன்னகையுடன்.

தரளிகை சொன்னதைக் கேட்டு அவருக்கு என்ன தோன்றியதோ தெரியாது. அவர் கோபுரவாசலை மறு

முறை சேவித்துவிட்டு, "எல்லாம் ஈசன் செயல்!" என்றார். தாரிகை சொன்னதை நாமும் கேட்போமே! அவள் அக் காலவேளையில் வாய்விட்டுச் சொன்னது இதுதான்: "மாமா, நான் நாட்டியமாடித் தெரிந்துகொள்ளாததையெல்லாம் இன்றுதான் கொஞ்சம் அறியலானேன். அமெரிக்காவும் ஐரோப்பாவும் மற்றும் எல்லா உலகங்களுமே சேர்ந்து வந்தபோதிலும், இந்நாட்டின் பண்பாட்டை உணர்த்தும் ஒவ்வொரு கலையின் சாராம்சத்தையும் அறியாமலேதான் அவர்கள் தெரிந்ததாகப் புகழ்வார்கள். இது நிச்சயம். அமெரிக்கப் பிரயாணத்தை இதோ நிறுத்தி விட்டேன், மாமா; காரணம் வேறொன்றும் இல்லை. இன்று காலை, கோபுரவாசலில் கண்ட காட்சி, உள்ளே ஓர் உலகத்தையே படம் பிடித்து, அதற்கோர் சட்டத்தையும் போட்டுக் காட்டிவிட்டது. பரதநாட்டியம் செய்கிறோம். ஆனால் பரத முனியை மறந்துவிட்டோமே! இனி இந்த அற்புத நாட்டியத்தின் உயர்வை, அற்பர்களினிடையே சமர்ப்பிப்பதில்லை. இது நிச்சயம்!"

# கோபுர வாசல்

கி. ரா.

அவன் கோபுரவாசலை அடைந்ததும் ஒருகணம் நின்ருன். அந்தக் கோபுரவாசலுக்கும் அவனுடைய கடந்த கால வாழ்க்கைக்கும் ஏதோ ஒரு நெருங்கிய தொடர்பு இருந்திருக்கிறது. அவனுடைய வாழ்க்கையில் நடந்த முக்கியமான சம்பவங்கள் எல்லாம் அந்த இடத்திலேயே தான் நடந்தேறியிருக்கின்றன.

இருபது வருஷங்கள் இருக்கும். அப்போது அவன் கலாசாலையில் படித்துக்கொண்டிருந்தான், உப்புச் சத்தியாக்கிரகம் நடந்த சமயம். அதிகார வர்க்கத்தின் அக்கிரமங்களைக் கண்டு, நாடு கொதித்துக்கொண்டிருந்தது. தன்னுடைய பி. ஏ. படிப்புக்கு முற்றுப்புள்ளி வைத்துவிட்டுக் கோபு, சட்ட மறுப்புப் போரில் குதித்தான்.

கோபுரவாசலில் பொதுக்கூட்டம் போட்டுப் பேசினான். போலீசார் வந்து, பிடித்துச் சென்றனர். ஆறு மாதம் தண்டனை கிடைத்தது, அது முடிந்து, வெளியில் வந்தான். மீண்டும் ஒரு கூட்டம் நடந்தது. அதில் மூன்று மாதம். பிறகுதான் இரண்டு வருஷம் தண்டனை கிடைத்தது.

அந்தக் கடைசிப் போராட்டத்தின்போதுதான் அவன் சுசீலாவைச் சந்தித்தான். அவனுக்கு நன்ருக நினைவிருக்

கிறது. அன்று அவன் மேடைமீது ஏறி, உணர்ச்சி பொங்கப் பேசினுன். "தேசத்திற்காக ஒரு சிறு துரும்பையும் எடுத்துப் போடாத பிறவி மனிதப் பிறவியே அல்ல" என்று அங்கே கூடியிருந்த ஜனத்திரளை நோக்கி அவன் அறை கூவி அழைத்தான்.

அவன் பேசிவிட்டுக் கீழே இறங்கியதும் பதினெட்டு வயசு உள்ள ஓர் இளம் பெண், அவன் எதிரில் வந்து நின்ருள். "ஐயா, உங்கள் தேசீயப் படையில் சேர விரும்புகிறேன்" என்ருள் அவனை நோக்கி.

அவளை ஏற இறங்கப் பார்த்தான். அவளுடைய உள்ளத்தில் வேரூன்றிய தீர்மானத்தை அவளுடைய முகம் பிரதிபலித்தது. அவளுடைய கண்களில் தோன்றிய ஒரு வெறி, அவளுடைய ஆவேசத்தை அறிவுறுத்தியது.

அன்று சுசீலாவுடன்கூட இன்னும் முப்பது பெண்மணிகள் சட்டமறுப்பு உறுதிமொழிப் பத்திரத்தில் கையெழுத்திட்டனர்,

அன்று முதல்-நான்கு வருஷங்களுக்கு முன்பு அவன் சிறை செல்லும் வரையில்-சுசீலா அவனுடன் கூடவே உழைத்திருக்கிருள்.

அவனுக்கு நன்ருக நினைவிருக்கிறது; அப்போதுதான் போராட்டம் ஓய்ந்து, நாட்டில் அமைதி-சோர்வினுல் ஏற்பட்ட அமைதி-நிலவியது. எங்கும் ஹரிஜன ஆலயப் பிரவேசப் பிரசாரம் தீவிரமாக நடந்தது. கோபு, தன் பங்கைச் செய்ய முன் வந்தான். அதே கோபுரவாசல்தான். நாலைந்து ஹரிஜனப் பையன்களை ஊர்வலமாக அழைத்துக் கொண்டு, பஜனை செய்துகொண்டே கோவிலுக்குள் நுழைந்துவிட்டான்.

அவன் உள்ளே நுழைந்ததுதான் தாமதம்; அவன் தலையில் 'மடமட'வென்று நாலைந்து தடி அடிகள் விழுந் தன. பத்துத் தடியர்கள் அவன்மேல் விழுந்து, அவனைப் புரட்டி எடுத்துவிட்டனர்.

அவனுக்குப் பிரக்ஞை வந்தபோது, கோவிலுக்கு வெளியில் சாக்கடை ஓரமாகக் கிடப்பதை உணர்ந்தான். ஆள் நடமாட்டமே இல்லை. இருண்ட இரவின் மத்தி யிலே அந்தக் கோபுரத்தின் உச்சி விளக்கு மட்டும் 'முணுக் முணுக்' என்று எரிவது தெரிந்தது, வழி தவறிய இன்றைய மனித சமூகத்தின் உள்ளத்தில் ஒளிவிடும் நம் பிக்கையைப்போல்.

அப்போது அவனைக் காப்பாற்றியவள் சுசீலாதான். எங்கிருந்தோ வந்தாள். அவனை வண்டியில் ஏற்றி, வீட் டுக்கு அழைத்துச் சென்றாள். அவனுடைய உடம்புப் புண் ஆற ஒரு மாதம் ஆயிற்று. அந்த ஒரு மாதகாலமும் இடைவிடாமல் அவனுக்குப் பணிவிடை செய்தாள்.

அதன் - பிறகும் அவன் பொதுவுடைமைக் கட்சியில் சேர்ந்து, உழைத்தபோதும் - அவள் அவனை விடாமல் தொடர்ந்தாள். கடைசியாக அவளைப் பார்த்தபோது அதே கோபுர வாசலில்தான் சந்தித்தான்.

அப்போது நாடு சுதந்தரம் அடைந்துவிட்டது. ஆனால் மக்கள் மனத்தில் மகிழ்ச்சி இல்லை. எல்லோரும் எதிர்பார்த்தபடி நாட்டில் பாலும் தேனும் பெருகி ஓட வில்லை. பட்டினியும் பஞ்சமும் தலைவிரித் தாடின, அதைக் கண்டு அவன் உள்ளம் கொதித்தான். நீதியும் நியாயமும் எங்கோ ஓடி ஒளிந்துகொண்டன.

அந்த நிலையை எப்படியும் மாற்றி அமைத்துவிடுவது என்று அவன் சங்கல்பம் செய்துகொண்டான். உளுத்துப் போன இந்தச் சமுதாயத்தைத் தலைகீழாகப் புரட்டிவிட

வேண்டும் என்ற உறுதி கொண்டான். அதற்குச் சாதனம், பொதுவுடைமை வழிதான் என்று தீர்மானித்தான். அவனுடன் இன்னும் இருபது இளைஞர்கள் பின்தொடர்ந்தார்கள். அவர்களுடைய முன்னணியில் சுசீலா நின்றாள்.

பல தொழிலாளர் ஸ்தாபனங்களிலே புகுந்து, வேலை செய்தான். கிளர்ச்சியை விதைத்து வளரச் செய்தான். எங்கே பார்த்தாலும் திடீர் திடீரென்று வேலை நிறுத்தங்கள் நடந்தன.

அவனுடைய நடவடிக்கைகள் அதிகாரிகளின் கோபத்தைக் கிளறியதில் ஆச்சரியம் என்ன? அவனுடைய கட்சிக்காரர்களைப் போலீசார் வலைபோட்டுத் தேடினார்கள். அவனுடைய தலைக்கு, விலை கூறினார்கள்.

அவன் ஆறு மாதங்கள் இருளில் வாழ்ந்தான். ஒரு நிமிஷம் ஓய்வு இல்லை. ஒரு பொது வேலை நிறுத்தத்துக்காகப் பாடுபட்டான். அதில் வெற்றி காணும் நாளும் நெருங்கிற்று. அவனுடைய ஆட்களை மாகாணம் முழுவதும் அனுப்பியிருந்தான். அவன் மட்டும் உள்ளூரிலேயே தலை மறைவாக இருந்தான். அவனுக்குக் கையாள் சுசீலா தான்.

அன்றிரவு அவன் சென்னைக்குப் புறப்பட வேண்டும். அங்கிருந்து பத்து மைல் தூரம் நடந்துபோய், ஒரு சின்ன ஸ்டேஷனில் ரெயில் ஏறுவது என்று திட்டம். அப்படியே அவன் தன் அறையிலிருந்து கிளம்பிப் பதுங்கிப் பதுங்கி வந்துகொண் டிருந்தான். தூரத்தில் கோபுரத்தின் விளக்குத் தெரிந்தது. அதை நோக்கி விரைவாக நடந்தான்.

அப்போது பின்புறம் ஆள் வரும் சத்தம் கேட்டது. போலீஸ்காரன்தான். நடையைத் துரிதப்படுத்தினான். காலடியும் துரிதமாகக் கேட்டது.

கோபுர வாசலுக்கு எதிரில் ஓர் ஆள் வட்டமிட்டுக் கொண்டிருந்தான். எதிரில் போனுல் பிடிபடுவது நிச்சயம். பின்னுல் திரும்புவது என்பதும் முடியாத காரியம். அப்படியே சட்டென்று கோபுர வாசலுக்குள் நுழைந்தான். வெளிப் பிராகாரத்தை அடைந்ததும் மதில் சுவர் மேல் ஏறினுன். அப்படியே கோயிலுக்குப் பின்புறம் பார்த்தான். ஆள் நடமாட்டம் இல்லை. பதினைந்து அடி உயரந்தான் இருக்கும். பொத்தென்று கீழே குதித்தான்.

சனியன்! கால் சுளுக்கிக்கொண்டது. ஓட முடியவில்லை, அவ்வளவுதான். 'வீல்!' என்று போலீஸ் ஊதுகுழல் கேட்டது. நாலு பேர் ஓடி வந்தனர். எல்லோருக்கும் முன்னுல் சுசீலா ஓடி வந்தாள். அவளைக் கண்டதும் கோபுவுக்குத் 'திக்'கென்றது. 'திரும்பிப் போ!' என்று அவளுக்குச் சமிக்ஞை செய்தான். இல்லாவிட்டால் அவளும் அல்லவா பிடிபடவேண்டும்?

அதன் பிறகு நான்கு வருஷங்கள் ஆகிவிட்டன. அதே கோபுர வாசலில் அவன் நின்ருன்.

'டம டம' என்று நகரா அடிக்கும் சத்தம் கேட்டது. 'பம்! பம்!' திருச்சின்னத்தின் சத்தம் கேட்டது. சற்று நேரத்தில் இரண்டு பேர் ஒரு சிறு பல்லக்கைச் சுமந்து வந்தார்கள். ஒருவன் பந்தத்தைத் தூக்கிக்கொண்டு வந்தான்.

கோபுர வாசலில் வந்ததும் அந்தச் சிறு ஊர்வலம் நின்றது. ஒரு மத்தளமும் ஜாலரும் சப்தித்தன. வற்றி வதங்கிய உடலுடன் ஒரு வயோதிக ஸ்திரீ வந்து, எதிரில் நின்ருள். அவள் அரையை அலங்கரித்த மட்கிப்போன பட்டு வஸ்திரமும் அவள் முகத்தில் பூசிய பௌடரும், மஞ்சளும் குங்குமப் பொட்டும் கடந்த காலப் பெருமையை நினைவூட்டின.

சற்று நேரத்தில் கோவிலை வலம் வரப் புறப்பட்டது ஊர்வலம். அதில் கலந்துகொண்ட நாலைந்து பேரும் ஏதோ கடனைத் தொலைக்கவேண்டிய பாவத்தில், விழுந்து அடித்துக்கொண்டு ஓடினர்.

அதைப் பார்த்துக்கொண்டே நின்முன் கோபு. ஒரு காலத்தில் எவ்வளவு பக்தகோடிகள் அந்த ஈசுவரனைத் தொடர்ந்து, துதி பாடிக்கொண்டு போயிருப்பார்கள்? இப் போது ஒரு குழந்தைகூட லட்சியம் செய்யவில்லையே!

பிறரைச் சுரண்டி வாழும் முதலாளி வர்க்கத்தின் சிருஷ்டிதானே தெய்வம் என்ற கருத்து. ஒரு காலத்தில் அந்தப் பொய்யை அவனும் நம்பினுன். அந்தக் கோவிலுக் குள் ஹரிஜனங்களை அழைத்துப்போக வேண்டும் என்று நினைத்தான்! இப்போது அதை நினைக்க அவனுக்கே அவ மானமாக இருந்தது.

2

சுசீலா ஒரு மாஜி ஹைக்கோர்ட் நீதிபதியின் மகள். பௌதிக சாஸ்திரத்தில் எம். ஏ. பட்டம் பெற்றவள். ஆனுல் அவளுக்கும் அவளுடைய தந்தைக்கும் பேச்சு வார்த்தைக்கூடக் கிடையாது. தன் வாழ்க்கைப் பாதை யைத் தானே வகுத்துக்கொள்ளப் போவதாக அவள் தந் தையின் அரவணைப்பிலிருந்து வெளியேறி விட்டாள். அவ ளுடைய சுயேச்சையைக் கண்டு அவன் பலநாள் வியந்த துண்டு.

ஆகையினுல் அவளைத் தேடிப் போன அவன், அவளு டைய வீட்டுக்குப் போகவில்லை. நேராக அவர்கள் ரகசிய மாகச் சந்திக்கும் இடமான ஒரு ஹோட்டலை அடுத்த குடி சைக்குப் போய்ப் பார்த்தான் அங்கே அவனுடைய பழைய தோழர்கள் யாருமே காணப்படவில்லை.

அந்தக் குடிசையில் பூமிக்கடியில் ஓர் இரும்புப்பெட்டி வைத்திருந்தது. அதில்தான் அவர்களுடைய கட்சி ரிக் கார்டுகள், பணம் எல்லாம் வைப்பது வழக்கம். அதற்குப் பக்கத்தில் அவர்களுடைய ரகசிய ஒலிபரப்பியும் இருக்கும். இப்போது ஒன்றுமே காணப்படவில்லை. பூமியெல்லாம் தோண்டப்பட்டிருந்தது. எருக்கும் கள்ளியும் மண்டிக் கிடந்தன. எல்லோரும் எங்கே போய்விட்டனர்?

அதன் பிறகு, மற்ற இடங்களிலெல்லாம் போய்ச் சுற்றிப் பார்த்தான். யாரையுமே காணவில்லை. அதன் பிறகு தான் சுசீலாவின் தகப்பனார் வசிக்கும் பங்களாவை நோக்கி நடந்தான்.

அந்தத் தெருவின் மூலை திரும்பும்போதே அவர்கள் வீட்டு வாசலில் ஒரு கார் நிற்பதைக் கண்டான். அதன் பக்கத்தில் யார்? சுசீலாதான்! நடையை வேகமாக்கினான். காரின் கதவைத் திறந்துகொண்டு அவள் நின்றாள். அப்போது, ஐரோப்பிய உடை அணிந்த ஒரு மனிதர் உள்ளேயிருந்து வந்தார். இருவரும் ஏறிக்கொள்ளக் கார் புறப்பட்டது. கோபு ஓடினான். அதற்குள் கார் புறப்பட்டுப் போய் மறைந்தது.

சுசீலா, தகப்பனார் வீட்டுக்கு ஏன் வந்தாள்? கொள்கையை மாற்றிக்கொண்டுவிட்டாளா? அவளுடைய லட்சியம் என்ன ஆயிற்று?

அவளுடைய வீட்டுவாசலை விட்டுத் திரும்பியதுமே அவனுடைய கேள்விகளுக்குப் பதில் கிடைத்துவிட்டது.

எதிரில் சோனியைக் கண்டான். சோனிதான் அவர்களுக்குக் கையாள். கட்சியில் நேரடியாகச் சம்பந்தப்படாமல் அவர்களுக்கு வேண்டிய வேலையெல்லாம் செய்வான்.

அவன்தான் எல்லாம் சொன்னான். அவன் பிடிபட்டதுமே கட்சி குலைந்துவிட்டது. இவனுடன் கூடி உழைத்தவர்களில் ஒருவன் கட்டிடக் கண்டிராக்டரா யிருக்கிறான். இன்னொருவன் எங்கேயோ காபி ஓட்டல் வைத்திருக்கிறான். மற்ற இருவரும் போலீசாரிடம் பிடிபட்டு, மன்னிப்புக் கேட்டுக்கொண்டு எங்கோ ஓடிவிட்டனர்.

சுசீலா—அவளுக்குத்தான் கல்யாணம் ஆகிவிட்டதே! ஆம்; அவள்கூட வண்டியில் போனவன்தான் அவளுடைய புருஷன்; இலங்கையில் தேயிலைத் தோட்டம் வைத்திருக்கிறான். அசல் ஐரோப்பியன்; லட்சாதிபதி.

அவன் மனம் அதிர்ச்சி அடைந்தது. ஆனால் அவன் ஆச்சரியப்படவில்லை. என்ன இருந்தாலும் சுசீலா அவளுடைய வர்க்கத்தின் பிரதிநிதிதானே? உடம்பில் ஊறிய ரத்தம் போய்விடுமா? ஏதோ சிறிது காலம் விளையாடியிருக்கிறாள். பொதுவுடைமை அவளுக்குப் பொழுது போக்கு. அவன் ஒரு விளையாட்டுக் கருவியாக இருந்திருக்கிறான். அவன் மனத்தில் வெறுப்பு உணர்ச்சி நிறைந்தது. அவளை நம்பியதற்குத் தன்னையே நொந்து கொண்டான்.

3

அவன் எவ்வளவு நேரம் ஊரைச் சுற்றினானோ அவனுக்கே தெரியாது. மறுபடியும் அவன் கோபுரவாசலை நெருங்கியபோது கோவில் மணி மூன்று அடித்தது. கோபுரத்தின் உச்சியில் எரிந்த விளக்கு அந்த இருண்ட இரவில் தன்னந்தனியாக ஒளிவிட்டுப் பிரகாசித்தது.

திடீரென்று, 'ஐயோ!' என்று ஒரு கூச்சல் கேட்டது. திடுக்கிட்ட கோபு, சத்தம் வந்த திக்கை நோக்கி, விரைந்தான். ஒரு நொடியில் கோபுர வாசலை அடைந்தான்.

அங்கே அவன் கண்ட காட்சி குழம்பிப் போயிருந்த அவன் மனத்தைக் கலக்கியது.

ஒரு ஸ்திரி; ஒட்டி உலர்ந்த உடல். கீழே ஒரு குழந்தை கிடந்தது, எலும்புக் கூடாகக் கிடந்த அது பிரக்ஞை யற்றதைப்போல் கிடந்தது. பக்கத்தில் கர்ப் பூரம் ஏற்றி இருந்தது. அந்த ஸ்திரீ புலம்பிக்கொண் டிருந்தாள்!

'ஏ தெய்வமே! உனக்கு வாரம் நேர்ந்தேனே! அதற் குப் பலன் இதுதானே? இதற்கு உயிர்ப்பிச்சை கொடுக்க வேண்டியது உன் பொறுப்புத்தான்! இல்லாவிட்டால் நான் உன் சந்நிதியை விட்டுப் போகமாட்டேன்!"

இன்னும் அவள் என்ன என்னவோ புலம்பிக்கொண் டிருந்தாள். ஆனால் அவளுடைய குரலில் ஒலித்த நம்பிக்கை, கோபுவின் மனத்தை உலுக்கிவிட்டது. அவனையும் அறி யாமலே அவன் உள்ளத்தில் ஏதோ ஒரு புது உணர்ச்சி தோன்றியது. அப்படியே அவன் ஸ்தம்பித்து நின்றான். அவன் கண்களிலிருந்து இரண்டு சொட்டுக் கண்ணீர் உதிர்ந்தது.

# கொட்டு மேளம்

## லா. ச. ராமாமிர்தம்

பரதேசிக் கோலம் படி தாண்டிவிட்டது. அப்புறம் அவளுக்குத் தாளவில்லே. சின்னம்மாவைக் கூப்பிட்டுச் சாய்வு நாற்காலியை எடுத்துவரச் சொன்னுள்.

"என்னம்மா பண்ணப்போறே?"

"கீழே வரப்போறேன். மங்களத்தையும் கூப்பிடு. பக்கத்திலே ரெண்டு பேரும் வந்து, என்னைத் தாங்கிக் கோங்கோ."

திறந்த வாய்மேல் சின்னம்மா இரு கைகளையும் பொத்திக் கொண்டாள்.

"என்னம்மா சொல்றே? ஐயர் எங்களை உசிரோடே வெப்பரா?"

"அவன் கிடக்காண்டி; இருந்திருந்து இன்னிக்கும் மாடியிலே இருப்பேனு? என்னை இதிலே வெச்சு, மெதுவாகக் கீழே இறக்கி அவாள்ளாம் வரத்துக்கு முன்னுலே கூடத்து உள்ளே கொண்டு போயிடுங்கோ. இரு இரு, சின்னம்மா, மயிரைக் கொஞ்சம் கோதி முடிஞ்சுடு. பீரோவைத் திற. அந்தக் கிளிப் பச்சையை எடு. அது தான்—"

"பட்டுப் புடவையாம்மா?"

"ஏண்டி? என்னைப் பார்த்தா உடுத்திக்கிற மாதிரி இல்லையா? இந்தக் கல்யாணத்துக்கில்லாமே எப்போ உடுத்திக்கிறதாம்? சரி சரி, நான் ரெடி. மேளம் நெருங்கறாப் போலே யிருக்கே. என்னைக் கீழே சேத்துடுங்கோ."

உள்ளங்கையில் ஏந்தினாற்போல்தான் அவர்கள் அவளைக் கீழே கொண்டு போனாலும் அந்தப் பிரயாசை கூட அவளுக்குத் தாங்கவில்லை. நரம்புகள் மார்பில் சுருட்டி அடைத்தன. மூச்சுத் திணறிற்று. நல்ல வேளை யாகப் பெண்கள் கூட்டமெல்லாம் வாசலில் நெரிந்திருந் தது. கூடத்து அறையில் சேர்ந்துவிட்டோம் என்று நிச்சயப்பட்டதும் ஜானுவுக்குத் திடீரெனக் கண்கள் இருட்டின.

"சின்னு, ஒரு முழுங்கு தீர்த்தம் கொண்டு வாயேன்!—"

மேள சப்தம் நெருங்கிக்கொண்டே வந்தது. மேள நாதம் தூரத்திலிருந்து நெருங்கிக்கொண்டே வந்து, அவ ளுள் பொழிந்து, ஒரு பரபரப்பைப் பரப்பியது. கொஞ் சம் கொஞ்சமாக உடல் சுவாதீனத்துக்கு வந்தது.

இந்தப் போராட்டத்தில், வாசலில் பச்சை சுற்றலும் ஊஞ்சலும் எப்பொழுது முடிந்தன என்று தெரியவில்லை. கல்யாணப் பெண்ணின் கையைப் பிடித்துக்கொண்டு, ராமதுரை கூடத்துள் நுழைவதைத்தான் கண்டாள்.

மார்பில் கைகளை அழுத்திக்கொண்டாள்.

'இரு இரு உசிரே, கொஞ்சம் பொறு; அதுக் குள்ளே—'

இத்தனை கூட்டத்திலும், அதுவும் ஒருக்களித்த கத வின் பின்னாலிருக்கும் ஜானுவை ராமதுரை எப்படியோ

பார்த்துவிட்டான். மை தீட்டிய விழிகளிலிருந்து அவன் முறுவலின் ஒளியும் கலந்த அடையாளத்தின் சுடர் அவள் மேல் ஆடுகையில், அவள் கண்கள் நிறைந்து நீந்த ஆரம்பித்து விட்டன.

'ஜானு, எப்படிக் கீழே வந்தாய்?'

அப்போதுதான் தன்னருகில் நிற்கும் சந்துருவைக் கண்டாள். அவள் கன்னங்களில் கண்ணீர் அடக்க முடியாமல் கரகரவென வழிந்தது.

எப்படிப்பட்ட கிழமானாலும் இந்தமாதிரி சமயத்தில் தனக்கும் நேர்ந்த அதே நிகழ்ச்சியின் நினைவு வருமோ இல்லையோ? ஜானு தனக்குள் சிரித்துக்கொண்டாள்.

*　　　　*　　　　*

ஜானுவின் அழகுக்கு அவள் கணவன் உறைபோடக் காணுன் என்று அப்போதே எல்லோரும் சொல்லிக் கொண்டார்கள்.

"ஏண்டி, இத்தனை நாள் காத்திருந்தேளே. இருந்திருந்து இந்த இடந்தான் உங்களுக்கு அகப்பட்டதா!"

"இன்னும் எத்தனை நாள் மாமி காத்திண்டிருக்கிறது? இப்போ இப்படிச் சொல்றவா நீங்களே, இன்னங் கொஞ்ச நாள் – பொண்ணை வீட்டிலே வெச்சிண்டிருந் தோமானால், வேறே தினுசாப் பேசுவேள். நாங்கள் இப்போ இருக்கிற நிலையிலே இதுக்குமேலே வீங்கறத்துக் கில்லை. இப்போ படற கடனையே எங்கள் சந்துரு தலையெடுத்துத்தான் அடைக்கணும். இத்தோடே போகலையே. அவனுக்கு இன்னும் ரெண்டு தங்கை இருக்காளே—"

"இருந்தாலும்—"

''அதெல்லாம் என்னத்துக்கு மாமி? ஆண்பிள்ளைக்கு அழகென்ன வேண்டியிருக்கு? எங்கேயாவது மானமாய், வயத்தே அலம்பிண்டு தீர்க்காயுசா இருந்தாப் போரும்—''

'தீர்க்காயுசாய்' என்ற பதத்தொடர் பட்டவுடனே ஜானுவின் மனக்கண்ணெதிர்க் காட்சி மாறியது.

* * *

அப்பொழுதுதான் சேவல் கூவி ஓய்ந்தது. வாசற் கதவை யாரோ படபடவெனத் தட்டுகிறார்கள். ஏற் கனவே ஏதோ வயிற்றில் நெருப்பைக் கட்டிக்கொண்டு கண் விழித்திருக்கும் அவள் ஓடிப்போய்த் திறக்கிறாள். வாசலில் சைக்கிளில் ஒருவன், கையில் ஒரு சீட்டைப் பிடித் துக்கொண்டு நிற்கிறான்.

''இது 23-ஆம் நெம்பரா? ஆஸ்பத்திரியிலிருந்து வரேன். மக்கோநக்கி வார்டுலே, 13-ஆம் நெம்பர் பெட் பேஷண்டு தவறிட்டுது, அம்மா—''

''ஐயோ!''

கல்யாணம் நடந்து மூன்று வருஷங்கள் முழுக்க ஆக வில்லை. வெள்ளிக்கிழமையாகப் பார்த்து, யமன் அவள் கழுத்துக் கயிற்றைப் பிடுங்கிக்கொண்டு போய்விட்டான்.

* * *

ஜானு, தன் அண்ணனைக் கடைக்கண்ணால் கவனித் தாள். அவனும் யோசனையில் ஆழ்ந்துதான் நின்றுகொண் டிருந்தான். ஒற்றை நாடி தேகம், வெள்ளை ஜிப்பா, முழங்கால்வரையில் தொங்கிற்று. முகத்தின் செந்தா ழைச் சிவப்பு இன்னும் இம்மிகூடக் குறையவில்லை. கரடி மயிரால் வளைத்த புருவங்கள் நெரிந்திருந்தன. ஆனால் அவன் தலைமயிரைப் பார்க்கையில்தான் ஜானுவுக்கு மனம்

பெருந்தாங்கலா யிருந்தது. மயிர் தும்பையாக நரைத் திருந்தது. அப்படி நரைக்க அவனுக்கு இன்னும் வயதாக வில்லை.

சந்துருவுக்கு மயிர் நரைத்ததிலிருந்து ஜானு மற்றெல் லோர் மயிரையும் கவனிப்பாள். அதுவே ஒரு கெட்ட பழக்கமாய்விடும்போல் இருந்தது. ராமதுரைக்கு ஒரே சுருட்டை; சீனுவில் வங்கி வங்கியாய் அடுக்கும். ஆனல் பாதிப்பொழுது வாரவும் மாட்டான். முழுக் கறுப்பும் இல்லை. சிறு செம்பட்டை பூத்த மோதிரக் குவியல்.

ஜானுவுக்கு மயிர் வெகு முரடு; அடர்த்தி. அதுவும் தனக்கு இந்தக் கதி நேர்ந்தபின் பின்னுவதையே விட்டு விட்டாள். மயிரின் முடிச்சு, ஒரு இளநீர்ப் பருமனுக்குக் கழுத்தில் கனத்துக்கொண் டிருக்கும். ஆனல் ஒரு நரை மயிர்கூடக் கிடையாது.

"உங்களைச் சாஸ்திரிகள் கூப்பிடருர்,"

அவளுடைய மன்னி, நாதாங்கியைப் பிடித்துக் கொண்டு வாசற்படிக்கு வெளியே நின்ருள். சிந்தனையின் அரைப் போதையில் ஜானு கெளரியைப் பார்த்தாள். அவளுக்குக் கூந்தல் குட்டை. ஆனல் நடுவகிட்டிலிருந்து சீவப்பெற்று ஒரு மயிர்கூடப் பிரியாது, பின்னுக்குப் போகையில், அதன் ஒழுங்கும் பளபளப்பும் முன்னடர்த் தியும் பறவையின் ஒடுங்கிய சிறகுகளை நினைவு மூட்டின.

"நேரமாயிடுத்தாம்—"

சந்துரு, பின்னல் கையைக் கட்டிக்கொண்டு அறையை விட்டு வெளியே சென்றுன். கூட்டத்தில் அவன் கலக் கையில் அவன் முதுகைப் பார்த்துக்கொண்டே கெளரி நின்ருள்.

"கெளரி, எங்கேடி போயிட்டே? பருப்புத் தேங் காயை எங்கே வெச்சூட்டே?" என்று ஒரு குரல்

கத்திற்று. கௌரி அவ்விடம் விட்டு அகன்றாள். அவள் முகத்தில் எவ்வித மாறுதலும் இல்லை. அவள் முகமே ஒரு முகமூடி.

இப்பொழுது தன் பிள்ளைக்குக் கல்யாணம் நடக்கை யில் கௌரிக்கும் தன் மணத்தின் நினைவு வருமோ இல்லையோ? எப்படியோ தன் கல்யாணத்தை, யாருமே, எப்பொழுதுமே மறக்காதபடி அவள் பண்ணிக்கொண்டு விட்டாள்.

சந்துருவுக்குக் கல்யாணம் நடந்தபோது, அது குடும் பத்திற்கே ஒரு முக்கியமான சம்பவம். மற்றத் தங்கை களையும் கல்யாணம் பண்ணிக் கொடுத்துவிட்டு, அந்தக் கடனையும் அடைத்துவிட்டுத் தலைநிமிர்கையில், சந்துரு வுக்கு முப்பது வயது ஆகிவிட்டது. அதற்குமுன் எந்தக் கட்டிலும் பட மறுத்துவிட்டான். ஆனால் அப்புறமும் தன் மணத்தைத் தள்ளிப்போட நியாயமில்லை. தகப்பனார் காலமாய்விட்டார். தாய்க்குத் தள்ளாமை. ஜானு பள்ளிக் கூடத்தில் படித்துக்கொண் டிருந்தாள். ஆகையால் கிழவி யைக் குந்தவைத்துச் சாதம் போடவும், வீட்டுக்கு வந்தவர் களுக்குக் குங்குமச் சிமிழ் நீட்டவும் மருமகள் வர நாளாகி விட்டது. வேளையும் வந்துவிட்டது.

மன்னி கழுத்தில் மூன்றும் முடிச்சைப் போட முடியாவிட்டாலும், மன்னி வந்தாள் என்ற சந்தோஷத் திலேயே ஜானு குழந்தையாகிவிட்டாள்.

* * *

குழந்தைப் பருவத்துச் சம்பவம் ஒன்று அவள் நினைவில் மின்னியது. சிறு வயதில் சந்துரு மகா துஷ்டன். திடீரென்று ஏதோ வெறி வந்து, ஜானுவைக் கீழே தள்ளி விட்டான். ஜானு அழுதுகொண்டே போய் அப்பாவிடம் சொன்னாள். அப்பாவுக்கு ஆபீஸிலிருந்து வந்த சிரமம்.

சாரத்தில் செருகியிருந்த கயிற்றை உருவி, சந்துருவை வீறுவீறென்று வீறிவிட்டார். கண்ணெதிரில் சந்துரு துள்ளித் துடிப்பதைக் கண்டதும் ஜானுவுக்கு உடம்பு வெலவெலத்துவிட்டது. சந்துருவைத் தேடிக்கொண்டு போனாள். கட்டில்மேல் சுருட்டி வைத்திருக்கும் படுக்கைகளுக்கிடையில் சந்துரு, குப்புறப் படுத்துக்கொண் டிருந்தான். முதுகில் கிண்டு கிண்டாய் எழும்பியிருந்தது. அங்கங்கே சிராய்ப்பு.

"அண்ணு!—"

"போடீ!—உன்னுலேதானேடீ—" சந்துரு சீறி விழுந்தான். அவன் கன்னங்களில் கண்ணீர் காய்ந்து போயிருந்தது.

அவள் கண்கள் தளும்பின.

"இல்லேண்ணு!—"

"ஏண்டி வந்தே, போ—போய்டு"

"தேங்கா யெண்ணெய் தடவறேன். குப்புறப் படுத்துக்கோ. அசக்காதே—"

கல்யாணமான புதிதில் சந்துரு, பார்த்தவர் அதிசயிக்கும்படி தகதகத்தான். அடர்ந்த புருவங்களின் அடியில் பூனைக்கண்கள் விட்டுவிட்டுப் பிரகாசித்தன. அப்பொழுது அவன் மயிர் மைக்கறுப்பாய்த்தான் இருந்தது. நெற்றியில் சில சமயங்களில் குங்குமம் இட்டுக்கொள்வான். பக்தியினுல் அல்ல; அழகுக்காக.

ஓரிரவு மணி இரண்டு இருக்கும். ஜானுவுக்குத் திடுக்கென விழிப்பு வந்தது. திடீரென்று போட்ட விளக்கில் அன்று ஒரே வெளிச்சமாயிருந்தது. சந்துரு, கட்டிலருகில் நின்றுகொண் டிருந்தான். அவன் கண்கள் விரிந்து அவள்மேல் தாழ்ந்திருந்தன. ஆனல் பார்வை அவள்

மேல் இல்லை. ஏதோ பரவசத்துள் ஆழ்ந்திருந்தன. அவன் உதடுகளில் ஒரு புன்னகை ஆரம்பித்து, ஆரம்பித்த நிலையிலேயே தோய்ந்திருந்தது.

ஜானு எழுந்து உட்கார்ந்தாள். "என்னடா அண்ணு?"

சந்துரு கட்டிலின் விளிம்பில் உட்கார்ந்தான்.

"ஜானு, நான் ஒரு கனுக் கண்டேன். இப்பத்தான் கண்டேன். கண்டதிலிருந்து என் நிலையில் இல்லை. என்னை என்னவோ பண்ணுகிறது. உன்னிடம் உடனே சொல்ல வந்தேன்."

எழுந்து போய், ஜன்னலண்டை நின்ருன். அவனுக்கு இன்னும் இருப்புக்கொள்ளவில்லை. வெளியே நிலவுக்குப் பின் மேகங்கள் சரசரவென விரைந்துகொண் டிருந்தன.

"இதுமாதிரிதான் வானம் இருந்தது. ஆனல் சந்திரன் தெரியவில்லை. தேங்காயைத் துருவி, மலைமலையாகக் குவித்திருந்தது. என் கண்ணுக்கு எட்டிய வரையில் இந்த மேகங்களில் கற்கண்டுக் கட்டிகள்போல் நக்ஷத்திரங்கள் வாரி இறைத்திருந்தன.

"அப்பொழுது யாரோ பாடும் குரல் கேட்கிறது. ஆண் குரல். ஹிந்துஸ்தானி சங்கீதம். கஜல் என்பார்களே அது. இடையிடையே நீண்ட தொகையராக்கள். குரலோடு இழைந்து இழைந்து பத்துச் சாரங்கிகள் அழுகின்றன. திடீரென்று தபேலாவின் மிடுக்கான எடுப்புடன், ஆரம்ப அடியில் பாட்டு முடியும்போதெல்லாம், இன்பம் அடிவயிற்றைச் சுருட்டிக்கொண்டு பகீர் பகீர் என்று எழும்புகிறது. அந்தமாதிரிக் குரலை நான் கேட்டதே இல்லை. என் எலும்பெல்லாம் உருகிவிடும்போல் இருக்கிறது. நான் அதைத் தேடிக்கொண்டே போகிறேன் பாடும் ஆளும் தென்படுவதாயில்லை. என் எதிரே கட்டட

மும் இல்லை. ஒரே பரந்த வெளிதான். ஆனால் குரலின் கண கணப்பும் நெருக்கமும் இனிமையும் ஒரே இரைச்சலாய் வீங்கி, என்மேல் மோதுகையில் எனக்கு ஏற்பட்ட தவிப்பு இன்னமும் தணிந்தபாடில்லை. என் மார்பே வெடித்துவிடும்போல் இருக்கையில், நல்ல வேளையாக விழித்துக்கொண்டேன். ஜானு, இதற்கு அர்த்தம் உண்டா?''

''மன்னிகிட்டே சொன்னையா? அவள் என்ன சொல்கிறாள்?''

அவன் சிரித்தான். ''அவள் என்ன சொல்லுவாள்? நான் சொன்னதையே அவள் வாங்கிக்கொண்டாளோ இல்லையோ? அவளுக்கு ஒரே தூக்கக் கலக்கம். 'ஏதோ சினிமாவுக்கு என்னை விட்டுவிட்டுப் போயிருப்பேள். அதன் பின்னணி சங்கீதம் மனசில் பதிஞ்சிருக்கும்' என்று ஒரே வார்த்தையில் முடித்துவிட்டுத் திரும்பிப் படுத்துக்கொண்டுவிட்டாள்.''

அவளுக்கு என்ன சொல்வதென்று புரியவில்லை. அவனுடைய கனவு, அவள் நெஞ்சிலும் ஏதோ இம்சை பண்ணிற்று.

''நாங்கள் யாராவது அந்தக் கனவில் வந்தோமா? நான், அம்மா, மன்னி—''

''இல்லை, நீங்கள் ஒருவருமே இல்லை.'' பெருமூச் செறிந்து, சந்துரு திரும்பினான்.

'ஒருவேளை கௌரி சொல்வதும் சரிதானோ என்னவோ? ஒண்ணும் இலலாததைப் பிரமாதம் பண்ணிக் கொள்கிறேனோ என்னவோ?—'

''அட! அதுக்குள்ளே மன்னி உன்னைத் தேடிண்டு வந்துட்டாளே!''

கௌரி வாசற்படியில் நின்றுகொண் டிருந்தாள். அவள் முகமே ஒரு முகமூடி.

"இல்லை, குழாயில் ரப்பரைக் கட்டிவிட்டேன்" என்றாள் அவள்.

"சரி சரி, ஜானு தூங்கு. அனாவசியமாக எழுப்பி விட்டேன். எப்படியும் கனுத்தானே! எல்லாமே கனுத் தானே! கனுக்குள் கனு—"

ஆனால் அவளுக்கு வெகு நேரம் வரையில் தூக்கம் வரவில்லை. அந்தக் கனவைப்பற்றி வெகுநேரம் சிந்தித்துக் கொண்டிருந்தாள். அதைக் கனுவென்று சட்டென உதறித் தள்ள முடியவில்லை. கண்டதற்கெல்லாம் சந்துரு அவளை யோசனை கேட்பதில்லை. இது எதனுடைய அடை யாளமோ மாதிரி இருந்தது.

ஜானுவுக்கு மனப்பிராந்திதானோ என்னவோ, அன்றி லிருந்து தன்னை மன்னி ஏதோ தினுசாகப் பார்ப்பது போலும் கவனிப்பதுபோலும் தோன்றிற்று, கேஸுக்கு அலையும் போலீஸ்காரன் கவனிப்பதுபோல். மன்னி அப் பொழுதுதான் கொஞ்சம் கொஞ்சமாகத் தன் சுயரூபத் தைக் காண்பிக்க ஆரம்பித்தாற்போலவும் இருந்தது, திடீரென்று மணிக் கணக்கில், சுவரில் சாய்ந்த வண்ணம் உட்கார்ந்துகொண்டோ நின்றுகொண்டோ இருப்பாள்.

"என்னடி கௌரி, இப்படி உட்கார்ந்திண்டு இருக்கே? எழுந்து காரியத்தைப் பாரேண்டி!"

ஊஹூம். கௌரிக்குக் காது திடீரென்று செவி டாகிவிடும். வாயும் கிட்டிவிடும். ஓர் ஆணியையோ கல்லையோ எடுத்துக்கொண்டு சுவரில், "கௌரி மனோகரி" என்று செதுக்கிக்கொண் டிருப்பாள். ஏனோ திடீரென்று முரண் செய்ய ஆரம்பித்துவிட்டாள். ஏதோ தனக்குள் ஓர் எண்ணத்தை ஸ்தாபிதம் செய்துகொள்ள ஆரம்பித்து

விட்டாள். என்னவென்றுதான் புரியவில்லை. காரியங்களில் அசிரத்தைக்குக் கண்டித்தாலோ கோபித்தாலோ, வாய் திறவாள். வாசலில், ஜன்னலுக்குப் போய் அடிக்கடி நின்று தெருவேடிக்கை பார்த்துக்கொண் டிருப்பாள். அரைமணி நேரத்திற்கு ஒரு முறை குழாயடிக்குப் போய் முகம் கழுவிக்கொள்வாள். எஞ்சிய பொழுதுக்குத் தன் பெட்டியிலிருக்கும் சாமான்களைக் கலைத்துப் புதுப் புது விதமாக அடுக்கிக்கொண் டிருப்பாள்.

சந்துருவின் அம்மாவுக்கு இதெல்லாம் புதிராக இருந்தது. பிடிக்கவும் இல்லை,

''என்னடி கௌரி, அரைமணி நேரத்துக்கு ஒரு தடவை அலங்காரம்? நெற்றிக் குங்குமத்தை நீ அடிக்கடி கலைச்சுக்கிறது எனக்குப் பிடிக்கல்லே. பூர்வகர்ம வினையிலே தாயும் பெண்ணுமா நாங்கதான் அதை இழந்துட்டு நிக்கறோம். பளிச்சுனு முகத்துலே பத்தும்படி, மஞ்சள் பூசிக்க மாட்டையா? நீ இனிமே வெள்ளைப்புடவை கட்டாதே—''

''எங்காத்துலே—''

''இதோ பார் கௌரி, உங்காத்துலே அப்படி யிருப்பேன், இப்படியிருப்பேன்—இதைப்பத்தி என்னிடம் இனிமே சொல்லாதே. இனிமே நீ இந்தாத்து மனுஷி. அதனாலே இந்தாத்துப் பழக்க வழக்கங்களைச் சுருக்கப் படிச்சுக்கோ. தெரியாட்டா எத்தனை தரம் வேணுமானாலும் சொல்லித் தரோம். ஆனால் புடிச்சுக்கோ. இஷ்டத்தோடு பிடிச்சுக்கோ. உன் டோலக்கைக் கழற்றிவை. பெட்டியிலே என் தோடு இருக்கு. தரேன்; போட்டுக்கோ. உன் பரந்த முகத்துக்கு அதுதான் நன்னயிருக்கும். தொட்டத்துக்கெல்லாம் உங்காத்தைப்பற்றி ஆரம்பிச்சுக்கறையே!''

ஆனல் மருமகள் திருந்துவதாயில்லே. மாமியாருக்கு உள்ளூறக் கவலே பிடுங்கித் தின்ன ஆரம்பித்துவிட்டது. 'இவள் ஏதோ மாபாரதத்துக்குத் தயாராய்க்கொண்டு வருகிருள்' என்கிற திகில் அவளேப் பிடித்துக்கொண்டு விட்டது. தின்னும் சோறு, உடம்பில் ஒட்டவில்லே. பக்கென்று உடல் இளேத்துவிட்டது.

சந்துருவுக்கு என்னவென்று புரியாவிட்டாலும் வீட்டில் ஏதோ சரியாயில்லே என்கிற வரைக்கும் புரிந்தது.

"ஏம்மா, ஒரு மாதிரியா எப்பவும் சுருண்டு படுத்துக்கொண்டிருக்கிருய்? உடம்பு சரியில்லேயா? வைத்தியனே வரவழைக்கட்டுமா?"

"ஒண்ணுமில்லேடா; வயசாயிடுத்தோன்னே? தள்ளல்லே—"

"அப்படி என்னம்மா வயசு ஆய்விட்டது, திடீரென்று?"

கௌரியை ரகசியமாகக் கூப்பிட்டான். "ஏன் அம்மா ஒரு மாதிரியாக இருக்கிருள்?"

'என்ன மாதிரி இருக்கிருர்? எனக்கென்ன தெரியும்?'

'ஜாண, அம்மா ஏன் ஒரு மாதிரியா யிருக்கிருள்?"

"எனக்கென்ன தெரியும்? கவனிக்க எனக்கெங்கே போதிருக்கு? எனக்குப் பரீக்ஷை நெருங்கிடுத்து. அண்ணு, இந்தப் பாடம் வாத்தியாருக்கே புரியல்லே. எனக்குச் சொல்லித் தாயேன்!—"

அன்று இரவு எத்தனே நாழிகை ஆயிற்று என்றே தெரியவில்லே. பாடத்தை யொட்டி, அவன் வாயிலிருந்து அவனுடையனவே இல்லாதவை போன்று உதிர்ந்த வார்த்தைகளேயும் தர்க்கங்களேயும் ஸ்தம்பித்துப் போய்க் கேட்டுக்கொண் டிருந்தாள். திடீரென்று அவளுக்குப்

பிடரி குறுகுறுத்தது. தன்னை யாரோ கவனிப்பது போன்ற ஓர் உணர்ச்சி; திரும்பிப் பார்த்தாள்.

சந்துருவுக்கு அதற்கெல்லாம் சட்டெனக் கோபம் வந்துவிடும்.

"நான் முக்கியமா ஏதோ சொல்லிக்கொண் டிருக்கிறேன். என்ன பராக்கு?"

"மன்னி அண்ணு!"

மன்னி, ஜானுவையே அவள்மேல் வைத்தவிழி மாருது கவனித்துக்கொண் டிருந்தாள். சந்துருவுக்குக்கூட அந்தப் பார்வை பிடிக்கவில்லை.

"கௌரி, ஏன் அப்படிப் பார்க்கிருய்? புசுக்கெனச் சத்தம் போடாமே, ஏன் அப்படி வந்து நிற்கிருய்?"

கௌரிக்கு விழி மாறவில்லை. அவள், தன் கணவனைக் கூடத் திரும்பிப் பார்க்கவில்லை. சந்துருவுக்குக் கோபம் வந்து விட்டது.

"கௌரி, உன்னைத்தான் சொல்கிறேன்! கௌரி! கௌரி!"

"என்னை என் வீட்டில் கொண்டுபோய் விட்டு விடுங்கள்."

"என்ன?"

திடீரென உயர்ந்த தொனி கேட்டு, சுவரோரம் கண்ணயர்ந்த அம்மாவுக்கு விழிப்பு, தூக்கிப் போட்டுக் கொண்டு வந்தது.

"ஏண்டா அவளைக் கோவிச்சுக்கறே?"

கௌரியின் முகத்திலோ குரலிலோ எவ்விதமான உணர்ச்சியும் இல்லை. குரூரமான ஒரு வெறிச்சுத்தான் இருந்தது.

"என்னை என் வீட்டிலே கொண்டுபோய் விட்டுடுங்கோ!"

அம்மா கௌரியிடம் ஓடிவந்தாள். "என்னடி கௌரி பேத்தறே!"

கௌரி, சந்துருவைப் பார்த்துக்கொண்டு பாடம் சொல்வதுபோல், "என்னை என் வீட்டில் கொண்டுபோய் விட்டுடுங்கோ. இந்த வீட்டில் உங்க தங்கைக்கும் எனக்கும் சேர்ந்து இடமில்லை!"

அம்மாவுக்கு உடல் வெடவெடவென உதறிற்று. "ஐயோ சந்துரு! இதுமாதிரி தாண்டா ஏதோ என் வயத்தைக் கலக்கிண்டிருந்தது."

சந்துரு அம்மாவைப் பிடித்துக்கொண்டான். இல்லாவிட்டால் அவள் கீழே விழுந்திருப்பாள்,

"என்னை என் வீட்டிலே கொண்டுபோய் விட்டுடுங்கோ. நீங்கள் விடாட்டா நானு வெளியேறிப் போய் விடுவேன்—"

கொஞ்ச நாழிகை அம்மாவின் விசி விசிப்பான அழுகையைத் தவிர, கூடத்தில் எதுவும் கேட்கவில்லை. மன்னி எங்கேயோ பார்த்துக்கொண்டு நின்றாள். அவள் அப்பொழுது அழகாயிருந்தாள், சந்துருவிடமிருந்து வார்த்தைகள் கிளம்பியபோது அவை அமைதியாகவும் சாதாரணமாயுந்தான் இருந்தன.

"கௌரி, நாளைக் காலை உன் அப்பாவுக்குச் சொல்லியனுப்புகிறேன். நீ போய்விடு."

துர்ச்சொப்பனம் போன்ற அந்த இரவை என்றும் மறக்க முடியாது. சொக்கட்டானில், காயை நகர்த்தினாற்போல் அவரவர், தம் தம் இடத்தில் நின்றபடி கழிந்த அந்த இரவை மறக்க முடியாது. இப்பொழுதுகூட அது ஏதோ திகிலை உண்டாக்குகிறது.

அவளைக் கூட்டிக்கொண்டு போக வந்தவர்களும் அவளுக்குப் புத்தி சொல்லவில்லை. ஏன், என்ன என்று கேட்கும் மரியாதைகூட இல்லை. அவளுக்கு மூன்று தலைமுறைக்குச் சாதம்போட எங்கள் வீட்டில் இருக்கிறது என்று சவால் கூறிவிட்டு, அவள் தகப்பன் அவளைக் கையைப் பிடித்து இழுத்துக்கொண்டு போய்விட்டான்.

வீட்டுக்கு வந்து குடித்தனம் பண்ணி இன்னும் பத்து மாதங்கள் முழுக்க ஆகவில்லை. கௌரி போய்விட்டாள். அப்படி அவள் போகும்போது மூன்று மாதங்களாக ஸ்நானம் பண்ணவில்லை அவள் வீட்டைவிட்டு வெளியேறின பத்து நாட்களுக்கு ஒன்றும் தெரியவில்லை. அப்புறம் ஈசல் கூட்டம் மாதிரி வதந்திகள் கிளம்ப ஆரம்பித்தன. நாளாக ஆகத் தெரிந்தவர்களுக்கும் தெரியாதவர்களுக்கும் தன்னைக் கண்டதும் ஏதோ தம்முள் ரகசியம் பேசிக்கொள்வதும் தோளை இடித்துக்கொள்வதும், தான் அவர்களைப் பர்க்கவில்லை என்று நினைத்துக்கொண்ட போதெல்லாம் தன்னைச் சுட்டிக்காண்பிப்பதும் ஜானுவுக்குப் புரியவில்லை; பிடிக்கவில்லை. அப்புறம் ஒரு நாள் அவளைப் பள்ளிக்கூடத் தலைமை உபாத்தியாயினி கூப்பிட்டு அனுப்பினாள்.

"என்ன ஜானு? இப்படி உட்கார். உன்னிடம் ஒன்று சொல்லவேண்டும். உன் வீட்டு விவகாரத்தில் புகுகிறேன் என்று நினைக்காதே. ஆனால் உன் மன்னி வீட்டில் இல்லையா?"

ஜானுவுக்கே ஆச்சரியம், கோபம் எல்லாம் ஒருங்கே வந்துவிட்டன.

"என் மன்னிக்கும் பள்ளிக்கூடத்துக்கும் என்ன சம்பந்தமென்று தெரியவில்லை" என்றாள்.

"கோபிக்காதே ஜானு. நீ இம்மாதிரி சொல்வாயென்று எனக்குத் தெரியும். இன்று காலை உன் மன்னியின் தாயார் இங்கு வந்திருந்தாள். உன்னைப்பற்றி என்ன என்னவோ கன்னாபின்னா என்று பேசினாள்."

"என்னைப்பற்றியா? என்ன சொன்னாள்?" ஜானுவுககுக் கண் நரம்புகள் குறுகுறுக்க ஆரம்பித்தன.

"என்ன சொன்னாள் என்று நான் சொல்லவேண்டுமா? அவள் கத்தின கத்தலும் ஆடின சதிரும் எனக்குப் பிடிக்கவில்லை. வெளியே போய்விடு என்றுகூடச் சொல்லிவிட்டேன்."

"ஓ!" என்றாள் ஜானு சற்று ஏளனமாய்.

"ஆம், அவள் வாயிலிருந்து கிளம்பிய ஆபாசத்தைக் கேட்டதும் உண்மையில் நம் வர்க்கத்தைப்பற்றியே நினைக்கக்கூட வெட்கமாகப் போய்விட்டது. ஆண்களை நாம் ஆயிரம் அவதூறு சொல்கிறோம். சமஉரிமை வேணும் என்கிறோம், ஆனால் ஆண்களுக்கு இருக்கும் பெருந்தன்மை நமக்கில்லை. ஆண்கள் தவறுகள் செய்யலாம். ஆனால் அவர்களுக்கு மனத்தில் அழுக்குக் கிடையாது. ஆபாசம் கிடையாது. ஆனால் நமக்கு அதுதான் இருக்கிறது. நமக்குப் பெருந்தன்மை கிடையாது. நம்மைப் பற்றியே நாம் தூற்றிக்கொள்ளும் ஆபாசங்களே அதற்குச் சாட்சி—"

"இந்தச் சக்கரவட்டமெல்லாம் எதற்கு? உங்களுக்கு ஏதாவது சொல்லவேண்டும் என்று இருந்தால் என் அண்ணனிடம் சொல்லுங்கள். உண்மையில் இதற்கும் எனக்கும் சம்பந்தம் இல்லை."

"வாஸ்தவந்தான். நல்லவேளையாக உன் அண்ணனை நேரிடையாகத் தெரியாவிட்டாலும் அவரைப்பற்றி நான் கேள்விப்பட்டிருக்கிறேன். ஆனால் உன் அண்ணனிடம்

சொல்லக்கூடியதும் இல்லை. உன்னிடம் சொல்லக் கூடியதும் இல்லை.'' திடீரென்று எழுந்துபோய், முதுகை அவள் பக்கம் திருப்பிக்கொண்டு நின்றாள்.

''மொத்தத்தில் எனக்கு ஒன்று படுகிறது. நான் நமக்காக நடத்தும் இந்தப் பள்ளிக்கூடத்திலேயே வரவர எனக்கு நம்பிக்கை குறைகிறது. ஏனெனில் இளவயதிலேயே நம் கதிக்கு ஆனவர்கள் மரியாதையாக அந்தக்காலத்திய வழக்கப்பிரகாரம் உடன்கட்டை ஏறிவிடுவதே நலம். உயிர் போனாலும் மானமாவது பிழைக்கும். நான் சொல்லுகிறது புரிகிறதா? இதைவிடப் புரிய வேண்டுமோ?''

''ஸிஸ்டர்—சந்துரு என் அண்ணா!'' என்று ஜானா அலறினாள்.

ஸிஸ்டர், அவளிடம் வந்து, அவள் தோள்மேல் கை வைத்தாள். அவள் கண்கள் கலங்கியிருந்தன.

''எனக்கு அது தெரியும் ஜானா! உன்னை ஜாக்கிரதைப்படுத்தவே உன்னைக் கூப்பிட்டேன். இது பொல்லாத உலகம்! சுத்த அல்பம்! மானங்கெட்ட உலகம்! உட்கார்ந்துகொள். வேணுமானால் இங்கேயே கொஞ்ச நாழிகை படுத்துக்கொள்.''

ஜானாவுக்கு மார்பு பக்பக்கென்று அடைத்தது! ''இல்லை, ஸிஸ்டர்; நான் வீட்டுக்கே போறேன்—''

''ஜானா, இதையெல்லாம் நீ சமாளித்துக்கொள்ள வேண்டும். நீ இவ்வளவு கோழையாக இருப்பாய் என்று தெரிந்திருந்தால் நான் உன்னைக் கூப்பிட்டே இருக்க மாட்டேன்.''

ஜானா, போகும் வழியெல்லாம், குழந்தைமாதிரி விக்கி விக்கி அழுதுகொண்டே போனாள். தான் பண்ணின குற்றந்தான் என்ன? சந்துருவுடன் கூடப் பிறந்ததும், தான் கைம்பெண்ணாக வீடு வந்து சேர்ந்துவிட்டதுங்

தானே? அதன் அபாண்ட விளைவை எண்ணவே முடிய வில்லை.

அம்மாவுக்கு அவள் முகத்தைப் பார்த்ததும் ஒன்றுமே புரியவில்லை.

''ஏண்டி ஜானு!''

ஜானுவுக்கு அழுகை பீரிட்டுக்கொண்டு வந்தது.

''சந்துரு, ஜானு ஏனோ அழறுடா?''

சந்துரு அறையிலிருந்து வெளிவந்தான்.

''என் அழுகிறாய்?''

ஜானு பதில் பேசாமல் அழுதுகொண் டிருந்தாள். அவளைச் சற்று நேரம் உற்றுப் பார்த்துக்கொண் டிருந்துவிட்டுச் சந்துரு வெளியே சென்றான். அவன் திரும்பி எப்போது வந்தான் என்பது அவளுக்குத் தெரியாது. குப்புறப் படுத்துக் கைகளிடை முகத்தைப் புதைத்துக்கொண் டிருந்தாள்.

''ஜானு, நீ எனக்கு ஒன்றும் சொல்ல வேண்டாம்!'' அவன் குரல் நடுங்கிற்று. ''நான் உன் பள்ளிக்கூடத்துக்குப் போய் வாத்தியாரம்மாளைக் கண்டு வருகிறேன். நான் எல்லாம் தெரிந்துகொண்டு விட்டேன். எனக்கு வாய்த்தவள் பதர். இது நமக்கு நேர்ந்திருக்க வேண்டாம். ஆனால் நேர்ந்தது நேர்ந்துவிட்டபின், நேர்ந்ததை அநுபவித்துத்தானே தீரவேண்டும். ஒன்று மாத்திரம் உனக்கு ஞாபகப்படுத்துகிறேன். நம் வீட்டு மாப்பிள்ளை இறந்தபொழுது, உன் தலையை என் மடியில் வைத்துக்கொண்டு, ''ஜானு, நீ இனி என் தம்பி. எனக்கு நீ; உனக்கு நான்!' என்று சொன்னேனே! உனக்கு நினைவு இருக்கிறதா? எனக்கு இப்பவும் எப்பவும் அப்படித்தான்.''

ஜானுவுக்கு அழுகை புதிதாக மழைபோல வந்தது.

* * *

ஜானுவுக்கு ஏதோ தனக்குள் 'லொட்'டென்று ஓட்டை விழுந்துவிட்ட மாதிரி ஓர் உணர்ச்சி! இடி விழுந்து, பள்ளம் ஆகிறமாதிரி தன் வாழ்க்கைதான் வீணாயிற்று என்றால் அண்ணா வாழ்க்கையும் இப்படிப் போக வேண்டுமா! அம்மாவுக்கு இந்த வயசில் அநுபவிக்க வேண்டியது இன்னும் எவ்வளவு பாக்கி? குடும்ப மானம் ஏன் திடீரென்று அவிழ்ந்த பொட்டலம் மாதிரி ஆகி விட்டது?

"ஏண்டி ஜானு, உன் மன்னியை வாழவிடவில்லை யாமே! கிழவிகூட நல்லவளாம்! நீதான் தடங்கலாக நிக்கறையாம்!"

"என் காதுலே எதுவும் போடாதேங்கோ, மாமி!"

"உன் மன்னியை இன்னிக்கு நான் சினிமாவிலே பார்த் தேன். அடையாளமே தெரியல்லே. எங்கேருந்து திடீர்னு கோண வகிடு வந்தது! அவள் ரிப்பன் என்ன! உள் பாவாடை தெரிய ஜார்ஜெட் ஸாரி! மாரிலே ப்ரூச்சு! கையிலே கடிகாரம்! இப்போ என்ன அவளுக்கு மாசமா? கூட அவள் அம்மாவும் வந்திருந்தா. ஏதேதோ பேசினோம். 'புகுந்த இடத்துலேதான் என் பொண்ணுக்குச் சுக மில்லே. வயிறும் பிள்ளையுமா இருக்கா. இருக்காளோ போயிடறாளோ! அவள் ஆசைப்பட்டபடி இருக்கட்டும்னு இருக்கேன்' என்றாள்.

'என்னடி கௌரி, சௌக்கியமா? எப்போ போப் போறே? வளைகாப்பு சீமந்தம் எல்லாம் இன்னும் இருக்கே!" என்று ஜாடையாகக் கேட்டேன். அது ஸ்டைலா, பின்னல் ரிப்பனைச் சீண்டிண்டு, அசட்டுச் சிரிப்புச் சிரிச்சுண்டு, கம்முனு இருக்கு. எனக்கு அப்பவே தெரியும். நம்ம மாதிரி குடும்பத்துக்கும் அவா

ஸ்டைலுக்கும் சரிப்படாதுன்னு. என்னை ஒரு வார்த்தை கலந்திருந்தால் அப்பவே தடுத்திருப்பேன்.''

''போங்க மாமி; தயவு செய்து போங்கோ!''

ஜானு இரு காதுகளையும் பொத்திக்கொண்டாள்.

''என்னவோ அம்மா, விஷக்கடி வேளை, உங்களையும் எனக்குத் தெரியும், அவாளும் கெட்டவாள் இல்லை. இந்தக் காலத்துலே வீட்டுக்கு வரதெல்லாம் குதிரைகளாய்த்தான் வரதுகள். அதுகளை விட்டுத்தான் பிடிக்கவேண்டும்.''

''சரி, போரும் மாமி.''

ஆனால் இந்த மாமி சொல்ல வந்ததை முடித்துக் கொண்டுதான் விடுவாள்.

''இப்பவும் ஒண்ணும் குடிமுழுகிப் போய்விடவில்லை. நீ எங்கேயாவது ஹாஸ்டல்லே போய்ச் சேர்ந்துடேன். உனக்கு ஏன் இந்தப் பொல்லாப்பு?''

''யார் இவள்?''

பின்னால் குரல் கேட்டு எல்லோரும் திடுக்கிட்டுத் திரும்பினார்கள். பின்னால் கைகளைக் கட்டிக்கொண்டு உயரமாகச் சந்துரு நின்றுகொண் டிருந்தான்.

''என்னடப்பா, நான்தான்—''

''நீங்கள் யாராயிருந்தாலும் சரி, வாசற்படியை விட்டுக் கீழே இறங்குங்கள்.''

''ஆ? ம்-ம்-ம்?''

''நான் இழுத்துக்கொண்டு போய் உங்களை வெளியில் விடவா? மரியாதையாக நீங்களே போய்விடுகிறீர்களா? இனி இந்த வாசற்படியில் உங்களை நான் காணக் கூடாது.''

கதவைத் தாழ்ப்பாள் இட்டுக்கொண்டு, சந்துரு கூடத்துக்கு வந்தான்.

"உங்களுக்கு ஒன்று சொல்கிறேன். ஊர் வம்பைக் கேட்டுக்கொண் டிருந்தால் இன்னும் இந்த வீடு உருப் படாமல் போய்விடும்."

"நாங்களாகப் போய் அழைக்கிறோமா? நம்மைத் தேடிண்டின்னுடா வரது!"

"இது நம் கஷ்டத்தைத் தீர்த்துவைக்கப் போவ தில்லை. இதனால் நம் பலத்தைக் குறைக்கத்தான் முடியும். ஆகையால் அது தெருவோடு போனாலும் சரி, வாசற்படி ஏறி வந்தாலும் சரி, அதைச் சட்டை செய்யாமல் நம் காரி யத்தைக் கவனிக்க வேண்டியதுதான்."

"நம் காரியந்தான் என்ன?"

அவன் முழுப் பார்வையும் அவர்கள் இருவரையும் அணைத்தது.

"இப்போதைக்கு, காத்திருப்பதுதான்."

"எதுக்கு?"

"அது புரியும் வரையில்."

அம்மாவுக்கு அலுப்பு வந்துவிட்டது.

"இந்தப் புதிரெல்லாம் யாருக்குப் புரியறது? இம் மாதிரி இன்னும் எத்தனை நாள்? நம்ம சொத்து அது. போய்க் கரகரவென்று இழுத்துண்டு வந்து, இந்தக் கன்னத்துலே நாலு, அந்தக் கன்னத்துலே நாலு கொடுத் தால் நல்ல மருந்தாகிவிடும்.

சந்துரு சிரிக்க முயன்றான். "அது நடக்காத காரியம் அம்மா. மானம் உள்ளவளாக இருந்தால் இதுவரைக்கும் வைத்துக்கொள்ள மாட்டாளே! நான் என்னவோ என்று நினைத்தேன். நம்பினேன். மோசம் போனேன்."

"இல்லை, காலுக்கு உதவாத செருப்பைக் கழற்றி எறிஞ்சிடு. நமக்குச் சௌகரியமா இன்னொன்று பார்த்துக்கொள்ள வேண்டியதுதான்."

"அதுவும் என் காரியம் அல்ல."

"பின் என்னதான் உன் காரியம்? இந்தக் குடும்பம், வீட்டுக்கு நேத்திக்கு வந்தவள் செய்யும் கூத்தில் குட்டிச் சுவராகப் போவதைப் பார்த்துக்கொண்டிருப்பதுதான் உன் காரியமா?

"சந்துரு, பதில் பேசவில்லை. அவன் விழித்த விழியிலேயே அம்மாவுக்கு அழுகை அடங்கிப் போயிற்று. சந்துரு தன் அறைக்குச் சென்றுவிட்டான்.

காத்திருப்பதென்றால் என்ன? சந்துரு, பின்னால் கையைக் கட்டிக்கொண்டு, நிமிர்ந்த தலையுடன், ஜன்னலண்டை மணிக்கணக்கில் அசைவற்று நின்றிருப்பான்.

மலைத் தொடர்கள் அசையாமல் நின்றுகொண்டிருக்கின்றன. அவை காத்துக்கொண்டிருக்கின்றனவா? ஐயனார் கோவிலிலோ கிராம தேவதை கோவில்களிலோ மதில்மேல், பிரம்மாண்டமான சிலைகள் கையொடிந்தும் காலொடிந்தும், தலையில் பட்சிகள் எச்சமிட்டும் தம் தீனிகளைக் கிழித்து, சதையும் ரத்தமும் சிந்த, அவைகள்மேல் வைத்துத் தின்றும், வெயிலோ. மழையோ, எதுவும் தெரிந்தோ தெரியாமலோ பொருட்படுத்தாமல், வெண்டையம்போன்ற விழிகளை எந்நேரமும் விழித்துக்கொண்டு உட்கார்ந்துகொண்டிருக்கின்றன; அவை காத்துக்கொண்டிருக்கின்றனவா? அவை காத்துக்கொண்டிருந்தால் எதற்குக் காத்துக்கொண்டிருக்கின்றன?

ஜானு, நாளுக்கு நாள் இளைத்துத் தேய்ந்தாள். நல்ல எண்ணத்துடனோ வேடிக்கைக்கோ நாலு பேர் பேசும்

பேச்சும் சொல்லும் புத்திகளும் பொறுக்கக் கூடியனவாக இல்லை.

"காயும் பூவுமாக் காய்ச்சுத் தழைக்கிற நாளிலே, உன் அண்ணனும் மன்னியும் ஏண்டி இப்படி இருக்கணும்?"

"எனக்கென்ன மாமி தெரியும்? அவளே போனுள்."

"அவள் போனதுக்கு உன்னைக் காரணமா ஏண்டி சொல்லிண்டு திரியணும்? இந்தக் காலத்துலே அண்ணுவது தங்கையாவது! அவாவா வழியை விட்டு, அவாவா ஒதுங்கி விட்றதுதான் நல்லது."

ஜானுவுக்கு எதிலும் புத்தி செல்லவில்லை. பரீக்ஷைக்குப் பணம் கட்டினதுதான் பாக்கி. பரீக்ஷைக்கு உட்கார முடியவில்லை. சப்தங்கள் இல்லாத இடத்தில் சப்தங்கள் கேட்டன. சப்தங்கள் இருக்கும் இடத்தில் காது செவிடாகி விட்டது.

வைத்தியனிடம் காண்பித்தால், "ஒன்றும் புரியவில்லையே! உறுப்புகள் கோளாறில்லாமல் ஒழுங்காய்த் தானே வேலை செய்கின்றன? ஒன்றும் புரியவில்லையே!" என்று திகைக்கிறுன். ஆனுல் இளைத்து வந்தாள்.

"ஜானு, இன்னிக்கு உன் மன்னி தாயாரைப் பார்த்தேன். ஈரத்துணியோடே அநுமார் கோவிலைச் சுத்திண்டிருந்தாள். நான் ஏதேதோ கேள்விப்படறேனே! ரகசியமாகப் பூஜைகள் எல்லாம் நடக்கிறதாம். என்னமோ சஞ்சீவி மலை கொண்டுவர அநுமார் படத்துலே, வாலிலே நாளுக்கு ஒரு பொட்டா ஒரு மண்டலம் வெச்சு, முடிச்சு, யார் வேண்டாதவாளோ, அவா மேலே ஏவிவிடறதாமே! எனக்கென்னவோ பயமாயிருக்கு! உன் அண்ணுவும் மன்னியும் எக்கேடு கெட்டுப் போருன்னு நீ ஒதுங்கிடறது தான் நல்லது."

"உஷ்! ஒண்ணுமில்லே. எனக்கு அதனுலே ஒண்ணுமில்லே. தலைவலிதான் மண்டையைப் பிளக்கிறது. இதை உன்னோடு வெச்சுக்கோ. அம்மாகிட்டே சொல்லாதே. வீணு இடிஞ்சு போயிடுவா. இத்தோடு போச்சு; மறுபடியும் வரணும்னு ரூலா என்ன?"

ஆனுல் அது மறுநாளும் வந்தது. அதற்கடுத்த நாளும் வந்தது. அடுத்த நாள், அடுத்த நாள்—விடாது ஒவ்வொரு நாளும், ஒவ்வொரு வேளையும் தவறுமல் ஐந்து மாதங்கள். இத்தனை ரத்தம் கக்கியும் அந்த உடலில் உயிர் இருந்தது அதிசயம், இன்னும் கக்குவதற்கு ரத்தம் இருந்தது, அதைவிட அதிசயம்.

சந்துரு ஆபீஸைத் துறந்துவிட்டான். ஸ்திரீகள் வார்டு ஆதலால் மாலை வேளைதான் உள்ளே வரமுடியும். மற்ற வேளைகளில் வார்டு வாசலில் காவல் கிடந்தான். இரவழிந்தது; பகலழிந்தது. வாசல்படியில் அவன் நின்றுகொண்டு, நர்ஸ்களுடைய கோபத்தையும் டாக்டர்களின் சீறலையும் உணராது, அழுக்கேறிய தன் ஆடையை உணராது, வாரக் கணக்கில் க்ஷவரம் செய்யாது, செம்பட்டை பூத்த தாடியை உணராது, குளிமறந்து, உணவு மறந்து, அவளைத் தவிர எல்லாமே மறந்து, அவளையே கவனித்துக்கொண்டு நிற்கையில் யார் கஷ்டம் அதிகம் என்று அவளுக்கே சொல்லத் தெரியவில்லை.

அன்று முதல் நாள்—ரத்தம் வந்ததெனக் கேட்டவுடன் துடித்தது தவிர, சந்துரு ஒன்றும் வாய்விட்டு அப்புறம் வேதனைப்பட்டதில்லை. அவளுடன் அதிகம் பேசினதுகூட இல்லை. மாலை வந்ததும் கட்டிலண்டை மௌனமாக, மணியடிக்கும்வரை உட்கார்ந்திருப்பான். அவளும் மார்பில் கோத்த கைகளின்மேல் தாழ்ந்த கண்களுடன் யோசனை பண்ணிக்கொண் டிருப்பாள்.

ஒரே ஒரு நாள் அவன் அவளைக் கேட்டான். ஏதாவது பேச்சுக் கொடுக்க வேண்டும் என்பதற்கோ என்னவோ?

"என்ன யோசித்துக்கொண் டிருக்கிறாய்?"

"இந்த ஜன்மம் இத்தோடு போனப்புறம் அடுத்த ஜன்மத்தில், அல்லது வேறெந்த ஜன்மத்திலும் உன்னோடு கூடப் பிறக்கக்கூடாதுன்னு. உன்னோடு பிறந்து இப்போ படற அவஸ்தை போதும்!"

அவன் கண்களில் முதல் முதலாகக் கண்ணீர் துளும்பிற்று. அதைக் கண்டதும் அவளுக்கு அழுகை வந்துவிட்டது.

"அண்ணா அண்ணா, என்னை மன்னிச்சுடு. நான் ஏன் இப்படி விஷத்தைக் கக்கறேன்னு எனக்கே தெரியல்லே."

"பரவாயில்லை. என்னை என்ன வேணுமானாலும் திட்டிக்கொள். ஆனால் உடம்பை மாத்திரம் எப்படியாவது சரிபண்ணிக் கொண்டுவிடு."

"இல்லை அண்ணா; எனக்கு ரொம்ப அலுப்பாயிருக்கு. நான் பிழைப்பேன்னு எனக்குத் தோணல்லே. எனக்குச் சாகப் போகறேனேன்று பயமாயில்லே. ஆனால் அம்மாவுக்கு இந்த வயசிலே இந்தக் கஷ்டத்தையும் வெச்சுட்டுப் போறேனே. இந்தத் துக்கத்தைத் தவிர எனக்குச் சாகப் போகிறோம் என்கிற பயமில்லே."

"உயிருடன் இருப்பது எவ்வளவு முக்கியமில்லையோ அதே மாதிரி சில சமயங்களில் சாவதும் ஒன்றும் முக்கியமில்லை." கரடி மயிரால் வளைத்த புருவங்களின் அடியில், கனிந்த தணலாய், அனல் கக்கும் கண்கள் அவளைத் துருவின.

"சாவதையும் வாழ்வதையும்விட, 'எதற்காகச் சாகிறோம், எதற்காக வாழ்கிறோம்?' என்பதுதான் முக்கியம். வாழ்க்கை வீம்பாகி விடும்பொழுது அதில் சாவுக்கும் உயிருக்கும் பிரமாத இடமில்லை. ஆகையால் நீ இப்பொழுது செத்தால் உன் சாவுக்கு நான் அழப்போவதில்லை. ஆனால் அது உன் தோல்வி என்றுதான் என்னுடைய பெரும் அழுகையாக இருக்கப்போகிறது. இன்று நீ செத்தால் ஊருக்காகச் சாகப் போகிறாய். உனக்காகவே நீ சாகவில்லை. ஊர்ச் சொல் தாங்காமல் நீ சாகப் போகிறாய். இந்த ஊருக்கு என்ன தெரியும்? உண்மைக்கும் பொய்க்கும் வித்தியாசம் அறியுமா? எச்சில் பட்ட நாக்கு ஒன்றுதான் அதற்கு உண்டு. நீ உயிருடன் இருந்தாலும் அதற்கு ஒரு வேடிக்கை தான். நீ இறந்தாலும் அதற்கு இன்னொரு வேடிக்கை. ஆகையால் அவர்களுடைய வேடிக்கைக்காக நீ சாகப்போகிறாயா என்பதைத் தீர்மானம் பண்ணிக்கொள். நாளடைவில் உபயோகத்தால் நைந்து சாகும் உடலழிவைத்தான் தடுக்க முடியாது. ஆனால் இப்பொழுது உனக்கு வந்திருக்கும் சாவை நீ சாவதோ தவிர்ப்பதோ உன் இஷ்டத்தில்தான் இருக்கிறது. ஏனெனில் இந்தச் சாவை நீ செத்தால் அது சாவில்லை. நீ உயிருக்கு இழைக்கும் துரோகம் தவிர வேறில்லை."

ஆஸ்பத்திரியில் நோயாளிகளைப் பார்க்க வந்தவர் வெளியே போவதற்காக மணியடித்தது. சந்துரு உயரமாக எழுந்து நின்றான், நெற்றிப் பொட்டில் அடையடையாக நரையோடிய மயிருக்கும் அடர்ந்த புருவத்திற்கும் க்ஷவரம் செய்ய மறந்து வளர்ந்த தாடிக்கும் அவன் ரிஷி போன்றிருந்தான். கனிவுடன் அவள்மேல் குனிந்தான்.

"ஜானு!"

"அண்ணு!" அவள் உடல் பரபரத்தது.

"நீ என் தம்பி—"

அன்றிரவு அவள் ஒரு கனவு கண்டாள். அவளை ஒரு மாடு துரத்துகிறது. தட்டி நீட்டி நிமிர்த்திய கொடிக் கம்பிபோல் வாலை உயர்த்திக்கொண்டு, நாலுகால் பாய்ச்சலில், பீப்பாய் போன்ற உடல் குலுங்க, அவளைத் துரத்துகிறது. அவள் ஓட, அவளை வெகு சீக்கிரம் நெருங்கிவிட்டது. அதன் மூச்சு, அவள் முதுகை எரித்தது.

"அம்மா! அம்மா!—"

கத்திக்கொண்டே ஓடுகிருள். கல் ஒன்று தடுக்கிக் கீழே குப்புற விழுந்துவிட்டாள். மாடு, அவள் மேலேயே வந்துகொண் டிருந்தது. வந்துவிட்டது. இனி எந்தக் கணம் கொம்புகள் முதுகில் ஏறிவிடப் போகின்றனவோ! கண்ணை இறுக மூடிக்கொண்டு விட்டாள்.

தடக் தடக் தடக் தடக் தடக்—இப்பொழுது சத்தம் நெருங்கிவருகிறது. ஆனல் மாட்டின் மிரண்ட ஓட்டத்தின் சப்தம் இப்பொழுது இல்லை. குதிரைக் குளம்புச் சப்தம் மாத்திரந்தான். கண்களைத் திறந்தாள். அவளுக்குச் சற்றுத் தூரத்தில் அது நின்றுகொண் டிருந்தது. செவ்வரி படர்ந்த கண்கள் அவளை ஊடுருவின. பிறகு அது சாவதானமாகத் திரும்பி, வாலைச் சுழற்றிக்கொண்டு பிடரி மயிர் சிலிர்க்கத் தலையை உதறிக்கொண்டு, எதிரே புதர்களிடையே சென்று, மறைந்தது.

ஜானு, கண் விழித்துக்கொண்டாள். ஜன்னலின் வழியே ஆஸ்பத்திரியின் முற்றங்களிலும் தாழ்வாரங்களிலும் ஜோவென மழை கொட்டிக்கொண் டிருந்தது. அது அவள் உள்ளேயே பிரவாகமாக இறங்கி, உடல் நரம்புகள் ஒவ்வொன்றிலும் குளிர்ந்து பாய்வதுபோல் இருந்தது.

மறுநாள் அவள் ரத்தம் வாந்தியெடுக்கவில்லை அடுத்த நாளும் இல்லை. அதற்கடுத்த நாள், அடுத்த

நாள், அன்றிலிருந்தே இல்லை. எந்த வைத்தியத்துக்கும் கட்டுப்படாது, தானாகவே வந்த வாந்தி, அதேமாதிரி தானாகவே போய்விட்டது.

ஒரு நாள் ஜானு, வீடும் திரும்பிவிட்டாள். அவள் குணமாகி வந்து சேர்ந்ததுதான் தாமதம். சந்துரு திடீரென்று ஓர் இளைப்பு இளைத்து ஒரு நரை நரைத்தான். சாய்வு நாற்காலியில் உடம்பு பஞ்சாய், கைகால் போட்டது போட்டபடி இரண்டு நாள் கிடந்தான். விபூதிப் பட்டைபோல் நெற்றியை உழுதுகொண்டு, மூன்று வரிகள் விழுந்திருந்தன.

"ஜானு, வந்தையா! அம்மாடி, உன் அம்மா வயத்துலே பாலை வார்த்தையா! நீங்கள் எல்லாம் இனிமேலாவது நல்லபடியா இருக்கணும், அம்மா! நீ பிழைச்சது புதுப் பிறப்புத்தான். உங்க வீடு ராஜ குடும்பமாயிருக்க வேண்டியது. நல்ல மரத்துலே புல்லுருவி பாஞ்சாப் போலே உங்களுக்குன்னு கஷ்டம் வாய்ச்சிருக்கு!"

நாம் உலகத்தை விட்டு ஒதுங்க முயன்றாலும் உலகம் நம்மை விடுவதில்லை.

"உன் மன்னிச் சிறுக்கி சொல்றாளாம். 'இருக்கறத்துக்குள்ளே சமத்தாய் ஆஸ்பத்திரிக்குப்போய்த் தொலைஞ்சாளே என் நாத்தனார். அப்படியே செத்துத் தொலையப் படாதோ! மறுபடியும் வந்து சேர்ந்துட்டாளா! இதுகளுக்கெல்லாம் ஏன் பகவான் உசிரை இரும்பாலே அடிச்சுப் போட்டிருக்கானோ தெரியல்லே!' என்கிறாளாம்."

"ஓ!"

அவளுடைய மன்னி வீட்டுத் தூற்றல் முன்போல் அவ்வளவு உறுத்தவில்லை. அவளுக்கே ஏதோ தான் எல்லைகளைக் கடந்து விட்டாற்போல் ஓர் உணர்ச்சி. உள்ளூற ஏதோ ஒரு வெற்றி வெறி.

"உன் மருமான் அப்படியே உன் அம்மாவை உரிச்சு வெச்சிருக்காம். கறுப்புத்தானும். உன் அண்ணு இன்னும் போய்ப் பார்க்கலையா? 'எங்கே போருர், பிள்ளைப் பாசம் இழுத்தால் தானு ஒருநாள் வரார். நானு இனிப் போகமாட்டேன்' என்று சொல்லிண்டு திரியருளாம். இதென்ன பொண்ணோ!"

மறுபடியும் நாட்கள் பழைய நாட்கள்தாம். வேலைகளும் பழைய வேலைகள்தாம். ஆட்டம் முடிந்து, கூட்டம் கலைந்து, வெறும் நாற்காலிகளும் மேடைகளும் மாத்திரம் நிற்கும் கொட்டகை போன்ற வெறிச்சிட்ட நாட்கள். கலகலப்பாயிருக்க முயன்ருலும், பேச்சில், அதற்குச் சம்பந்தமற்ற எண்ணங்கள் எதிரொலித்துக்கொண்டிருக்கும் நாட்கள். வாய்தான் பேசிச் சிரித்துச் சீறித் தணிந்து, மறுபடியும் சிரித்தது. மௌனமும் ஆழமும் நிறைந்த கண்களுடன் சந்துரு, மெதுவாக மாடிப்படி ஏறுகையிலோ இறங்குகையிலோ வளைய வருகையிலோ வீட்டில் வாழும் பாம்பு நடமாடுவதுபோல் இருந்தது. சத்தியத்துக்குக் கட்டுப்பட்டு அது யாரையும் கடிக்காது; அதன் வழிக்கும் யாரும் போக முடியாது. எந்தப் புதையலை அவன் அப்படிக் காத்தானே?

சில சமயங்களில் கூடத்தில் மாட்டியிருக்கும் சுவாமி படங்களைப் பார்த்துக்கொண்டு நிற்பான். அவைகளில் கிருஷ்ணன் படம் ஒன்று. பாலகிருஷ்ணன் குஞ்சம் கட்டிய புல்லாங்குழலை அக்குளில் இடுக்கிக்கொண்டு, படபடவெனச் சிறகுகளை அடித்துக்கொண்டு, தன்னிடமிருந்து தப்ப முயலும் ஒரு பச்சைக்கிளியை இரு கைகளாலும் கெட்டியாகப் பிடித்துக்கொண்டு தலையை ஒரு பக்கமாகச் சாய்த்துக்கொண்டு சந்துருவைப் பார்த்துச் சிரிக்கிருன். சந்துரு செவிகளைப் பொத்திக்கொள்வான்.

"ஏண்டி, மருமான் முழிமுழியாகப் பேசருனுமே! நான் கேள்விப்பட்டேன். உன் மன்னிக்குப் புதுசா ஒரு தங்கை பிறந்திருக்காம். அதுலேருந்து என்னமோ அவாத்துலே கசமுசப்பாக இருக்காம். என்னமோ உன் மன்னி அவ அம்மாவைக் கேட்டாளாம். 'எனக்குத்தான் புத்தியில்லேன்னு என்னைக் கூட்டிண்டு வந்துட்டேளே! 'எங்கேடி போறான்; பிள்ளைப் பாசம் இழுத்தால் தானு வரான்'னு, என்னை அடக்கி அடக்கி வெச்சு. அவரும் வரல்லே. என் வாழ்க்கையையும் பாழ் பண்ணிவிட்டேள்!' என்றாளாம். 'நாங்கள் கூப்பிட்டோம்னு நீ ஏண்டி வந்தே!' என்று அவ ஏசினுளாம். அப்படி இப்படி வார்த்தை முத்தி, அவள் அம்மா பெண்ணை ஓர் அடிகூட அடிச்சுட்டாளாம். இந்தப் புத்தி அன்னிக்கே வந்திருந்தா இதெல்லாம் வேண்டாமோன்னோ?"

அப்புறம் ஒருநாள் கோகுலாஷ்டமி தினம். குனிந்து கொண்டே, வாசற்படியிலிருந்து இழை கோலத்தில் சிற்றடிகளைப் போட்டுக்கொண்டே நடைதாண்டிக் கூடத்துள் வந்துகொண்டிருக்கையில் திடீரென்று வெறும் பால் சதையில் அப்பம்போல் இரு குழந்தைப் பாதங்கள் அவள் வரையும் சிற்றடிகளுடன் ஒன்றினுற்போல் இருந்தன. கதவோரத்தில் பதுங்கிக் காத்திருந்த மிருகம்போல்), தாய்மை உணர்ச்சி, அவள்மேல் பாய்ந்து, நெஞ்சை நெருக்குகையில் ஜானு அப்படியே ரேழிக் கதவில் சாய்ந்துவிட்டாள். கண்ணீர், மாலை மாலையாகக்கன்னங்களில் வழிந்து, குளிர்ந்தது. கைக்கிண்ணத்தையில் இருந்து, இழை கோலமாவு, சொட்டுச் சொட்டெனச் சொட்டிற்று. பாதச் சங்கிலியின் சதங்கை சலசலத்தது. வெள்ளி அரைஞாண், பட்டை தீட்டிக்கொண்டு, வளைந்து வளைந்து ஓடிற்று.

ஜானுவுக்கு இப்பொழுது ஏதுவுமே தாங்க முடியவில்லை. சாவு தப்பினுலும் உடல், ஓட்டைச் சட்டிதான்.

அப்படியும் வீம்புக்கு வாழும் உயிர்தானே? அவள், தன் மருமானைப்பற்றி நினைப்பது உண்டு என்றாலும் இம்மாதிரி இதுவரை நேர்ந்ததில்லை. ஆனால் அவள் கொட்டகை மேடை அன்றிலிருந்து வெறிச்சென்று இல்லை. அதில்—இன்னும் அவள் கண்ணால் கண்டிராத—ராமதுரை ஆட ஆரம்பித்துவிட்டான். காலி நாற்காலி, சோபாக்களிடை ஜானு ஒண்டியாக உட்கார்ந்துகொண்டு பார்த்துக் கை கொட்டிச் சிரித்துக் களிக்க ஆரம்பித்துவிட்டாள். எப்படியும் இது இப்படியே இருக்க முடியாது. என்றேனும் ஒரு நாள் வருவான் அல்லவா?

அப்படி அவன் வந்த நாளும் வந்தது.

அன்று ஏதோ விடுமுறை. ரேழியில் சந்துரு, பக்கத்து வீட்டுக் குழந்தையை மடியில் வைத்து, அத்துடன் விளையாடிக்கொண் டிருந்தான்.

வாசலில் ஒரு ரிக்ஷா வந்து நின்றது.

"அண்ணா, மன்னீடா!"

அம்மா ஈரக்கையைத்தலைப்பில் துடைத்துக்கொண்டு, உள்ளிருந்து ஓடி வந்தாள். கஷ்டங்களைப் பட்டுப் பட்டு, உடல் தளர்ந்து, பெருத்துவிட்ட தாய், மலைபோல் இருந்தாள்.

கௌரி, இடுப்புக் குழந்தையைக் கீழே இறக்கிவிட்டுக் கைகளைப் பிசைந்துகொண்டு நின்றாள்.

"என்னை மன்னிச்சுடுங்கோ!"

சந்துருவின் முகம், சுவர்ப்பக்கம் திரும்பியிருந்தது. இன்னும் அவன், தன் மனைவியைப் பார்க்கவில்லை. அவன் குரல் கணீரென்றது.

"ஜானு, இவளை முன்னால் பச்சை ஜலத்தை தலைக்கு ஊற்றி, ஸ்நானம் பண்ணி வைத்து, வேறு புடைவை உடுத்து, இங்கு அழைத்துவா."

ஜானுவுக்குத் திக்கென்றது.

"இவள் பிறந்த வீட்டார் இவளுக்கு ஸ்நானபூர்வமாக இறந்துவிட வேண்டும், நான் இவளுடன் பேசும் முன்பு."

"அண்ணு, வீட்டுக்கு வந்த பெண்ணை அப்படியெல்லாம் பண்ணக்கூடாதுடா!"

"நான் சொன்னதைக் கேள்."

"சந்துரு!"

"எனக்கு எதிர் பேசாதேயுங்கள்!" சந்துரு அடிபட்ட மிருகம்போல் கத்தினன். அவன் கண்கள் கொதித்தன. "இந்த நிமிஷத்திற்காக நான் இத்தனை நாட்கள், மாதங்கள், வருஷங்கள் காத்திருந்தேன். இந்த நிமிஷத்தை என்னிடமிருந்து பிடுங்குபவரோ, இதை மாற்றப் பார்ப்பவர்களோ யாராயிருந்தாலும் சரி, அவர்களை நான் என்னுடைய சத்துருக்களாகவே பாவிக்கிறேன்!"

வறண்டுபோன உதடுகளை அவன் நாக்கால் நக்கி, ஈரப்படுத்திக்கொள்கையில் அவன் அசல் பாம்புபோலவே இருந்தான்.

ஸ்நானம் பண்ணிவிட்டு, வேறு புடைவையுடன் கௌரி, மறுபடியும் ரேழியில் வந்து நின்ருள். காலை வேளையின் சிறு குளிரில் உடல் கொஞ்சம் நடுங்கிற்று. அவள் முகத்தில் ஒன்றுமே தெரியவில்லை. அவள் முகமே ஒரு முகமூடி. ஜானுவுக்கு ஆச்சரியமாக இருந்தது. ஐந்து வருஷங்களுக்கு முன் அன்றிரவு கண்டபடிதான் இன்றும் இருந்தாள்.

'என்னை மன்னிச்சுடுங்கோ!"

அவள் வார்த்தைகளைச் சந்துரு வாங்கிக்கொண்டதாகவே தெரியவில்லை.

"பையன் சட்டை நிஜார் எல்லாவற்றையும் கழற்று."

கழற்றினுள்.

"ஜானு, என் சொக்காய் ஜோபியில் கத்தி இருக்கிறது. கொண்டு வா."

'அண்ணு! அண்ணு!" என்று ஜானு அலறினுள். சந்துரு இன்னதுதான் செய்வான் என்று என்ன சொல்ல முடியும்? அவன் எதிர்பாராத தன்மைகள் உடையவன். சந்துரு உள்ளே போய், பேனுக்கத்தியை எடுத்து வந்து, குழந்தை இடுப்புக் கயிற்றை அறுத்துக் கீழே எறிந்தான்.

"உன் வீட்டுத் துணிகளையும் கயிற்றையும் சுருட்டித் தெருவில் கொண்டுபோய் எறி."

கௌரி, எறிந்துவிட்டு வந்தாள். அவள் கண்கள் பெருகின. "என்னை மன்னிச்சிடுங்கோ!" சந்துரு கத்தியை மடக்கிக்கொண்டான்.

"நீ இந்த ஐந்து வருஷங்களாக எப்படி இருந்தாய்? என்ன பண்ணிக்கொண்டிருந்தாய் என்றெல்லாம் உன்னைக் கேட்கப்போவதில்லை. இந்த வீட்டிலும் உன்னை யாரும் கேட்கமாட்டார்கள். இது என் கட்டளை. ஆனுல் இனி இங்கே நீ இருப்பதற்கு ஒரே காரணந்தான் உண்டு. உன் வயிற்றில் பிறந்த இந்தக் குழந்தைக்கு நான் தகப்பனுயிருக்கிறேன். என்னுடைய குழந்தையைப் பெற்றவளாக நீ வாய்த்துவிட்டாய். அவ்வளவுதான். உன்னை மன்னிப்பது, அதோ கூடத்தில் அடுக்கடுக்காக மாட்டியிருக்கும் அந்தப் படங்களைக் கேட்டுக்கொள். அது என் வேலையும் இல்லை. எனக்குச் சக்தியும் இல்லை. ஏனெனில் நான் மனிதன்—" சந்துரு காதைப் பொத்திக்கொண்டு மாடிக்குப் போய்விட்டான்.

"என்னை மன்னிச்சுடுங்கோ."

ஜானு, குழந்தையை வாரி மார்புடன் அணைத்துக் கொண்டாள். "அம்மா இந்தாம்மா—உன் பேரன்!"— இப்பொழுதுந்தான் அழுகை வருகிறது.

"அம்மா, என்னை மன்னிச்சுடுங்கோ!"

"எல்லோரும் உன்னை மன்னிப்பார்கள், அம்மா! கொஞ்ச நாளைக்கு இப்படித்தான் இருக்கும். எப்படியோ, இப்பவாவது வந்தையே!"

"அக்கா, என்னை மன்னிச்சுடுங்கோ."

ஜானுவுக்குக் காது கேட்டதோ இல்லையோ? குழந்தையைக் கொஞ்சிக்கொண் டிருந்தாள். அவனை மார்போடு தழுவிக் கன்னங்களை மாறி மாறி முத்தமிடுகையில், பையன் மூச்சுத்திணறி, விசித்துக்கொண்டு, திமிறப் பார்க்கிறான். ஜானுவுக்கு அந்த ஒரு நிமிஷத்தில் எல்லாம் மறந்து போய்விட்டது.

"என்னை மன்னிச்சுடுங்கோ—"

சந்துரு உள்ளூறக் கருகிப் போய்விட்டான். எவ்வளவு முயன்றும் அவனால் மறுபடியும் புஷ்பிக்க முடியவில்லை. ராமதுரையைப் பார்க்கையில், அவன் தனக்குள் ஏதோ மறந்துபோனதை ஞாபகப்படுத்திக்கொள்வது போல், நெற்றிப் பொட்டைத் தேய்த்துக்கொண்டு நிற்பான்.

"டேய் கண்ணு! உங்கப்பாடா—உங்கப்பாகிட்டேப் போடா! அதான் உங்கப்பா!" சந்துரு வேணுமென்றே முதுகை அவன் பக்கம் திருப்பிக்கொள்வான். 'என் குழந்தைக்கு அதன் தகப்பனையே பரிசயம் செய்துவைக்கும் கட்டங்கூட வந்துவிட்டது பார்த்தையா!' என்று குமுங்கிக் குமுங்கிக் கருகிப் போனான்.

“கொட்டு மேளம், “கொட்டு மேளம்!” பயல் கழுத்தில் ஒரு தகரத்தை மாட்டி அடித்துக்கொண்டு, குஞ்சு நடை போட்டுக்கொண்டு வருவான். சந்துரு, அவனைக் கவனிக்கையில் மழைக் காலத்தில் மேகங்களைச் சூரிய கிரணம் பிளந்து, எட்டிப் பார்ப்பதுபோல் முகம் சற்று இளகி, அதன்வரிகளும் சுருக்கங்களுங்கூடச் சில மறைந்து இளமைஅடைந்தாற்போல் தோன்றும். ஆனால் மறுபடியும் மூட்டம் அடைந்துவிடும். குழந்தை திகைத்து நிற்பான். அந்தக் கண்ணராவியைக் கண்கூடாய் ஜானு பார்த்துவிட்டு, அவளுக்குப் பொறுக்கவில்லை. குழந்தையை அப்படியே வாரிக்கொண்டாள்.

“அடே! குழந்தை உன்னை என்னடா பண்ணித்து? அதை ஏண்டா வெறுக்கறே? அவன் உன் குழந்தை தாண்டா!” சந்துரு அசதியுடன் தலையை அசைத்தான்.

“இல்லை. அவனை என் குழந்தை என்று நான் நினைத்துக்கொள்ளும்படி அவன் வைக்கவில்லை. அது பிறக்கும் முன்னரே அவள் அதைத் தன் குழந்தை யாக்கிக் கொண்டுவிட்டாள். எங்கள் இருவர் குழந்தை; அதனால் அது நம் குழந்தை என்று எண்ணுவதற்கே இடம் வைக்கவில்லை. எங்கள் குழந்தையா யிருந்தால்தானே அது என் குழந்தையாகும்? இனி அதற்கே வழி தோன்றுமா? நான் நினைக்கவில்லை. ஒருவேளை நானும் அவனும் தோழர்களாவோம்; ஆனால் அப்பனும் பிள்ளையும் ஆவோமோ? இல்லை. என்னுள் அம்மாதிரி உணர்ச்சிக்கு ஆதாரமான ஏதோ எரிந்துவிட்டது. இனி நான் என்ன செய்வேன்!”

வாழ்க்கை, வதங்கிப்போவது ஆச்சரியமல்ல. ஆனால் வதங்கிப்போன நினைவு மாத்திரம் வாடாமல் வாசமும் இல்லாது இருக்கும் நிலைதான் பயங்கரம்.

"எனக்கென்று இப்பொழுது ஒன்றும் இல்லை. இது வரை என் வீம்பு இருந்தது. இப்பொழுது நான் அதனுடைய தாய்விட்டேன்."

"என்னை மன்னிச்சுடுங்கோ!"

இத்தனை மதில்கள் எழும்பிய இடத்தில் தொங்குவதற்கு இடந் தேடி அலையும் வௌவால் போன்று, 'மன்னிச்சுடுங்கோ மன்னிச்சுடுங்கோ' என்ற வார்த்தை ஒலியும் உணர்வும் சதா நீந்திக்கொண் டிருக்கும் சூழ்நிலையில் ராமதுரை, குழந்தை என்ன செய்வான்! ஜானு இல்லா விடில் அவனும் பாழாயிருப்பான். இந்த வீட்டில் ஏதோ நேரக்கூடாதது நேர்ந்துவிட்டதென மூங்கையாய்ப் புரிகிறது. நாளாக ஆக அரைகுறையாகக் கொஞ்சங் கொஞ்சமாக விவரங்கள் புரிந்துகொண்ட பிறகு, அவன் அத்தையுடனேயே ஒட்டிவிட்டான். சில சமயங்களில் அவளையே அம்மாவென்று கூப்பிட்டுப் பார்த்துக் கொள்வான்.

சந்துருவும் கௌரியும் ராமதுரையைப் பெற்று, அவளிடம் கொடுத்தாற்போல்தான் ஆகிவிட்டது. தான் வளர்த்த பிள்ளையின் மூலம், ஜானு, தன் நிறைவு பெற்ருள். இதோ வருஷங்களும் ஓடிவிட்டன. ராமதுரைக்குக் கல்யாணமும் நடக்கிறது. ஜானுவின் இஷ்டம் அப்படித் தான். மருமான் கல்யாணத்தைச் சுருக்கப் பார்த்துவிட வேண்டுமென்னும் அவா. எப்படியும் ஓட்டைச் சட்டியாகிவிட்டதால், ராமதுரை வீட்டுக்கு வந்துவிட்ட பிறகு, உடல் நலிய ஆரம்பித்துவிட்டது. ஆனல் அந்தப் பழைய பயங்கரத்துடன் அல்ல. கொஞ்சங் கொஞ்சமாக நைந்து, ஒடுங்க ஆரம்பித்தது.

கொட்டு மேளம் கொட்டுகிறது. இது எதற்கு? ராமதுரைக்கு மாத்திரமா? சந்துருவுக்குந்தான். தனக்

குந்தான். ஏதோ இன்னும் தனக்குப் புரியாத முறையில், தன் மன்னிக்குந்தான். எல்லோருக்கும் இன்று ஒரு புதுக் கல்யாணம் நடந்துகொண் டிருக்கிறது; வீம்பின் நித்திய கல்யாணம்.

"கொட்டு கொட்டு, நன்றாய்க் கொட்டு......"

"கெட்டி மேளம் கெட்டி மேளம்! மாங்கல்ய தாரணம் நடக்கிறது; கெட்டி மேளம்!"

தம்பதி சகிதமாக ராமதுரை, அத்தையை நமஸ்கரிக்க அறைக்குள் நுழைந்தபோது, ஜானுவின் கண்கள் விழித் தது விழித்தபடிதான் இருந்தன. அவள் முகத்தில் அன்பும் இன்பமும் அமைதியும் நிறைந்த புன்னகை உறைந்து போயிருந்தது. தீராத் தாகம் தீர்ந்த முகத்தில் தான், அந்தப் பாவத்தைக் காண முடியும்.

பின்னாலேயே சந்துரு வந்து நின்றான். அவன் பின் னால் கௌரி.

"அக்கா. என்னை மன்னிச்சுடுங்கோ......!"

ஜானுவுக்கு அது கேட்டதோ இல்லையோ ? ஜானு தன் சுனை போய்ச் சேர்ந்துவிட்டாள்.

# கொட்டு மேளம்

## தி. ஜானகிராமன்

டாக்டர் வரும்போது ஒன்பதுமணிக்குமேல் ஆகிவிட்டது, கம்பவுண்டரின் முகத்தைப் பார்த்தார்.

"கல்யாணம் பண்ணிக்கப் போறவன் கடைக்குப் போனு, நேரந்தான் ஆவுது" என்ருர் "என்ன தபாலா, மேஜைமேலே?" என்று கேட்டார்.

"ஆமாம், இன்னிக்கு மெயில் நானூறு நிமிஷம் லேட்டாம்."

"நல்ல வேளை! நானூறு வருஷம்னு சொல்லாம இருந்தியே...அட! கர்னல் சுந்தர தாண்டவனு!...ஏய் பாத்தியாடா பத்திரிகையை? கர்னல் சுந்தரதாண்டவன் அனுப்பிச்சிருக்காரு. இவர் யார் தெரியுமா? எங்க அண்ணிக்கு அத்தை மகன். என்னைவிட ஒருவருஷம் சின்னவரு, மகளுக்குக் கல்யாணம் பண்ருராம். மருமவனும் லேசுப்பட்டவர் இல்லே; சப் கலெக்டர்; நீயும் நானும் இருக்கமே, அம்பது ரூபா சம்பளத்துக்கு நீ எங்கிட்டச் சேவகம் பண்ணுறே. நான் ஜெனரல் ஆஸ்பத்திரியும் இருபத்துமூணு டாக்டரும் இருக்கிற இந்த ஊரிலே இருநூறு ரூபாய்க்கு மோளம் அடிக்கிறேன். இவனைப் பார்த்தியா? கர்னல் ஆயிட்டான்...நீ ஏண்டா நிக்கறே? என் பேச்சைக் கேட்டுக்கிட்டு நின்னு, வயிறு ரொம்பிடுமா? போயிட்டு வா."

புன் சிரிப்புச் சிரித்துக்கொண்டே ஜீவரத்தினம் போய்விட்டான்.

டாக்டர் உட்கார்ந்துவிட்டார். அவருடைய உற்சாகத்தில் பனி படர்ந்துவிட்டது. வரிசை வரிசையாக வந்த தோல்விகளின் ஏக்கம் அவரை அழுத்திற்று. அவரோடு படித்தவர்கள் அவரைப்போலச் சாண் ஏறி முழம் சறுக்காமல் முழம் முழமாக ஏறிவிட்டார்கள். அவரைச் சறுக்கிவிட்டது எது என்று புரியவில்லை. சகபாடிகளின் முகங்களும் மலர்ச்சிகளும் அதிகாரமும் மோட்டர்களும் அவர் கண்முள் ஊர்ந்துகொண் டிருந்தன.

"என்ன டாக்டர் சார், திரும்பியே பாக்கமாட்டேங்க போல் இருக்கே."

"அட, பார்வதியா! நீ எப்ப வந்தே?"

"நான் வந்து ரெண்டு நிமிஷமாச்சு. நீங்க திரும்பிப் பாக்கற வழியாயில்லே. கூப்பிட்டு விட்டேன்?"

"ஒண்ணும் இல்லே. என்னமோ யோசிச்சுக்கிட்டே இருந்தேன்."

டாக்டர் முகம் சுண்டிக் கிடந்தது.

"முன்னுக்கு வரது எப்பன்னு யோசிச்சுக்கிட்டிருந்தேன்" என்று விளக்கினுர்.

"வழி கிடைச்சுதா?"

"இன்னும் கிடைக்கவில்லை."

கொட்டு மேளச் சத்தம் கேட்டது. வெறும் மேளச் சத்தம் அல்ல. நாயனக்காரன் என்ன வாசிக்கிருன் என்று புரியவில்லை, டடிம் டகு டகு, டடிம் டகு டகு என்று ஒரே சொல்லைத் திருப்பித் திருப்பி நாலைந்து தவுல்காரர்கள் சேர்ந்து அடித்துப் பிளந்துகொண்டு வந்தார்

கள். தெருக் கோடியிலிருந்து டாக்டர் வீட்டு வாசலை நோக்கி நகர்ந்துகொண் டிருந்தது சத்தம்.

டாக்டர் வீடு நல்ல 'ஷகரில்' இருந்தது. தெருவின் மேலக்கோடி வீடு அது. வாசற்படி இறங்கி, இரண்டடி மேற்கே நடந்தால் ராஜ வீதி, தெருவைப் பார்த்துக் கொண்டு வைகுண்ட நாதர் கோயில் கொண்டிருந்தார். பெருமாள் கொஞ்சம் பெரிய புள்ளி. முந்நூறு வேலி நிலம், மூன்று நான்கு லக்ஷத்திற்கு நகைகள், இரண்டு பெரிய பிராகாரங்கள், வெள்ளி வாகனங்கள், தங்கத்தில் கருடவாகனம்—இவ்வளவு சம்பிரமங்களும் உண்டு. ஆறு கால பூஜை அவருக்கு நடந்ததில் ஆச்சரியம் இல்லை. நாக ஸ்வர வித்தைக்கே பிரமாணமாக விளங்கின கிருஷ்ணன், கோயில் மேளக்காரன். ஆறுகால பூஜைக்கும் அவன்தான் சேவகம் செய்வான். நாத வெள்ளமாகப் பொழிவான். பொழுது புலருவதற்கு முன்னால் அவன் வாசிக்கிற பௌளி ராகத்தையும் மலய மாருதத்தையும் கேட்டுக் கொண்டுதான் டாக்டர் படுக்கையை விட்டு எழுந்திருக்க வேண்டும். மறுபடியும் ஒன்பது மணி பூஜை, உச்சிக் காலம், மாலை, இரண்டாம் காலம், அர்த்த ஜாமம்—எல்லா வேளைகளிலும் காலநியதியை ஒட்டி ராகங்களில் சஞ்சரித் துக்கொண் டிருப்பான். கல்யாண மண்டபத்தின் எதி ரொலியில் அந்தச்சங்கீதம் விம்மி வளர்ந்து, ஆகாய வெளி யெல்லாம் முழங்கும். மாலை வேளையில் கோயில் நகராக் காரன், மான்யத்திற்கு வஞ்சனை பண்ணிவிடாமல் அரை மணி நேரம் கொத்துவைத்து, ஊரையே கிடுகிடுக்க அடித்து விடுவான்.

டாக்டர் இருக்கிற தெரு ராஜவீதி நான்கிற்கும் மைய மானது. மேல வீதியையும் கீழ வீதியையும் இணைக்கும் வீதி அது. கல்யாண ஊர்வலங்கள் நாலு வீதியும் சுற்றக் கூடாது என்று ஒரு கட்டுப்பாடு இருந்தது. நாலு வீதி

ஊர்வலம் வைகுண்டநாதருடைய தனி உரிமை. மனிதன், மனிதன்தான் என்று இடித்துக் காட்டுவதற்காக, கல்யாண ஊர்வலங்கள் நாலு வீதியையும் சுற்ருமல் டாக்டர் இருக்கிற மைய வீதிவழியாகப் போகவேண்டும் என்று வரையறை செய்து வைத்திருந்தார்கள். ஆக, நாலு வீதியில் எந்த முடுக்கில் கல்யாணம் நடந்தாலும், அந்த ஊர்வலங்கள் டாக்டர் வீட்டு வாசலை மிதித்துத்தான் ஆகவேண்டும். ஊர் பெரிய ஊர். வருஷத்திற்கு ஐம்பது கல்யாணம் என்பது குறைந்த கணக்கு.

டாக்டருக்குக் கொட்டுமேளம் மூச்சுக் காற்ருக மாறிவிட்டது. நாதக்கடலில் அவருடைய உள்ளம் ஆறு காலமும் முழுகிக் கிடந்தது. மற்ற வேளைகளில் நாதவெள்ளம் இல்லாவிட்டாலும் கொட்டு மேளமாவது அவர் காதை அறைந்துகொண் டிருக்கும். அவர் காது காய்ச்சுப் போய் விட்டது. கொட்டு மேளம் இல்லாவிட்டால் அவருக்கு வேலை ஓடுவதுகூடச் சந்தேகந்தான்;

திடீரென்று அந்தத் தவுல் சத்தத்துக்கிடையே "ஜே ஜே!" என்று கோஷம் எழுந்தது. டாக்டர் அசைந்து கொடுத்தார்.

"பார்வதி? அது என்ன சத்தம்? வேல் வேலா, ஜே ஜேயா?"

பார்வதி உற்றுக் கேட்டாள். இரண்டுபேரும் மூச்சை அடக்கி மனத்தைச் செலுத்திஞர்கள். புரியவில்லை.

"யாருக்கு ஜயகோஷம்? முருகனுக்கா, மனுஷனுக்கா?"

"இன்னிக்கிக் கிருத்திகைகூட இல்லையே! கிருத்திகையாயிருந்தாலும் ராத்திரியா காவடி தூக்குவார்கள்?"

"ஸ்வாமி புறப்பாடோ என்னவோ?"

"அதுக்கு இத்தனை தவுல் என்னத்துக்காம்?"

"அதுவும் சரிதான்!"

"இதைக் கண்டுபிடிக்க ஒரே வழிதான் தோணுது."

"நானும் அதுதான் நெனச்சேன். வா."-இருவரும் எழுந்து வாசலுக்குப் போனார்கள்.

தெருப்பாதியில் காஸ் விளக்குகள் வரிசையும் கும்பலுமாக நகர்ந்து வந்துகொண் டிருந்தன. இருபது கஜத்துக்கு முன்னால், நாலு விளக்கை வைத்துக்கொண்டு, பொய்க்கால் குதிரை ஜோடி, டம் டிம் டகுடகு என்று திறுக்கட்டி ஒலித்த ஒற்றைக் கொட்டுக்கு இசைவாக ஆடிக்கொண் டிருந்தது.

"என்னப்பா சத்தம்?" என்று வாசலில் ஓர் ஆளைப் பார்த்துக் கேட்டார் டாக்டர்.

"எலக்ஸனுங்க!"

"ஆமாம், நம்ம விறகுவாடி மாரியப்பபிள்ளை ஜயிச்சுப்பிட்டாரு."

"மாரியப்பபிள்ளை ஜயிச்சுப்பிட்டாரா"'

"ஆமாங்க."

"போடு சக்கை!"

பொய்க்கால் குதிரை போனதும், கொட்டு மேளம் வாசலுக்கு வந்துவிட்டது. நாயனம் நாலு ஜோடி; தவுல் காரர்கள் எட்டுப் பேர். அதே டடிம் டகுவைப் பிளந்து கொண்டே வந்தார்கள்.

வாத்தியக்காரர்களுக்குப் பின்னால் "மாரியப்பருக்கு ஜே! மாரியப்பருக்கு ஜே!" என்று ஒரு பெரிய கூட்டம் கோஷம் போட்டுக்கொண்டு வந்தது. மாரியப்பபிள்ளை மோட்டாரில் உட்கார்ந்திருந்தார். அவர் முகத்தைப் பூ மாலைக்கிடையே தேடிக் கண்டுபிடிக்க வேண்டியிருந்தது. புஸ்த் மீசை. ஜவ்வாதுப் பொட்டு. கையைப் பார்த்தால்

ஜிப்பாதான் போட்டுக்கொண் டிருப்பார்போல் இருந்தது. டாக்டரைப் பார்த்து, ஒரு கும்பிடு போட்டார் மாரியப்பர். டாக்டர் அதைவிடப் பெரிய கும்பிடாகப் போட்டபோது இரண்டுகை நீளம் கிண்டலும் அதிலும் இருந்ததை மாரி யப்பர் அந்த நிலையில் கவனிக்கவில்லை.

ஊர்வலம், வந்த சுருக்கில் தேய்ந்துவிட்டது. காஸ் விளக்குகள் மறைந்ததும், இருள் சற்று அதிகமாகவே இருந்தது. அந்த இருளில் இன்னொரு கூட்டம் கூச்சல் போட்டுக் கொண்டே வந்தது.

முப்பது நாற்பது வாண்டுப் பயல்களும், சோதாக் களுமாகக் கூடிக்கொண்டு, "ஐராவதத்துக்கு ஜே! தியாகி ஐராவதத்துக்கு ஜே!" என்று கத்திக்கொண்டு வந்தார் கள். டாக்டர் வீட்டு, வாசல் விளக்கொளிக்கு முன் வந்த தும். "இருங்கடா, டாக்டர் ஐயாகிட்ட ரெண்டு வார்த்தை பேசிக்கிட்டு வரேன்" என்று பித்துக்கொளி ஐராவதம் நின்றான். கழுத்தில் ஏழெட்டு அரளிப்பூ மாலைகள். மார்பு நிறையச் சந்தனம். ஐராவதம் சிரித்தான்.

"டாக்டர் சார், கும்பிடறேன்!"

"என்ன, முதலியாரா, வாங்க."

"அரளிப்பூ மாலையையும் சந்தனத்தையும் கண்டு, என்னவோ ஏதோன்னு பயந்திடாதிங்க. விரலுக்குத் தகுந்த வீக்கம். அவ்வளவுதான்."

"ஒண்ணும் புரியல்லியே!"

"என்ன புரியலே? தியாகி ஐராவதத்துக்கு ஜேன்னு கூப்பாடு போடறுங்களேன்னு யோசிக்கிறீங்களா? ஆமாங்க டாக்டர், நான் மூளையைத் தியாகம் பண்ணி விட்டேன். மாரியப்பபிள்ளையைப் பாருங்க; என் னவோ பார்லிமென்டுக்குச் செலவு பண்றுப்போலப் பண் ணிக்கிட்டு வராரு. துக்கினியூண்டு ஊர்லே, துக்கினி

யூண்டு ஏழாவது வார்டுக்கு மெம்பர். எனக்குப் பாருங்க, செலவே இல்லாம எல்லாம் ஆயிடிச்சு. இந்த அரளிப் பூ மாலையெல்லாம் சத்தியமாத் தம்பிங்க வாங்கிப் போட்டதுதான். ஆயிரத்துத் தொளாயிரத்து இருபத்தெட்டாம் வருஷத்திலே மாரியப்பபிள்ளை கடையிலே நாலு மணு விறகு வாங்கினேன். 'மீதி மூணரையணு சில்லறை இல்லே, அப்புறம் வா, தாரேன்'னுரு. இன்னம் கொடுக்கப் போரூரு. நான் அந்தக் கோவத்துனுலே அவருக்கு எதிராக நிக்கலே. உள்ளதைச் சொல்லிப்பிடணும் பாருங்க. சரி, நாளியாச்சு, நான் வரட்டுங்களா?''

''செய்யுங்க. எலெக்ஷனனதுக்குக் காபி கீபி ஒண்ணும் கிடையாதா?''

''அது நீங்கல்ல வாங்கிக் கொடுக்கணும்?'' என்று கழுத்தை ஒடித்து நீட்டிக் கண்ணைச் சிமிட்டுவிட்டு, நகர்ந்தான் ஐராவதம்.

ஐராவதம் உண்மையாகவே பைத்தியமா என்று டாக்டருக்குச் சந்தேகம் வந்துவிட்டது.

உள்ளே வந்ததும், ''பார்வதி, அதோ அந்தப் பீரோவைத் திறந்து, அடித் தட்டிலே சிகப்பாச் சின்னதா ஒரு நோட்டு இருக்கும். அதை எடேன்'' என்று சாவியைக் கொடுத்தார்.

''பதினெட்டாவது பக்கத்தைப் புரட்டு, என்ன எழுதியிருக்கு?''

''மாரியப்பபிள்ளை—முந்நூறு ரூபாய்னு போட்டிருக்கு.''

''போட்டிருக்கறது என்ன? நான் எழுதினதுதான் அது. இந்த மாரியப்பன் என்னோட வாசிச்சவன். அஞ்சாங் கிளாஸ்மட்டும் வாசிச்சு விட்டுட்டான். நான் டாக்டர்னு போர்டு போட்டுத் தொழில் பண்ண ஆரம்பிச்சது

லேருந்து எங்கிட்டத்தான் வைத்தியம் பார்த்துக்கிட்டு வரான். ஆனு ஆச்சரியத்தைப் பாரு. காலணுக் காசு எனக்குக் கொடுக்கணும்னு அவனுக்குத் தோணினதே இல்லே.''

''ஏன் கொடுக்கலே?''

''வைகுண்டநாதரைத்தான் கேக்கணும்!''

''எலக்ஷன்லே ஏகச் செலவு பண்ணியிருக்கிருரே.''

''எனக்குக் கொடுக்கத் தோணலே. அவ்வளவுதான்.''

''நீங்க முந்நூறு ரூவா ஆகிறவரையிலே அவரைச் சும்மாவா விட்டு வச்சிருந்தீங்க!''

''இன்னமும் சும்மாத்தான் விடப்போகிறேன்.''

''எதுக்காக?''

''பார்வதி, நான் பணம் வரலேங்கிற கோபத்தினுலே சொல்லலே. மனிதன் எப்பேர்ப்பட்டவன்னு சொல்றதுக்காகத்தான் இதை எடுத்துக் காண்பிச்சேன்.''

''நீங்க கேக்கலேயா?''

''பில் ஒழுங்கா அனுப்பிக்கறேன்.''

''இப்பவும் நீங்கதானே டாக்டரு அவருக்கு?''

''இப்பவும் நான்தான்.''

''அவர் வரபோது வாயைத் திறந்து கேட்கக் கூடாதா?''

''பில் அனுப்பிச்சாச்சு. வாயை வேறே திறக்கணுமா?''

''கடன், கேக்காம போச்சுன்னு வசனம் சொல்லுவாங்க. சில ஆளுங்க, கேட்டால் ஒழியக் கொடுக்கமாட்டாங்க.''

''மாரியப்பன் கேட்டாலும் கொடுக்கப்போகிறதில்லே. சாதாரணமாக டாக்டர் என்ருல் இந்தக் காலத்திலே

மதிப்பு அதிகந்தான். எந்த உயிரையும் கூண்டைவிட்டுப் போயிடாமல் பிடித்து நிறுத்துகிறவன் டாக்டர். சாமானிய மனிதர்களுக்கு இல்லாத சக்தியெல்லாம் அவருக்கு உண்டு. ரொம்பச் சின்ன டாக்டருக்குக்கூட இந்தப் பெருமை உண்டு. அப்படிப்பட்ட ஒரு டாக்டரை முந்நூத்துச் சொச்ச ரூபாய்க்கு நாமம் சாத்தலாம் என்று மாரியப்பன் முடிவு கட்டிவிட்டான். மாரியப்பன் என்ன கருமியா! ஐராவதம் சொன்னுப்போலே, துக்கினியூண்டு ஊரிலே துக்கினியூண்டு ஏழாவது வார்டுக்குப் பார்லிமென்டுக்குச் செலவு பண்ணுப்போலப் பண்ணிவிட்டான். என்னைக் கண்டால் கொடுக்கவேண்டாம் என்று தோன்றியிருக்கிறது அவனுக்கு. அவ்வளவுதான்.''

"உங்களைக் கண்டால் மாத்திரம் அப்படித் தோணுவானேன் அவருக்கு?''

''பார்வதி, அதிருஷ்டம் என்று சொல்லுகிருர்களே; அந்த வார்த்தை பல பேருக்குப் பிடிக்கிறதில்லை. சோம்பேறிகளின் மந்திரம் என்று நினைக்கிருர்கள். சோம்பேறிகள் சொல்லிச் சொல்லி அந்த வார்த்தைக்கே கெட்ட பெயர் வந்துவிட்டது, என்னைப்போன்ற சாமான்யமான மனிதர்களுக்கு அதிருஷ்டந்தான் தேவை. அசாதாரணமான திறமையும் சக்தியும் உள்ளவர்கள் சொந்த முயற்சியால் முன்னுக்கு வந்துவிடுகிருர்கள். அப்படி இல்லாத என்னைப்போல் ஒத்தவர்களுக்கு நான் சொன்ன, அதிருஷ்டந்தான் வேண்டும், அது எனக்குக் கிடையாது. இருந்திருந்தால் அது மாரியப்பன் காதில் போய், 'எண்டா பயலே, டாக்டர் பணத்தை இன்னம் கொடுக்கலே?' என்று கட்டாயமாகக் கேட்டிருக்கும்.''

''மாரியப்பப்பிள்ளை முந்நூறு ரூபாய் கொடுக்காவிட்டால் குடி முழுகிப் போய்விடாது, உங்களுக்கு என்ன அதிருஷ்டக் குறைவு வந்துவிட்டது இப்போது?''

"இதோ பாரு, கல்யாணப் பத்திரிகை வந்திருக்கிறது."

"இது யாரு? கர்னல் சுந்தர தாண்டவனு?"

"அவன் மகளுக்குக் கல்யாணம். மருமவன் யாருன்னு பாத்தியா?"

"மருதவாணன் எம்.ஏ., ஐ.ஏ.எஸ்.; சப் கலெக்டர்."

"நீ என்ன நினைக்கிறே?"

"ரெண்டு இடமும் பெரிய இடந்தான்."

"இந்தச் சுந்தரதாண்டவன் எனக்கு ஒரு வயசு சின்னவன். நாற்பத்திரண்டு வயசாகிறது. எங்க அண்ணன்தான் அவனுக்கு மிலிடரியிலே வேலை பண்ணி வச்சாரு. அவன் புத்திக்கும் சாமர்த்தியத்துக்கும் எடை போட்டு வேலை கொடுக்கறதுன்னு ஆரம்பிச்சா-அதை நான் சொல்லுவானேன்? ரெயில் போர்ட்டர் எல்லாம் சண்டைக்கு வந்திடுவாங்க. அதாவது அவன் அப்ப இருந்த நிலையிலே சொல்றேன், இப்ப அவன் கெட்டிக்காரனு மாறியிருக்கலாம்—என்ன சிரிக்கிறே? நீயானும் சிரிக்கிறே; இந்த மாதிரி வேடிக்கையாகப் பேசறேன்னு பேசிட்டுத்தான், நான் பெருமாள் கோயில். தேர்மாதிரி, இருந்த இடத்துலேயே உட்கார்ந்துக்கிட் டிருக்கேன். இல்லாட்டி, நானும் இப்பக் கர்னலாக இருக்கவேண்டியவன்தான்."

"யாராவது ஆபீசரைப் பார்த்து ஏதாவது இந்த மாதிரி பேசினீங்க ளாக்கும்?"

"ஆபீசர் கிட்டப் பேசலே. ஆபீசர் பெண்சாதி கிட்டப் பேசினேன். பிடிச்சுது சனி. வேறே யாரும் இல்லே; என் கூடப் பிறந்த அண்ணன் பெண்ஜாதி கிட்டத்தான் பேசினேன். இந்தத் தாண்டவன் என் அண்ணிக்கு அத்தை மகன். அண்ணுரு, அப்ப, மீரத்திலெ இருந்தாரு. அண்ணி ஊருக்கு வந்திருந்தா, நான் இன்டர்

பரீக்ஷைக்குப் போயிட்டே இருந்தேன். அண்ணி ஊருக்குக் கிளம்பற அன்னிக்கி, இந்தத் தாண்டவன் வந்து சேர்ந்தான். அவனையும் கூட அளச்சிக்கிட்டு அவனை மிலிட்டரியிலே சேர்த்து விடறதாக ஏற்பாடு பண்ணியிருந்தாங்க அண்ணி. சாப்பிடறப்போ வேடிக்கையாப் பேசிக்கிட் டிருந்தேன் நான். 'மிலிடரி டிபார்ட்டுமென்டே அண்ணி ஆளாகவே போயிடும்போல் இருக்கே'ன்னு சிரிச்சுக்கிட்டே சொன்னேன். உலகத்துலே எப்பவும் அண்ணிங்களே ஒரு தனி ஜாதின்னு எனக்கு எண்ணம். கொழுந்தன் சொல்றதெல்லாம் அவுங்களுக்குத் தேனா இருக்கும். எங்க அண்ணியும் அப்படித்தான் இருப்பாங்க. ஆனா— அந்தச் சமயத்துலே அண்ணி சிரிக்கலே, மொலு மொலுன்னு அம்மாகிட்டப் போய்ப் பிடுங்கித் தின்னக் கிளம்பிட்டாங்க. 'அம்மா, நாங்க என்னம்மா பண்ணுவோம்? அவுங்க அவுங்க தலையெளுத்துப்படிதானே நடக்கும்? உங்க பெரிய புள்ளைக்குக் கத்தியும் கபடாவும் எடுத்துச் சண்டை போட்டுப் பொளைக்கணும்னு இருக்கு. எப்பிடியோ வயித்தை வளர்க்கிறோம். காக்கிச் சட்டைதான் எங்களுக்குக் குலதெய்வம், அதுதான் எங்களுக்குச் சோறு போடுது. எங்களுக்கு அது ஒண்ணும் ஈனயமா, கௌரவக் குறைச்சலாப் படலே. அவுங்க அவுங்க மனுசங்களை அவுங்க அவுங்க கவனிச்சுக்கறதும் என்ன தப்பு? அந்த வேலை ஈனயமுனு நெனச்சிக்கறவங்க, வேறே வேலைக்குப் போகட்டுமே. இந்த உலகம் எவ்வளவோ பெரிசு.'—அப்படி இப்படின்னு பொரிஞ்சு கொட்டிப்பிட்டா. நான் அப்படியே பிரமை புடிச்சாப்போலே உக்காந்துப்பிட்டேன். அப்ப, அம்மாகூட அண்ணிக்குச் சமாதானம் சொன்னாங்க. என்னையும் கண்டிச்சாங்க.

"அண்ணியை ரெயில் ஏத்தி விடும்போது மன்னிப்புக் கேட்டுக்கொண்டேன். அண்ணி முகங்கொடுத்தே

பேசலே, போய் என்ன பத்த வச்சாங்களோ? அண்ணன் ஆறு மாசம் காயிதமே போடலே. அப்பறமும் ஒரு வருசம் காத்துக்கிட் டிருந்தேன். சரி, காக்கிச் சட்டைக்கு நாம் கொடுத்து வைக்கலேன்னு டாக்டருக்குப் படிச்சேன். கர்னல் அதிருஷ்டம் மலே ஏறிடிச்சு,''

''அதிருஷ்டம் என்ன செய்யும்? நீங்க கொஞ்சம் ஜாக்கிரதையாப் பேசியிருக்கணும்.''

''அந்த ஜாக்கிரதையைத்தான் நான் அதிருஷ்டம்னு சொல்றேன்.''

''சண்டை நடக்கிறபோது டாக்டரெல்லாம் போனுங் களே,''

''அதுவா? சண்டைக்கு முந்தியே எனக்குக் காக்கிச் சட்டை கசந்துபோச்சு, ஒரு தடவை இந்தியா முழுக்கச் சுத்தினேன். புனுப்பக்கம் போனேன். என் சிநேகிதன் ஒருத்தன் லெப்டினன்டா இருந்தான். ஒரு சிறு பையனைச் சிப்பாய் ஆஸ்பத்திரியிலே வேலேக்கு வச்சிருந்தான். அந்தப் பையன் திடீர்னு ஒரு நாளேக்கு அழுதுகொண்டு வந்தான். நானும் சிநேகிதனும் பேசிக்கிட் டிருந்தோம். இந்தப் பையன் வேஷ்டி கட்டிக்கிட்டு, அவன் ஆபீசர் -ஒரு மேஜர் - அவன் முன்னுலே போய் நின்னுனும். 'என் னப்பா, கௌபீனம் கட்டிக்கிட்டு வரதுதானே! மரியாதை கெட்டவனே! ஆபீசருக்கு முன்னுடி வர டிரஸ்ஸாடா இது!'ன்னு கேட்டானும் அந்த மேஜர். பையன் சுடச் சுடப் பதில் கொடுத்திருக்கான். 'மேஜர் ஐயா, நம்ம தேசத்துலே கௌபீனங் கட்டிக்கிட்டு அலேயறவங்க ளுக்கு மதிப்பு அதிகம். அந்த மதிப்புக்கூட இந்த வேட் டிக்குக் கொடுக்க மாட்டேங்கறீங்களே!'ன்னு சொல்லி யிருக்கான் பையன். 'வாயை மூடடா! பிச்சைக்காரப் பயலே!'ன்னு கத்தினுன் ஆபீசர்.

'ஒரு ஆபீசர் வாயிலிருந்து வர வார்த்தையா இது?'ன்னு பையன் கேட்டிருக்கான். உடனே அந்த ஆபீசர் எழுந்து' பளார் பளார்னு இரண்டு கையாலேயும் மாறி மாறி அந்தப் பையனைக் கன்னத்துலே இழுத்துப்பிட்டான், பையன் அழுதுகொண்டே ஓடி வந்துவிட்டான். அதற்கு என் சிநேகிதன் என்ன சொன்னுன் தெரியுமா? 'போடா போக்கத்த கழுதை! அவன் சொன்னுனும். இவன் எதிர்த்துப் பேசினுனும். மேலே இருக்கறவங்க சொன்னு என்னடா குடிமுழுகிப் போச்சு! உனக்கு வேலை பண்ணி வச்சதுக்கு நல்ல கைம்மாறுடா! ஏண்டாலே! எதிர்த்துப் பேசினயே, உனக்கு வேலைக்குச் சிபார்சு பண்ணினேனே நான்; என்னைப்பத்தி அவன் என்ன நினைச்சுப்பான்னு யோசிச்சியாடா? பிச்சைகாரப் பயலே!'ன்னு ஒரு மணி நேரம் குலைச்சுத் தள்ளிப்பிட்டான்.

"புழுத்த நாய் குறுக்கே போகாது, அந்த மாதிரி வசவுகள்! நான் அப்படியே அதிர்ந்து போயிட்டேன். பையனும் இடிந்துபோய் நின்ருன். என் நண்பன் எப்படி இவ்வளவு மூர்க்கனுனுன்? ராணுவத்து வெள்ளைக்காரன் சகவாசமா? அப்புறம் அந்தப் பையன் தனியாக என்னிடம் வந்தான். 'ஸார், உங்க சிநேகிதர்தான் வேலை பண்ணி வச்சாரு. ஊர்லே இவருதானே எனக்கு எல்லாம்? இவர்கூட இப்படிப் பேசிப்பிட்டாரு பாத்தீங்களா? நான் சின்னப் பையன்தான். ஆனு எனக்கும் சின்னதா ஒரு நெஞ்சு, சின்னதா ஒரு சுயமரியாதை எல்லாம் இருக்குதால்லியா?' என்று என்னிடம் வந்து, வேதனைகளைச் சொல்லித் தீர்த்துக்கொண்டான். மறு நாளைக்கே கால் கடுதாசையும் நீட்டிவிட்டு, நான் வரும்போது என்னேடு ஊருக்குக் கிளம்பி வந்திட்டான். அன்னிக்கு முடிவுகட்டினேன், இந்தக் காக்கிச் சட்டை போடக்கூடாதுன்னு.

அந்தப் பையன் யார் தெரியுமா? நம்ப கம்பவுண்டர் ஜீவரத்தினந்தான்.''

''நம்ப கம்பவுண்டரா! ஜீவரத்தினமா!''

''ஆமாம்.''

''அவரும் சோடைதான்னு சொல்லுங்க.''

''ஏன்?''

''இல்லே. இவ்வளவு துடியாயிருந்தவரா மாரியப்ப பிள்ளையை அறஞ்சு பணத்தை வாங்காம இருக்கார், இன்னமும்?''

''பார்வதி, ஜீவரத்தினத்தை மருந்து கலக்கிற வேலைக்குத்தான் வச்சிருக்கறேன். கணக்கும் நிலுவையும் என் வேலே.''

''உங்க அதிருஷ்டத்தை யாராவது சரிப்படுத்திடப் போறுங்களேன்னு பயமாக்கும் உங்களுக்கு!''

''மாரியப்பனை ஒரு கோடியாகத்தானே காட்டினேன்? நம்ம அதிருஷ்டம் மாரியப்பனுக்கு அந்தப் புத்தியைக் கொடுத்திருக்கறப்போ, ஜீவரத்தினமா அதை மாற்றிவிட முடியும்? அப்புறந்தான் நான் சறுக்காமல் ஏறியிருக்கக் கூடாதா? நானும், பெரிய டாக்டர் வேலேக்கெல்லாம் எழுதிப் போட்டேன். ஆனு என் அதிருஷ்டம் எனக்கு முந்தியே ரெயில் ஏறிப் போக ஆரம்பிச்சுது. வைகுண்டநாதருக்கு என்னை விட இஷ்டமில்லேன்னு தெரிஞ்சுக் கிட்டேன். இந்த ஊர்தான், இந்த வீடுதான் நமக்குச் சரின்னு தங்கிப்பிட்டேன். பேப்பரைப் பார்க்கறபோது கொஞ்சம் நப்பாசை தட்டும், அடிக்கடி. ஆனு ஓர் ஆச்சரியம் பாரு. எந்த வேலேக்கும் நம்மைவிட ஒண்ணு ரெண்டு வயசு குறைச்சலாகவே கேட்பாங்க எல்லோரும். இந்தப் பய எங்கேயாவது அப்ளிகேஷன் போட்டுறப் போரு ஞேன்னு பயந்துக்கிட்டே விளம்பரம் கொடுத்தாப்போலத்

தோணும். ஆச்சுடாப்பா, நானும் நாளைக் கடத்திப்பிட்டேன். இன்னமே இந்த நப்பாசையே வராது. முப்பத்தஞ்சு இல்லாட்டி, நாற்பது வயசுக்கு மேலே ஒருத்தருமே வாண்டாமாம் இப்ப'' என்று இடி இடிக்கிறாற்போலச் சிரித்தார் டாக்டர். அவர் முகம் மலர்ந்துவிட்டது.

பார்வதி, ''அது சரி, மாரியப்பனை ஒரு கோடியாய்க் காட்டினேன்னு சொன்னீங்களே. வேற ஏதாவது வர வேண்டியது இருக்கா!'' என்றாள்.

''இன்கம் டாக்ஸ்காரன் மாதிரி கணக்குக் கேக்கிறியே. கல்யாணம் ஆறத்துக்கு முந்தியே இப்படிக் கணக்குக் கேக்கக் கிளம்பிட்டா, அப்பறம் நான் எங்கே போறது! பேசாம, கல்யாணப் பெண்ணு, லக்ஷணமா வெட்கப்பட்டுக்கிட்டு இருப்பியா? அதோ பாரு, அந்தச் சேப்பு நோட்டு முழுக்க, வராத கடன் எல்லாம் எழுதி வச்சிருக்கேன். பத்துப் பதினஞ்சுன்னு வராத கேசு ஐந்நூறு இருக்கும். சேர்மன் மாரியப்பபிள்ளைக்கு அடுத்தாப்பலே பாரு; இருக்கா? எவ்வளவு?''

''நாலாயிரம்.''

''விச்வலிங்கமையர்தானே?''

''ஆமாம்.''

''பத்திரிகை நடத்தப் போறேன்னு நாலாயிரம் கைமாத்துக் கேட்டாரு; கொடுத்திருக்கேன். அதுதான் நல்ல புள்ளி.''

''கைமாத்தாவா!''

''கைமாத்துத்தான்.''

''பத்திரம் கித்திரம் கிடையாதா?''

"இந்தா, சும்மா இரேன். ரொம்ப அவசரம்னு கேட்டாரு. கொடுத்தேன். ஆறு வருஷமாச்சு. நான் பட்டணம் போறபோதெல்லாம் அவரைப்போய்ப் பார்க்க ஒழியறதில்லே. போன வருஷம் போனபோது நேரம் இருந்திச்சு. போனேன். ஆபீஸ்கிட்டப் போறப்போ, பணத்துக்கு வந்திருக்கானோன்னு பயந்துக்கப் போறாரேன்னு திரும்பிட்டேன்."

"நீங்க பயப்படலியாக்கும்!"

"கேளேன். ரெண்டு மாசம் முந்தி, பேச்சு வாக்கிலே, நீங்க ஒரு கார் வாங்கப்படாதான்னு கேட்டியா? எனக்கும் அது சரீன்னுதான் பட்டுது. போன வாரம் ஜீவரத்தினம் பட்டணம் போயிட்டு வந்தான் பாரு. அப்ப ஒரு வார்த்தை கேளுடாப்பான்னு சொல்லியிருந்தேன். போய்க் கேட்டானும். 'டாக்டர் பணம் பத்திரமா இருக்குன்னு சொல்லு. என் பிராணன் போறதுக்குள்ள நான் கொடுத்திடப் போறேன்'னு சொன்னாராம்" என்று டாக்டர் இடிச்சிரிப்புச் சிரித்துக்கொண்டே, 'அவரு தீர்க்காயுசா இருக்கட்டும். காரில்லாமே காலா ஒடிஞ்சு போச்சு! எப்படியாவது பத்திரிகை நடந்தாச் சரி" என்று முடித்து, மூச்சுவிட்டார். மறுபடியும் சிரித்தார். பார்வதிக்கு அமிருத பானம் செய்கிறமாதிரி இருந்தது அந்தச் சிரிப்பு.

"அந்த நோட்டுத்தான் உனக்கு ஸ்ரீதனம். நீ எடுத்துக்க."

"நீங்கள் எனக்கு ஸ்ரீதனம் கொடுக்க வாண்டாம். நான் உங்களைத்தான் கல்யாணம் பண்ணிக்கப் போறேன். இந்தச் சேப்பு நோட்டையோ உங்க அதிஷ்ருடத்தையோ கல்யாணம் பண்ணிக்க வரலே."

"அப்படி வா வழிக்கு! அப்ப நிச்சயமா என்னைத் தான் கல்யாணம் பண்ணிக்கப் போறேன்னு முடிவு பண் ணிப்பட்டியா?"

பார்வதி, நாணத்தால் தலை குனிந்து, ஸ்டெத்தாஸ் கோப்போடு விளையாடிக்கொண் டிருந்தாள்.

"என்னமோ பிரசங்கம் பண்ணிவிட்டேன்னு நெனச் சுக்காதே. ஏதுக்குச் சொல்ல வந்தேன்னு, முன்னுக்கு வரதுங்கறது சில ஆட்களுக்குத்தான் முடியும். மாரியப்பன் மாதிரி, தானே கொட்டு மேளம் கொட்டிக்கணும். இல் லாட்டி இன்னொருத்தரை விட்டு, இவரு இந்திரன் சந்தி ரன்னு கொட்டச் சொல்லணும். மாரியப்பன் மாதிரி நம்மாலே செஞ்சுக்க முடியாது. எங்க அண்ணரும் எனக் காகக் கொட்டமாட்டேன்னிட்டாரு. நான் சொல்றது சரிங்கறதுக்குச் சாட்சி பாரு. கோயில்லே கொட்டுமேளம் கொட்டுது; அர்த்த ஜாமக் கொட்டு மேளம். நம்மைப் படைச்ச பெருமாளுக்கே கொட்டு மேளம் கொட்ட வேண்டியிருக்கு. இல்லாட்டி அவரு காலமே எளுந்திருக் கறதும் தூங்கப் போறதும் யாருக்குத் தெரியும்? நாம் பாட்டுக்குத் தூங்கிக்கிட்டே கிடப்போம். கொட்டு மேளம் கொட்டிணுத்தான் ஜயிக்கலாம். ஜயிச்சாலும் கொட்டு மேளம் கொட்டலாம்."

"அப்பன்னு, நீங்க தோல்வி யடைஞ்சவரா?"

"நான் இப்ப அந்த மாதிரியா பேசறேன்? கொட்டு மேளம், ஆண்டவனுக்குத்தான் வேணும். எனக்கு வேண் டியதில்லே; நான் அவரைவிட உசத்தி! தெரியுமா?"

டாக்டர், அகந்தையே உருக்கொண்டு ஓங்கி நின்ருர். உலகத்தின் சிறுமையெல்லாம் அவர் காலடியில் கிடந்தது. பார்வதி, அவரையே பார்த்துக்கொண்டு — விசுவரூபம்

எடுத்து நின்ற அவருடைய வெற்றியைப் பார்த்துக் கொண்டு நின்றாள். அர்த்தஜாமக் கொட்டு மேளம் திடீ ரென்று ஓய்ந்தபோதுதான் அவள் விழித்துக்கொண்டு, "டாக்டர் நான் உங்களுக்குத் தகுதியாளவன்தானா!" என்று தழுதழுத்தாள்.

"சீ சீ பைத்தியம்! இந்தப் பொம்மனாட்டித் தனந் தானே வாணும்னு சொல்றேன்!" என்று டாக்டர் அவள் முகத்தைத் தட்டிக்கொடுத்தார்.

டாக்டருக்கு அன்று இரவு தூக்கம் பிடிக்கவில்லை. உடலிலும் அயர்வு இல்லை. எழுச்சிகொண்டு, மொட்டை மாடிக்குப் போய், அங்கும் இங்கும் அலைந்துகொண் டிருந்தார். வராத கடன், சறுக்கல்கள், கிட்டாத வாழ்வு —எல்லாத் தோல்விகளும் திரண்டு வந்து, வெற்றியாகவே காட்சி யளித்தன. அண்ணியிடம் போய், 'அண்ணி, நான் பைத்தியக்காரன். குழந்தை மாதிரி உளறிவிட் டேன்' என்று மன்னிப்புக் கேட்க வேண்டும்போல் இருந் தது. விசுவலிங்க ஐயரிடம் போய், 'உங்களுக்கு எவ்வளவு பணம் வேண்டுமானாலும் தருகிறேன். கவலைப்படாதீங்க' என்று சொல்ல வேண்டும்போல் தோன்றிற்று. நிறைவும் திருப்தியும் நக்ஷத்திரங்களைப்போல அவருடைய நெஞ்சு வெளியை நிறைத்துக்கொண் டிருந்தன. அவர் நெஞ்சு பொங்கி வழிந்தது. 'எடுத்த காரியம் யாவினும் வெற்றி, விடுத்த வாய்மொழிக் கெங்கணும் வெற்றி!' என்று பிலகரி ராகத்தில் வீர ரசத்துடன் பாடிக்கொண் டிருந்தார்.

அவர் ராகத்திற்குக் கீழ்ப்படிந்து பொழுதும் புலர்ந்து விட்டது. சற்றுமுன், கறுத்து, மங்கி நின்ற கருமேகத் துண்டுகள், அவருடைய தோல்வி, வெற்றியானதுபோல, கதிரொளி பட்டுத் தகதகவென்று தங்கமாகக் கனிந்தன.

*   *   *

கல்யாணப் பதிவு ஆபீஸை விட்டு, வெளியே வரும் போது டாக்டருக்குக் கொஞ்சம் மனசு சிரமமாகத்தான் இருந்தது. கனிந்த குரலில் சொன்னார்: "பார்வதி, ஆயு ளிலேயே கல்யாணம் முக்கியமான கட்டம். அதுக்குக் கூடக் கொட்டுமேளம் இல்லாமல் போயிடிச்சு பாத்தியா!"

பார்வதி அவர் முகத்தைப் பார்த்தாள்.

"அந்தக் கல்யாணத்தைக்கூடக் கொட்டுமேளம் இல்லாமல், நடத்திவிட்டோம் என்று நான் அகம்பாவப் பட்டுக்கிட்டிருக்கேன். நீங்க அங்கலாய்க்கிறீங்க!"

"சபாஷ்!" என்றார் டாக்டர்.

"என்ன சபாஷ்! தோத்துப்போன பேச்சுப் பேசி விட்டுச் சபாஷாம்!"

"நானா தோத்துப் போயிட்டேன்? பார்வதி? இதைப் பாரு; மாரியப்பனுக்குச் சேர்மனாயிடுச்சாம். இன்னிக்கி அதுக்காக மறுபடியும் ஊர்வலம் விடப்போறாங்களாம். என்ன செய்யறேன் பாரு!"

"என்ன செய்யப் போறீங்களாம்?"

"பாரேன்."

இரவு, சேர்மன் மாரியப்பபிள்ளை ஊர்வலம் போகும் போது 'தர்ம வைத்தியசாலை' என்று டாக்டர் வீட்டு வாசலில் வெளிச்சப் பலகை தொங்குவதைப் பார்த்து, பிள்ளைவாள் யோசனையில் ஆழ்ந்துவிட்டார்.

மொட்டை மாடியில், டாக்டரும் பார்வதியும் அந்த முகத்தைப் பார்த்துக்கொண்டுதான் இருந்தார்கள்.

"மாரியப்பன் யோசிக்கிறான் பாத்தியா?"

"டாக்டர் ஐயா பிழைக்கத் தெரியாதவர்னு யோசிக் கிறாரு!" என்று பார்வதி சிரித்தாள்.

---